சில பிரச்னைகள்; சில வார்த்தைகள்!

# மனப் புற்றுநோய்

ஒரு வாசகி ரொம்ப வருத்தமாக சில மாதங்களுக்கு முன் கடிதம் எழுதியிருந்தார். அவருடைய மகளின் பள்ளியில் ஆண்டு விழா. பல்வேறு விதமான போட்டிகள். இவர் தன் மகளுக்கு ஒரு பாரதியார் பாடலை அருமையாகச் சொல்லிக் கொடுத்து அனுப்பினாராம். குழந்தை சோர்ந்து போய் வந்தாளாம்.

"போம்மா. நீ சுத்த கர்நாடகம். எனக்கு என்ன பாட்டு சொல்லிக் கொடுத்து அனுப்பினே. எனக்கு ரொம்ப 'ஷேமா' ஆயிடிச்சு. ஃபர்ஸ்ட் ப்ரைஸ் முக்காலா முக்காபலா பாட்டுக்குப் போச்சு. எல்லாருமே சினிமா பாட்டு பாடிக்கிட்டே டான்ஸ் ஆடினாங்க. நான்தான் ரொம்ப 'கண்ட்ரீ'யா இருந்தேன்..." என்று அழு தாளாம்.

பாரதியார் பாடல் பாடுவது ரொம்ப வெட்கக்கேடான விஷயம் என்பது அந்தப் பிஞ்சு மனத்தில் ரொம்ப ஆழமாகப் பதிந்துபோய் விட்டது! இங்கே என்று இல்லை, இன்றைக்கு எத்தனையோ பள்ளிகளில், கல்லூரிகளில் ஆண்டு விழாக்கள், இன்னும் எத்தனையோ விழாக்கள். அதேபோல மகளிர் மன்றங்களிலேயும் விழாக்கள் நடத்தப்படுகின்றன. அங்கே குழந்தைகளை மேடையேற்றிப் பாட வைக்கிறார்கள். அங்கே அநேகமாக எல்லா இடங்களிலும் 'இதே'தான் அரங்கேறிக் கொண்டு இருக்கிறது.

அப்படியென்றால் என்ன ஒரு துப்பட்டாவைப் போர்த்திக் கொண்டு 'மடிசஞ்சி'யாக வாழ வேண்டும் என்று நினைக்கிறீர்களா? நாகரிகத்தில் ஒரு நூற்றாண்டு பின்னாடி போக விரும்புகிறீர்களா என்று கேட்கலாம். அப்படியல்ல அது.

நம் குழந்தைகளை, குறிப்பாக பெண் குழந்தைகளை நாமே மேடையேற்றி மார்பையும், இடுப்பையும் ஆட்டி கொச்சையாகப் பாட வைத்து ரசிப்பது எவ்வளவு சரி என்றுதான் கேட்கிறேன். பாடல்கள் எல்லாம் ஆபாசமாக இருக்கின்றன என்று கதறிக் கொண்டு இருக்கும் இந்த நேரத்தில் நடனக் கலாச்சாரமும் சேர்ந்து இன்று இரட்டைக் குழல் துப்பாக்கியாக நம்மைக் கண்ணுக்குத் தெரியாமல் கொன்று கொண்டு இருக்கிறதே, தெரியவில்லையா என்றுதான் கேட்கிறேன்.

கொஞ்ச காலம் முன்பு வரை பள்ளி விழாக்களிலே வந்தே மாதரம் எனவும், நாட்டுப்பற்று கொண்ட தலைவர்களாக வேஷமிட்டு, தேச அபிமானம் எனவும் போதித்துக் கொண்டிருந்தார்கள். இன்று 'சோனி கே பீச்சே' என்ன என ஆராய்ந்து கொண்டு இருக்கிறார்கள். இதை பெற்றோர்களாகிய நாம் தான் வளர்த்துக் கொண்டு இருக்கிறோம்.

ஒரு கூட்டம் கூடும் நேரத்தில் அங்கே கூடியிருப்பவர்கள் மனதிலே நல்ல எண்ணங்களை விதைக்க வேண்டும். அதை விட்டுவிட்டு நாமே பிஞ்சுக் குழந்தைகளை விட்டு இடையை நெளித்து ஆட்ட விட்டுவிட்டு பிறகு, 'ஐயோ என் குழந்தை கெட்டுப் போச்சு' என்று புலம்புவதாலோ, 'ஐயோ அந்தப் பையன் 'லவ் லெட்டர்' எழுதிட்டான்'னு அழுவதாலேயோ என்ன பிரயோஜனம்?

புற்றுநோய் ஓரிடத்தில் இருந்து இன்னோர் இடத்திற்குத் தாவுவது போல இந்த 'மனப் புற்று நோய்' வெகு வேகமாகப் பரவி வருவதைப் பார்க்கும்போது திகைக்க வேண்டியதாக இருக்கிறது. எய்ட்ஸைப் பற்றியும், கேன்சரைப் பற்றியும் புலம்புகிறோமே. அதை விடக் கொடியது இந்த மனப் புற்றுநோய். நம் கலாசார வேர்களை வேகமாக அரித்துக் கொண்டு வருகிறது. பெற்றோர்களே இதற்குப் பேராதரவாக இருப்பதைப் பார்க்கும்போது அதிர்ச்சியாக இருக்கிறது.

இந்த 'ஆபாச அலை' ஆரம்பித்த நேரத்தில் அதிர்ச்சியாக, திகைப்பாக இருந்தது. திரைப்



மஞ்சுளா ரமேஷ்

படங்களிலும், டீ.வி.க்களிலும் இவர்களின் வாயிலிருந்து வந்த அசிங்கமான வார்த்தைகளும், கேவலமான அசைவுகளும் ஸ்தம்பிக்க வைத்தது. இப்போது அவற்றையே திரும்பத் திரும்பப் பார்த்து 'ஓரளவு' நமக்கு சகஜமாகிப் போனது. அடுத்த கட்டமாக அவற்றைப் பார்த்து நம் குழந்தைகளும் ஆட ஆரம்பித்து விட்டார்கள். அதற்கு அடுத்து கடபோக கட வைபவத்தில் நாமே அவர்களுக்குப் பயிற்சி கொடுத்து விழாக்களிலே ஆட வைக்கிறோம். வரும் நடுவர்கள் மகிழ்ந்து போய் பரிசுக் கோப்பையைத் தூக்கிக் கொடுக்கிறார்கள்!

பள்ளிக் குழந்தைகளிடம் மனமேன்மையை வளர்க்க வேண்டியது போக, உடலைப் பற்றிய அதீத உணர்வுகளை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம். இது எங்கே போய் முடியப் போகிறது? விளைவுகளைப் பற்றி யோசிக்காமல் இன்று கேளிக்கைக்காக இப்படிப் படுகுழியில் விழுந்து கொண்டு இருக்கிறோமே, இது உங்களுக்கெல்லாம் தெரியவில்லையா?

பொழுதுபோக்கு வேண்டும். கொஞ்சம் ரிலாக்ஸ்டாக இருக்க வேண்டும். சிரித்து மகிழ வேண்டும். 'லைட் என்டர்டெய்ன்மென்ட்' வேண்டும். எல்லாம் புரிகிறது. அது எந்த அளவிற்கு? 'லக்ஷ்மண் ரேகை'யாக அதற்கு ஒரு எல்லைக் கோடு வேண்டுமே. அதைத் தாண்டி நம் குழந்தைச் சிறைகளை வெகு வேகமாக நாமே அழைத்துப் போய்க் கொண்டு இருக்கிறோமே. அவர்களுக்குக் கேசட்டைப் போட்டு மார்பை ஆட்ட நாம் ப்ராக்டிஸ் கொடுத்துக் கொண்டு இருக்கிறோமே! சகோதரிகளே, ஒரு நிமிடம் சிந்தித்துப் பாருங்கள்.

அதேபோல சுஷ்மிதா சென்னும், ஐஸ்வர்யா ராயும் உலக அழகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் பட்டார்கள். மூலைக்கு மூலை, தெருவுக்குத் தெரு அழகிப் போட்டிகள் நடத்திக் கொண்டு இருக்கிறார்கள். முன்பு அழகிப் போட்டிகளிலே மாடல்கள் கலந்து கொள்வார்கள். பொது ஜனங்கள் 'இது ஏதோ நமக்கு எட்டாத ஒன்று, சும்மா பார்ப்போமே' என பார்த்துக் கொண்டு இருந்தார்கள். இப்போது பட்டி தொட்டிகளிலே நடக்கும் அழகுப் போட்டிகளிலே கலந்து கொள்வது நம் தெருப் பெண்கள். கால்கள் இடையேயும், இடுப்பு அருகேயும் 'கட்' செய்து தெரியும்படி உடையணிந்து கொண்டு முன்பு சொன்னது போல உடலை ஆட்டி நடுவர்கள் முன் நிற்கிறார்கள்! கீழே இருந்து தாய் புளகாங்கிதம் அடைகிறாள்.

இதிலே ஒரு பிரபலமான பெண் நடுவர் ஒரு அழகிப் போட்டியிலே கேட்டார், அன்றைக்கு வந்திருந்த மற்றொரு பிரபலமான ஆண் நடுவருடன் 'டேட்டிங்' கொடுத்தால் போவாயா?' இது கேள்வி. அந்தப் பெண் சொன்னாள், 'அவரோடு நான் டின்னரும், ப்ரேக்ஃபாஸ்ட்டும் சாப்பிடுவேன்' என்று! நடுவர்கள் அவளுடைய சாதுர்யமான பதிலைக் கேட்டு மகிழ்ந்து போய் பரிசுக்குரியவளாகத் தேர்ந்தெடுத்தார்கள்.

போதுமா நம் பெருமை! நம் பெண் முன்னேற்றம்!!

சகோதரிகளே வேண்டாம் இந்தப் பெருமைகள். நாம் பயங்கரமான பின்விளைவுகளை யோசிக்காமல் வெகுவேகமாக நம் குழந்தைகளை இழுத்துக் கொண்டு படுகுழியை நோக்கிப் போய்க் கொண்டு இருக்கிறோம்.

பிறகு இதற்கெல்லாம் சேர்த்து வைத்துப் பலன் வரும் போது அழிந்து போன சமுதாயம் தான் மிஞ்சும். 'செக்ஸ்' மட்டும்தான் வாழ்க்கை என நாமே நம் அடுத்த சந்ததியினருக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருப்பது சரிதானா? நம் முன்னோர்கள் பட்டபாடுபட்டு சுதந்திரத்தையும், நல்லெண்ணத்தையும் நம் கையில் கொடுத்து விட்டுப் போனார்கள். நாம் நம் அடுத்த சந்ததியினருக்கு 'செக்ஸ் கல்வி'யைக் கொடுத்துவிட்டுப் போகிறோம். இது தான் நம் பெருமை.

---

அன்பார்ந்த வாசகர்களே,

பத்திரிகை காகிதத்தின் விலை கடந்த ஐந்து மாதங்களில் மூன்று முறை உயர்ந்துவிட்டது. இந்த விலை உயர்வு கிட்டத்தட்ட 30 சதவிகிதம் வரை உள்ளது. இதேபோல் அட்டைப்படம் அடிப்பதற்கான மாப்லிதோ பேப்பர் விலையும் கடந்த ஏழெட்டு மாதங்களில் 30 சதவிகிதம் வரை உயர்ந்து விட்டது. நமது ஸ்தாபனத்தினால் இந்த அபரிமிதமான விலை உயர்வை இனியும் தாங்க முடியாத நிலையில் இருப்பதால் வாசகர்களின் ஆதரவை நாடி, வருகிற ஏப்ரல் 95 இதழிலிருந்து மங்கையர் மலர் விலையை ரூ. 9/- ஆக உயர்த்த முடிவு செய்துள்ளோம். இந்த விலை உயர்வை வாசகர்கள் ஏற்றுக் கொண்டு தொடர்ந்து மங்கையர் மலருக்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

மானேஜர்,
மங்கையர் மலர்

நாலு நாளாக ரொம்பத்தான் தாங்க வில்லை நாகிக்கு. கிட்டத்தட்ட ஆறு மாசம் ஆச்சு. பாகிகிட்டேயிருந்து விவரமா ஒரு பதிலும் வரலை. என்னதான் வேலை ஜாஸ் தின்னாலும் இப்படியா. நட்பின் மகிமை தெரியாத மரம். வாழ்க்கையில் லாரல் ஹார்டி போல் கோப்பெருஞ்சோழன் பிசி ராந்தையார் போல், அக்பர் பீர்பால் போல். கிருஷ்ணதேவராயர், தெனாலிராமன் போல். இன்னும் எத்தனை எத்தனையோ நண்பர்கள் சாதித்தைப் போல் நாமும் சாதிக்க வேண்டும் என லட்சத்து எட்டு முறை போதித்தாயிற்று. நம் இந்திய நாட்டு விளையாட்டுகளை அமெ ரிக்காவில் நடத்தலாம் என்று பேசி ஹில்லரி கிளின்டன் கூட வருகிறேன் என்று ஒப்புக் கொண்டாயிற்று. கிணற்றில் போட்ட கல் மாதிரி இருந்தால் என்ன அர்த்தம் என விவரமாய் மனத்தில் சபித்தது பாகியின் நுண் ணறிவினை எட்டியிருக்க வேண்டும். டெலி போனில் அழைத்தான்.

"என்ன, எப்படியிருக்கே?" பாகியின் குரல் கேட்டதும் நாகியின் மனம் பனியாய் உருகி யது.

"நான் காக போனாலும் பரவாயில் லைன்னு நேரா கிளம்பி வந்துடலாமான்னு பார்த்தேன். ஆனாலும் உனக்கு நெஞ்சழுத் தம். நான் தவிச்சுப் போயிட்டேன்."

"இதையெல்லாம் லெட்டரில் திட்டு. போனில் திட்டினா உன் மாமனாரா பில் பணம் கொடுப்பார்? விஷயத்தைக் கேள். நீ பாட்டுக்கு இந்திய கிராமியப் பெண்கள் விளையாட்டை அமெரிக்காவில் நடத்த ணும்னு சொல்லிட்டே. அதற்கான ஏற்பாடு களை முடிப்பது பிரம்ம பிரயத்தனம் ஆயி டுத்து. ஒருவழியா பாண்டி, ஏழு கல் ஆட்டம், பல்லாங்குழி, கண்ணாமூச்சி போன்ற



# அமெரிக்காவில்

ஆட்டங்களுக்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டேன். இனி போட்டி, நேர்முகத் தேர்வு இவைதான் பாக்கி. நீ அங்கிருந்து இவர்களை அழைத்து வர, தங்க, டிக்கெட் போன்றவற் றிற்கான ஏற்பாடுகளைச் செய். அப்படியே இந்த பில்லையெல்லாம் ஸ்போர்ட்ஸ் அக் கௌண்டில் சேர்த்து விடு. என்ன, வைச்சு டட்டுமா?"

போனை கையில் பிடித்தபடி மெய்மறந்த நிலையில் நாகியைக் கண்ட கணவர் ஜம்பு லிங்கத்திற்கு மனம் திக்கிட்டது. ஆறு மாத மாய் இருந்த அமைதிக்கு அபாய அழைப்பு என்பதினை உள் மனம் உணர்த்தியது. பூனை போல் தப்ப நினைத்த அவரை நாகியின் குரல் தடுத்து நிறுத்தியது.

"என்னங்க, இன்னிக்கு பாகி போன் பண் ணினா. நீங்க உடனடியா பத்து நாள் ஆபீ ஸுக்கு லீவு போடுங்க."

ஜம்புலிங்கம் மௌனமாய்ப் பார்த்தார். ஏன், எதற்கு என்றெல்லாம் அவருக்குக் கேட்டு வழக்கமில்லை.

"இடிச்ச புளி மாதிரி நிக்காதீங்க. பாண்டி,



# பல்லாங்குழி போட்டி

பல்லாங்குழி போன்ற விளையாட்டுகளுக்கு ஸ்பான்சர்ஸ் பிடிக்கணும். விளம்பரம் கொடுக்கணும். இதெல்லாம் தாய்நாட்டுக்கான சேவை. சீக்கிரம் ஆகிற வேலையைப் பாருங்க. பனியன், ஷூ கம்பெனிங்களைப் பிடிங்க."

நாகி கையும் காலும் எண்ணமும் பரபரத்து சோர்ந்து விடுவதும் அவளின் கணவர் கம்பெனி கம்பெனியாக ஏறி அலைவதும் அன்று முதல் ஆரம்பித்தது.

"வாட், பாண்டி., வாட் இஸ் பாண்டி.? விவரமாய்ச் சொல்லுங்கள். ரொம்ப இண்ட்ரஸ்டிங்காக இருக்கு" என ஷிபான் - பிரபல ஷூ கம்பெனி நிறுவனம் ஆச்சரியமுடன் வினவினார்.

நாகியின் கணவர் ஒரு காலில் நொண்டி அடித்துக் கட்டம் போட்டு, இல்லி போட்டு விளையாடிக் காண்பிக்க ஷிபான் சொக்கி விட்டார். "எல்லாம் சரி. இதில் ஷூ விளம்

**கமலி ஸ்ரீபால்**



# ரூ 50,000/- செலுத்தி ஃபிளாட்டை பெறுவீர்

**நீங்கள் ஃபிளாட்டை ரூ 2/- லட்சத்திலிருந்து வாங்கலாம்**

நாங்கள் உங்கள் தகுதிக்கேற்ப ரூ 1.5 லட்சம் வரை கடனுதவி ஏற்பாடு செய்கிறோம்

வாடகைக்கு பதிலாக கடன் தவணையை செலுத்துவதின் மூலம் ஃபிளாட் உங்களுடையதாக ஆகும்.

ஒன்று / இரண்டு பெட்ரூம் வசதியுடன் கூடிய ஃபிளாட்டுகள்!

ஜாபர்கான்பேட்டை

போரூர்

ஆண்டாள் நகர் (ஆதம்பாக்கம்)

கொடுங்கையூர்
(i) வெங்கடேஸ்வரா காலனி
(ii) கண்ணதாசன் நகர்

மேற்கு அண்ணா நகர்

குறிப்பிட்ட இடங்களில் டிஷ் ஆண்டெனா இலவச மினிபஸ், லிப்ட் மற்றும் குழந்தைகள் விளையாட்டு மைதான வசதியும் செய்து தரப்படும்.

*உடனே முடிவு செய்து வாங்கிடுவீர்!*

புக்கிங் & இதர விபரங்களுக்கு



## சதர்ன் ஷெல்ட்டர்ஸ் லிமிடெட்

9. பிஷப் வாலர்ஸ் அவின்யூ (கிழக்கு)
(நியு உட்லெண்ட்ஸ் ஹோட்டல் எதிரில் உள்ள சாலை)
மைலாப்பூர், சென்னை-600 004.
தொலைபேசி : 4992226 / 4992426 / 4993873
மற்றும் 48, தெற்கு போக் ரோடு, தி.நகர்,
சென்னை-600 017. தொலைபேசி : 4340416 / 4340590

ஞாயிறு : காலை 10.30 மணி முதல் பகல் 2.30 மணி வரை

**SSL-SETTING STANDARDS FOR LIVING**

பரத்தினை எப்படிப் புகுத்துவது... ம்ம்...ம், சரி... புது வகையான கான்வாஸ் ஷூ வகையினை அறிமுகப்படுத்தும் விளம்பரமாக இதனை ஸ்பான்சர் செய்கிறேன். சில வகை ஷூக்களைத் தருகிறேன். அதனைப் போட்டுக் கொண்டு அவர்கள் விளையாடுவது போல் சில போட்டோக்களை எடுத்து எனக்கு அனுப்புங்கள். போஸ்டர்ஸ், அட்வர்டைஸ்மெண்ட் போன்றவை கொடுக்க வசதியாய் இருக்கும்.''

ஏழு கல் ஆட்டத்திற்கு பனியன், டீ-ஷர்ட் கம்பெனி ஸ்பான்சர் செய்ய முன்வந்தது. வயதான பெண்மணிகள் - அதுவும் இந்தியப் பெண்மணிகள் போட்ட படங்கள் கொண்ட பனியன்கள், டீ-ஷர்ட்கள் உலக மார்க்கெட்டையே ஒரு கலக்கு கலக்கிவிடும் என கம்பெனி அதிபர் டாக்ராய் நம்பினார். இந்தியாவில் பாகிக்கும் அவள் கணவர் ராமதாஸூக்கும், பாகியின் மாமியாருக்கும் மூச்சுவிட நேரமில்லை. பாண்டி விளையாட்டிற்கான இனம் பெண்கள், பல்லாங்குழி ஆட்டத்திற்கு வயதான (சுமார் 70 வயது முதல்) பெண்கள் வெளிநாட்டில் கலந்து கொள்ளும் விளையாட்டுப் போட்டிகள் என பத்திரிகையில் அறிவித்த நாள் முதலாய் வீட்டில் எள் போட இடமில்லை. எத்தனை போன்கள், பல பெரிய பிரமுகர்களின் சிபாரிசுக் கடிதங்கள் என ஆபீஸ் ரூம் (பாகி வீட்டு ஹால்) நிரம்பி வழிந்தது.

விளம்பரத்தின் பதிலாக வயது, விளையாட்டில் இருக்கும் திறமை, இவற்றுடன் போட்டோ போன்றவற்றினை இணைத்துக் கடிதங்கள் வந்து கொட்டின. இத்துடன் இணைப்புக் குறிப்பாகப் பல பாட்டிமார்கள் (மன்னிக்கவும் - வயதான பெண்கள்) தங்களை மருமகள் மிகவும் கொடுமைப்படுத்துவதாகவும் அவர்களிடம் தன் கௌரவம், பெருமையை நிலைநாட்டவாவது தன்னைத் தேர்வு செய்யும்படியும் கெஞ்சி எழுதியிருந்தனர். ஒரு மாப்பிள்ளை தனது மாமியாரைக் குறித்து எழுதியிருந்த கடிதம் மிகவும் உருக்கமாய் இருந்தது. தன் மாமியாரை எப்படியாவது இரண்டு மாதம் வெளிநாட்டில் வைத்துக் கொண்டால் ரூபாய் இரண்டு லட்சம் நன்கொடையாய் அளிப்பதாய் எழுதியிருந்தார். பாகி சற்றும் தன் நேர்மையிலிருந்து மாறவில்லை. தகுதியின் அடிப்படையிலேயே பதில்கள் அனுப்பி நேர்முகத் தேர்வினை நடத்த நாள் குறித்தாள்.

குறிப்பிட்ட நாளும் வந்தது. பிரபல விளையாட்டு மைதானத்தில் தாவணிகளும், புடைவைகளும் காலை முதல் ஆக்ரமித்தன.

தக்க போலீஸ் பாதுகாப்புடன் பாகியின் கணவர், பாகியின் மாமியார் வந்தனர். நன்கு பயிற்சி பெற்ற விளையாட்டு ஆசிரியைகள் விளையாட்டினை நடத்தினர். ஏழு கல் ஆட்டத்திற்குத்தான் சரியான போட்டி. பல வயதான பெண்களுக்கு அருகில் அவர்களின் மகன், மருமகள், மருமகன், மகள், பேரன், பேத்திகள் நின்று தலைக்குக் குடை பிடிப்பதும், முகத்தைத் துடைத்துவிடுவதும், ஹார்லிக்ஸ் இளநீர் போன்றவை பருக அளிப்பதும், கை,கால்களைப் பிடித்து விடுவதுமாய் ஏகப்பட்ட உபசாரங்கள்.

காமு பாட்டிக்கு 70 வயதிலும் கழுகுக் கண். அந்தக் காலத்து உடம்பு. கல்லை அள்ளி வீசுவதும், வாருவதும், அதற்கேற்றாற் போல் தலை அசைவதும் கண்கொள்ளாக் காட்சி. இந்த வயதில் தன் கணவரை விட்டு வெளிநாடு போகிறோமே என்ற மனவருத்தமும் இருந்தது. மருமகள் விடவில்லை.

“நீங்க போயிட்டு வாங்கம்மா. நான் அப்பாவைப் பார்த்துக்கறேன். வரும்போது இரண்டு தோலா முத்தும், 4 அவுன்ஸ் தங்கமும் கொண்டு வர முடியுமான்னு பாருங்கோ. நீங்க ஜெயிச்சா நான் ஜெயிச்ச மாதிரி. அப்பாவே பணத்தை என்பேரில் பிக்ஸடில் போட்டுவிடப் போறீங்க” என வெண்ணையாய் உருகினாள்.

கோமுப் பாட்டி மருமகளுக்கு இதனைக் கேட்டுப் பொறுக்கவில்லை. தன் மாமியாரிடம், “நான் அவளை மாதிரி இல்லை. பெத்த தாய்க்குச் செய்யற மாதிரி நான் உங்களுக்குச் செய்யறேன். எனக்குச் சல்லிக் காசு வேண்டாம். எல்லாம் உங்க பிள்ளை வயத்துப் பேரன், பேத்திகளுக்கே போகட்டும்” என்றாள்.

அநேக பாட்டிமார்கள் வாழ்வில் ராஜ உபசாரத்தை அனுபவித்தனர். பல்லாங்குழி ஆடிய பெண்களுக்கு அவர்களின் கணவன்மார்கள் பயபக்தியுடன் அருகில் கைகட்டி நின்றிருந்தனர். செஸ் போல் இது உலகப் புகழ் விளையாட்டாக விரைவில் மாறும் என அநேகர் கருத்துக் கூறினர். பாண்டி விளையாட்டில் பெண்கள் பம்பரமாய்ச் சுழன்றனர். அவர்களின் பெற்றோர்கள் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு பார்த்தபடி இருந்தனர். கண்ணாமூச்சி ஆட்டம் வேண்டாம் என நாகி கூறிவிட்டதால் அவ்விளையாட்டு கான்சல் ஆயிற்று.

விளையாட்டுகள் முடிந்து பெயரினை அறிவிக்கும் தறுவாயில் ‘ஸ்...ஸ்’ என்ற சப்தம் கேட்டு பாகியின் மாமியார் பின்னே திரும்பினாள். ஒரு பெண்மணி அழைப்பதைக் கண்டு அருகில் சென்றாள். அந்தப் பெண்மணி பாகி மாமியாரின் கையைப் பிடித்துக் கொண்டு, “இதைப் பாருங்க அம்மா, உங்க கையைக் காலா நினைச்சு கேட்கிறேன். கல் ஆட்டம் போட்டியில் என் மாமியாரும் என் அம்மாவும் கலந்து கொண்டுள்ளனர். எப்படியாவது என் அம்மாவைத் தேர்ந்தெடுங்கள். என் மாமியார் கிராதகி. என் நாத்தனார் சூர்ப்பனகை. என் அம்மாவைத் தேர்ந்தெடுக்காவிட்டாலும் பரவாயில்லை. என் மாமியாரைக் கண்டிப்பாய் நிராகரியுங்கள்” என கண்ணில் நீர் ததும்பப் பேசி கையோடு ஒரு பாட்டில் நிறைய மாவடு ஊறுகாயும், நூறு அரிசி அப்பளமும் அன்பளிப்பாய் அளித்தாள். பாகியின் மாமியாருக்கு இரண்டும் கொள்ளை ஆசை. இந்த ‘வீக்னஸ்’ அவளுக்கு எப்படித் தெரிய வந்தது என மனசுக்குள் ஒரே ஆச்சரியம். இருப்பினும் மனத்தில் இதற்கெல்லாம் இடம் தராமல் நிராகரித்தாள். கூடவே தன் மருமகளைப் பற்றிய மதிப்பும் உயர்ந்தது.

பாகியின் கணவர் பேயாய் வேலை செய்தார். பின் என்ன? இந்தக் குழுவுடன் பாகியும், தன் அம்மாவும் வெளிநாடு சென்றுவிட்டால், ‘அக்கடா’ என இரண்டு மாதம் பிடுங்கல் இல்லாமல் ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டு நிம்மதியாக இருக்கலாமே என்ற ஆசை நியாயம்தானே? போட்டி முடிவுகள் அறிவிக்கப்பட்டவுடன் மகிழ்ச்சியும், ஆரவாரமும் மைதானத்தை நிறைத்தது. அநேகர் அழுத கண்ணும், சிந்திய மூக்குமாய்த் திரும்பிக் கொண்டிருந்தனர். தேர்வு செய்யப்பட்டவர்களுக்கு வெளிநாட்டிலிருந்து வந்திருந்த ஷூ, பனியன் போட்டு

தேங்காய்த் துவையல் செய்யும்போது வழக்கமான முறையில் கடுகு, உளுத்தம்பருப்பு, மிளகாய் வற்றல் முதலியவற்றைத் தாளித்து நான்கைந்து சாம்பார் வெங்காயம், இரண்டு தக்காளி முதலியவற்றை வதக்கித் துவையல் அரைத்துப் பாருங்கள். பிரமாதமான ருசியுடன் இருக்கும். இதற்குத் தொட்டுக் கொள்ள தயிர்ப் பச்சடி நல்ல காம்பினேஷன்.

- உஷா நாராயணன்



# கென்ஸ் ஒன்றே போதும் பேன்களே வராது எப்போதும்



**கென்ஸ் — பேன்களின் முழுமையான எதிரி.**
**கென்ஸ், பேன்களை ஒழிக்கும். ஈறுகளை அழிக்கும்.**
மல்லிகை மணம் கமழும் எண்ணெயில்
உருவாகும் கென்ஸ், கேசத்திற்கு நறுமணம்
நல்கும். எனவே சக்தி வாய்ந்த கென்ஸைப்
பயன்படுத்தி பேன் உங்கள் குழந்தையை
பாதிக்காத வண்ணம் பேணுங்கள்.

பெரியவர்களும் உபயோகிக்கலாம்.

கேசத்திற்குத் தேவையான அளவு எடுத்துத்
தலையிலும், மயிர்கால்களிலும் நன்கு தடவி 20
நிமிடங்கள் ஊற வைக்கவும். பின்னர் தலையை
நன்கு அலசிக் குளிக்கவும். இவ்வாறு வாரம் ஒரு
முறை செய்தால் போதும். அப்புறம் பாருங்கள்
பேன்களின் எல்லையில்லாத தொல்லை இனி
இல்லவே இல்லை.

**கென்ஸ் — பேன்களை வானுலகு அனுப்பும்.**

**கென்ஸ் 15, 55 மி.லி. அளவுகளில் கிடைக்கும்.**




## கென்ஸ்




**தஞ்சாவூர் 613 007.**

Insight-3203

# TABE சிகிச்சை கிளினிக்குகள்

நம் உடலின் ஒரு சிறு பாகத்தில் காயம் பட்டாலும் சரி, அதன் இயக்கம் நின்று போனாலும் சரி, அன்றாட வாழ்க்கை ஸ்தம்பித்துப் போய்விடுகிறது. நோய்வாய்ப்பட்டாலோ நம் நிலைமை இன்னும் மோசமாகிறது. அதுவும், இளைஞர் முதியோர் என்ற பாகுபாடின்றி யாரை வேண்டுமானாலும் தாக்கக் கூடிய நோயான ஆர்த்ரிட்டீஸ் வந்துவிட்டால் கேட்கவே வேண்டாம்.

உடல் மூட்டுக்களில் வீக்கம் ஏற்பட்டு அசைவதே கஷ்டமாகிறது; வலியும் வேதனையும் தாங்க முடியாமலிருக்கிறது. ஒரு சிலருக்கு அசையவே முடியாமல் கூட போய்விடுகிறது. படுக்கையை விட்டு எழுவது, படியேறி இறங்குதல், ஒரு கோப்பையைக் கையில் பிடித்துக் கொள்ளுதல் போன்ற, தினந்தோறும் செய்யும் எளிய காரியங்களைச் செய்வது கூட பிரம்ம பிரயத்தனமாகிறது. நமது மகிழ்ச்சிக்காக வாத்தியங்கள் இசைப்பதோடு தோட்ட வேலையில் ஈடுபடுவதோ அடியோடு முடியாமல் போகிறது!

இளமைப் பருவத்தின் உச்சகட்டத்தில் - முப்பத்திரண்டாவது வயதில் - அஜய் கோஸ்வாமி என்பவருக்கு ஆர்த்ரிட்டீஸ் வந்துவிட்டது. அவர் விரும்பி வாசித்த ஆர்கன் இசைக் கருவியை அடுத்த பத்து ஆண்டுகளுக்கு அவரால் தொடக்கூட முடியவில்லை. ஆனால் இந்த நிலை, TABE சிகிச்சை குறித்த விளம்பரத்தை அவர் செய்தித்தாள்களில் பார்க்கும்வரைதான் நீடித்தது. 90 நாட்கள் அந்தச் சிகிச்சையை எடுத்துக் கொண்டபின் இசையுடன் தமது உறவைப் புதுப்பித்து மகிழ்ந்தார் அஜய் கோஸ்வாமி.

திருமதி சுசீலா தேவியின் கதை இன்னுமொரு உதாரணம்: ஒரு பாசம் மிக்க தாயாகத் தமது மகனை வளர்த்தவர், (இவர் மகன் இப்போது இஞ்சினியராகி அரசாங்கப் பணியில் இருக்கிறார்) தமது பேரக் குழந்தைகளையும் அப்படியே கொஞ்சி வளர்க்க விரும்பினார். ஆனால் ஆர்த்ரிட்டீஸ் அவருடைய இந்தக் கனவுக்கு முட்டுக்கட்டை போட்டது. அதிர்ஷ்டவசமாக, TABE கிளினிக் விளம்பரம் சுசீலா தேவியின் கண்ணில் பட்டது. அவர் வாழ்க்கையையே மாற்றியமைத்தது சிகிச்சை. இன்று டீன்-ஏஜ் பேரக் குழந்தைகளுடன் மகிழ்ச்சியாகப் பொழுது கழிக்கிறார் இவர்.

சந்திரா கிருஷ்ணமூர்த்திக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு தோட்ட வேலை. இவரை அதில் ஈடுபட விடாமல் கட்டிப் போட்டது ஆர்த்ரிட்டீஸ்தான். அசைய முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டு, 'தம் விதி இதுதான்' என்று ஏற்றுக் கொண்டுவிட்டார் சந்திரா. அப்போதுதான், TABE கிளினிக் விளம்பரத்தைப் பார்க்க நேர்ந்தது. 90 நாட்கள் சிகிச்சைக்குப் பின் பழையபடி நடமாடுகிறார் சந்திரா. தோட்டத்தைப் பார்த்துப் பார்த்து கவனிக்க முடிகிறது.

திருமதி மீனாட்சியின் வாழ்க்கையிலும் சூறாவளியாக நுழைந்தது ஆர்த்ரிட்டீஸ். குடும்பத்தை யார் உதவியுமின்றி தனியொருவராக நடத்துவதில் பெருமைகண்ட இவருக்கு வலியும் வீக்கமும் ஏற்பட்டது. வீட்டு வேலைகளைச் செய்யவே முடியாமல் போனது. பல சிகிச்சை முறைகளை மேற்கொண்டும் பயன் கிடைக்கவில்லை. இறுதியில் TABE கிளினிக் மூலம்தான் இவருக்கும் நிவாரணம் கிடைத்தது.

எண்பத்திரண்டு வயதான திருமதி ஜானகி, முதல் முறை TABE கிளினிக்குக்கு வந்து பார்த்தவுடனேயே அச்சிகிச்சையை மேற்கொள்ள முடிவு செய்துவிட்டார். டாக்டர் ரூசனைச் சந்தித்த பிறகு தமக்குத் தன்னம்பிக்கை பிறந்ததாகக் கூறினார். "அவர் மிகவும் பரிவுடனும் கவனமாகவும் நான் சொல்வதைக் கேட்டார். எனக்கு என்ன கோளாறு என்பதைப் பொறுமையுடன் விளக்கினார்; சிகிச்சை முறையை விரிவாக விவரித்தார். வலியாலும் மன உளைச்சலாலும் அவதிப்பட்டுக் கொண்டிருந்த எனக்கு அவரது அரவணைப்பும் ஈடுபாடும் ரொம்பவும் இதமாக இருந்தன."

அறுபது நாள் சிகிச்சைக்குப் பிறகு, ஜானகியின் நாள்பட்ட ஆர்த்ரிட்டீஸ் வலி குறைந்தது. தரையில் உட்காரவோ, படி ஏறவோ, ஏன்... தலைசீவக் கூட முடியாமல் இருந்த திருமதி ஜானகி இன்று சராசரி வாழ்க்கை நடத்துகிறார். மகிழ்ச்சியாக இருக்கிறார். நன்றிப் பெருக்குடன் தமது அன்றாடப் பணிகளைச் செய்து வருகிறார்.

ஒரு வயதான ஏழைப் பெண், ஓர் எளிய வியாபாரி என்று பலருக்கு இலவச சிகிச்சை அளித்துள்ளது TABE. வசதி குறைந்தவர்களுக்கும் தனது மருத்துவ சிகிச்சை கிடைக்கச் செய்கிறது!



Mr. Graham Tabe

பப்பாளிக்காய் வைத்துக் கொண்டு என்ன செய்யலாம்? என்று மண்டையைப் பிய்த்துக் கொள்ளும் இல்லத்தரசிகளே, சூப்பராய் அவியல் செய்து பாருங்கள், பிரமாதமாய் இருக்கும்.

- கி. மஞ்சுளா



புகைப்படம் பல கோணங்களில் எடுக்க ஒரு வாரம் பிடித்தது. பாட்டிமார்களின் முகம், விளையாட்டு, நிற்பது, நடப்பது போன்ற போட்டோக்கள் டீ-ஷர்ட்டுகளை நிரப்ப அமெரிக்காவே சற்று ஆடியது. அத்தனை வரவேற்பு. டாக்ராய் ஆர்டர்களுக்கு ஈடு கொடுக்க முடியாமல் திண்டாடினார். ஷிபான் புகுத்திய 'பாண்டி ஷூ'வினை அணியாதவரே இல்லை எனலாம். இக்குழுவினரின் அமெரிக்க வருகைக்காகவும், விளையாட்டுப் போட்டிக்காகவும் அரசாங்க விடுமுறை அளிக்க அமெரிக்க அரசாங்கம் முடிவு செய்தது.

நாகிக்குப் பெருமை தாங்காமல் கழுத்து நிற்கவில்லை. தனி ஒரு பெண்ணாகத் தானும் தன் சகோதரி பாகியும் நாட்டின் பெருமையை உயர்த்திய மகிழ்ச்சியில் மிதந்தாள்.

"குறிப்பிட்ட நாளும் வந்தது. அமெரிக்க விமான நிலையம் கலகலத்தது. பத்திரிகையாளர்கள் நாகியினை பேட்டி, பேட்டி எனத் துரத்தினர். வந்து நின்ற விமானத்தில் இருந்து இறங்கிய பாகியினைக் கண்டதும் நாகிக்கு ஆனந்தக் கண்ணீர் அருவியாய்க் கொட்டியது. 'பளிச், பளிச்'செனக் காமிராக்கள் மின்ன, காமு பாட்டியையும், கோமு பாட்டியையும் கூட்டம் சூழ்ந்து கொள்ள காமுவும் கோமுவும் ஐஸ்வர்யா ராய், சுஷ்மிதா சென் போல் நடந்து சென்றனர். அங்குள்ள பல மாதர் சங்கங்கள் இக்குழுவினரைத் தங்கள் சங்கத்திற்கு அழைத்தன. டீ.வி. பேட்டிகள், போட்டோக்கள் என தாக்குப் பிடிக்க முடியவில்லை குழுவினருக்கு.

விளையாட்டுப் போட்டிகள் நிகழ்ந்த அன்று போட்டிகள் டீ.வி.யில் நேர்முக ஒளிபரப்பாய் நடத்தப் பெற்றது. பாண்டி விளையாட்டில் பெண்களின் காதுகளில் ஆடும் ஜிமிக்கி அமெரிக்க ஃபேஷன் ஆயிற்று. அநேக ஆண்கள், பெண்கள், முதியோர் அனைவரும் 'ஜிமிக்கி' அணியக் காதணி கம்பெனி ஆர்டர்கள் எடுத்தது. பாண்டியில் ஜெயித்த 19 வயது அலமேலுவினை மணக்க சுமார் 1000 கோடி கொண்ட தொழிலதிபர் முன்வந்தபொழுது அலமேலு வெட்கினாள். அந்நிய நாட்டிற்கு வந்தது முதல் கோமுப் பாட்டியும், காமுப் பாட்டியும் சிறந்த நண்பர்கள் ஆயினர். நாம் ஒரு தாய் மக்கள் என்ற உணர்வு பிறந்தது. பல்லாங்குழி ஆடிய அனைத்து மகளிரும் பாண்ட், ஷர்ட் என நாகரிக மயமாயினர். காமுப் பாட்டி, கோமுப் பாட்டி அவர்களின் வேண்டுகோளின்படி அவர்களின் கணவன்மார்களும் அமெரிக்கா வர ஏற்பாடு ஆயிற்று. ஐந்து வாரங்களில் உலகம் சுற்ற டிக்கெட்டும் அவர்களுக்கு வழங்கப்பெற்றது. ஷாப்பிங் சென்றால் ரசிகர்களின் அன்புத் தொல்லையால் இக்குழுவினருக்கு விசேஷப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது.

ஆடி அலைந்து தாயகம் திரும்பிய குழுவினரை வரவேற்கப் பல அகில இந்திய விளையாட்டு வீரர்கள் குழுமியிருந்தனர். தாரை, தப்பட்டை, உருமி மேளம், நாதஸ்வரம், பாண்ட் எனப் பல வாத்தியங்கள் முழங்கின. இந்திய உணவு, உடை நிறுவனங்கள் தங்கள் கம்பெனி விளம்பரத்திற்கு இவர்களை அணுகின. வந்து இறங்கிய நாளாய் பல பொதுக் கூட்டங்கள், பாராட்டு விழாக்கள் என நாள் நிமிடமாய்ப் பறந்தது. காமுப் பாட்டியும், கோமுப் பாட்டியும் இணைந்து 'கிராமிய விளையாட்டுகள்' என்றதலைப்பில் புத்தகம் எழுத ஆயத்தமாயினர்.

பாகியின் கணவர் இரண்டு சுற்றுப் பருத்து வலுவாய் இருந்தார். நாகியின் கணவரோ அடிக்கடி போன் செய்து அமெரிக்க பாட்டிமார்களின் விளையாட்டினை இந்தியாவில் நீங்கள் நடத்தக் கூடாதா? நானும் இரண்டு மாதம் வாழ மாட்டேனா எனக் கேட்டுக் கொண்டிருந்தார். எது எப்படியோ - நாட்டில் முதியோர்களின் மதிப்பு கூடியது. தாத்தாக்களோ இது 'பாட்டிகள் யுகம்' என முணுமுணுத்தனர்.

## டயாபடீஸ் - சர்க்கரை நோய்!

இதைப் பற்றி இப்போதெல்லாம் கிராமங்களில் கூட பேசுகிறார்கள். அந்த அளவு பிரபலமானதாகவும், நிறைய பேரிடம் காணப்படக் கூடியதாகவும் இருக்கின்ற நோய் இது! இதற்கு சித்த மருத்துவத்தில் மருந்துகள் உண்டா என பதினெண் சித்தர் மருத்துவ மனை (ஏசி/8, இரண்டாவது அவின்யு, முதல் மெயின் ரோடு, அண்ணா நகர், சென்னை - 40. தொ. பே. 6264150) நிர்வாக இயக்குனர் திருமதி சிநேகலதா இளங்கோவனிடம் கேட்டோம் -

"சித்த மருத்துவத்தில் சர்க்கரை நோயை மதுமேகம் அல்லது இனிப்புநீர் என்கிறார்கள். இது வருவதற்குக் காரணமாக அந்தக் காலத்திலேயே பரம்பரை, அதிக உடல் உழைப்பு இன்மை இவற்றையெல்லாம் குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

பொதுவாக 'சித்தா'வில் சர்க்கரை நோய்க்கு மிக நல்ல மருந்துகள்




உள்ளன. ஆரம்ப நிலையில் உள்ளவர்களோ, ஓரளவு அதிகமாக இருப்பவர்களோ சித்த மருந்துகளை எடுத்துக் கொண்டால் மிக நல்ல பலன்கள் கிடைக்கின்றன.

சர்க்கரை நோய் இருக்கிறது என்று தெரிந்தவுடனேயே அதைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துவிட வேண்டும். அதற்கு மருந்து, உணவுக் கட்டுப்பாடு இந்த இரண்டும் ரொம்ப முக்கியம். சர்க்கரை நோயுள்ளவர்கள் இந்த இரண்டையும் நியதியுடன் கடைப்பிடித்தால் எத்தனை வயது வரையிலும் திடகாத்திரமாக வாழலாம். ஆனால் இந்தக் கட்டுப்பாடுகள் இல்லாதபோது சர்க்கரை வியாதி பல விபரீதமான விளைவுகளை ஏற்படுத்துகிறது. உடலில் புண்கள் ஏற்படும் போது ஆறாமல் பயங்கரத் தொந்தரவுகளைத் தரும். அதேபோல விரல் நுனிகள், பாத நுனிகள் இவற்றில் தொடு உணர்வு குறைந்து பல பாதிப்புகளை ஏற்படுத்தும். இதனால் பாதங்களை அறுவை

சிகிச்சை செய்து எடுக்க வேண்டிய நிலையெல்லாம் கூட ஏற்பட்டு விடுகிறது.

சர்க்கரை நோய் உள்ளவர்களை பயப்படுத்துவதற்காக இதைச் சொல்லவில்லை. அவர்கள் எவ்வளவு கவனமோடு இருக்க வேண்டும் என்பதற்காகச் சொன்னது இது. முதலில் இருந்தே முறையாக மருந்து, உணவுக் கட்டுப்பாடு இவற்றோடு இருந்துவிட்டால் அதுவும் சாதாரண மற்ற நோய்களைப் போல பெரிய பாதிப்புகளை ஏற்படுத்தாது.

சித்த மருத்துவத்தில் மருந்துகளை உட்கொள்ளும்போது நாம் மேலே சொன்ன இந்த விளைவுகள் ஏற்படுவதில்லை என்பதைக் கண்கூடாகவே பல கேஸ்களில் பார்க்கிறோம். அதற்குக் காரணம் இனிப்பிற்கு மாற்றாக துவர்ப்புச் சுவையுடைய இயற்கை மருந்துகளை நாங்கள் கொடுக்கிறோம். கடலழிஞ்சில் வேர் (அ) பொன்குரண்டி வேர், சிறுகுறிஞ்சான் போன்ற மூலிகைகள் மிகச் சிறப்பாக சர்க்கரையைக் கட்டுப்படுத்துகிறது. நாங்கள் மருந்தைக் கொடுத்து விட்டு தினமும் காலையில் வில்வம், துளசி, அருகன், வேப்பிலை, நாவல் இலை இவற்றைத் தண்ணீரில் கொதிக்க வைத்துக் கஷாயமாகக் குடிக்கச் சொல்கிறோம். அதேபோல மாதுளை, வெந்தயம், ஆவாரம்பூ இவையெல்லாம் மிகச் சிறந்த மருந்துகள். நன்கு சர்க்கரை நோய் கட்டுப்பட்டு மருந்தே தேவையில்லை என்ற நிலை ஏற்படுகிறது. ஆனால் உணவுக் கட்டுப்பாடு மட்டும் எப்போதும் நீங்கக் கூடாது. ஏனென்றால் சர்க்கரை நோய் ஒரு தடவை வந்துவிட்டால் அது முழுமையாகப் போவது என்பதே கிடையாது. பத்தியத்துடன் இருந்தால் அதுவும் மிதமாகவே இருந்துவிடும்.

- இந்நோய் உள்ளவர்கள் இனிப்புகள், வாழைப்பழம், கிழங்கு வகைகள், இனிப்புச் சத்து உள்ள உணவு வகைகள் இவற்றை அறவே தவிர்த்துவிட வேண்டும்.
- மிதமான உடற்பயிற்சி சிறந்தது. யோகாசனத்தில் பவன முக்தாசனம், விபரீத கரணி, புஜங்காசனம், தனுர்



**Mrs. B. MYTHILI**
Dip. in Hair Dressings, River Academy, Hangkong, Dip. in Teachers Training, IVETE South America, Specialist MemberBABTAC, UK
**Consultant in Beauty Culture & BeautyTherasphy**

# மைதிலீஸ்

எங்களது சென்னை நிறுவனம் போலவே அழகுக்கலை வகுப்புகளும் அழகுக்கலை நிலையத்தின் அனைத்து சிகிச்சைகளும் கோயமுத்தூர் கிளையிலும் அளிக்கின்றோம்.

அழகுக்கலை நிலையம் துவங்கத் தேவையான பயிற்சிக்கட்டணம் ரூ. 8,500/- (காலம் 1 (அல்லது) 2 மாதங்கள்)

பாடங்கள் : முகம், முடிக்கு தேவையான புதிய மெஷின்களைப்பற்றித் தெரிந்து கொள்ளுதல்.

**அழகுக் கலை நிபுணர்களுக்கான சர்ட்டிபிகேட் கோர்ஸ்:**
1) எலக்ட்ரோதெரபி 2) தெர்மாலிஸிஸ் 3) புருவத்தைப் பெரிதுபடுத்துதல் 4) அரோமாதெரபி 5) சைனீஸ் கட்ஸ், ஹேர்ஸ்டைல்ஸ் 6) அழகுக்கலை மட்டும் 7) முடிவெட்டுதல் 8) 40 வகையான கொண்டைகள் போடமட்டும் பயில, இன்னும் பல.

**அழகுக்கலை நிலையத்தின் சிகிச்சைகள் :** எங்களது ஹெர்பல் சிகிச்சையின் மூலம் முகத்தில் உள்ள சுருக்கங்கள், கரும் புள்ளிகள், முகப்பரு நீக்குதல், முடி கொட்டுதல், இளநரை, பொடுகுத் தொல்லை, ஹெர்பல் டை போடுதல், ஹென்னா கண்டிஷனிங், முடிக்கு கலரிங் செய்தல், சைனீஸ் ஸ்டைல் கொண்டைகள், ஹேர் கட்டிங், தேவையில்லாத சதையைக் குறைத்தல், வலியின்றி காது குத்துதல், புருவத்தை பெரிது படுத்துதல், முகத்தில் உள்ள தேவையில்லாத முடியை நிரந்தரமாக நீக்குதல், மிகப் புதிதான மணப்பெண் அலங்காரங்கள் யாவும் இரண்டு நிலையங்களிலும் படித்த அழகுக் கலை நிபுணர்களைக் கொண்டு செய்யப்படும்.

ஹாஸ்டல் வசதி உண்டு. வெளி நாட்டு மாணவிகளுக்குத் தலை முடி வளர்வதற்கும், முடி உதிர்வதைத் தடுப்பதற்குரிய 25 மூலிகைகள் கொண்டு தயாரிக்கப்பட்ட மூலிகை எண்ணெயும், முகத்தைப் பொலிவடையச் செய்யும் மூலிகைப் பவுடரும் கிடைக்கும்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

**மைதிலீஸ் தி ஸ்கூல் ஆஃப் ப்யூட்டி கல்சர் & ஹேர்டிரஸ்ஸிங்.**
1, பிரகாசம் ரோடு, பனகல் பார்க் (North)
சென்னை - 600 017.
**Tel : 8255579, 8283902**
**Fax : 91-44-4831748**

**MYTHILI'S THE SCHOOL OF BEAUTY CULTURE & HAIR DRESSING.**
0/4, மேல் மாடியில், 100 அடி ரோடு,
(சக்தி ரோடு அருகில்)
காந்திபுரம்,
கோயமுத்தூர் - 641 021.

**SUNDAY ALSO WORKING DAY.**

The following particulars regarding the ownership of 'MANGAYAR MALAR' the Tamil Monthly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

## FORM IV

1. Place of Publication : Madras
2. Periodicity of Publication : Monthly
3. Name of Printer : V. Murali
   Nationality : Indian
   Address : AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras - 600 040.
4. Name of Publisher : V. Murali
   Nationality : Indian
   Address : AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras - 600 040.
5. Name of Editor : Manjula Ramesh
   Nationality : Indian
   Address : 7, Arunachalapuram 2nd Street, Adyar, Madras - 600 020.

6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital : **Bharathan Publications Private Limited, 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Madras - 600 097.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.1995

V. Murali
Publisher

ஆசனம் இவை நல்ல பலனைத் தரு கின்றன. முறையாக யோகப் பயிற்சி கற்றுத் தருபவரிடம் பயிற்சி பெற்றுச் செய்யலாம்.

● உடம்பில் எடை போடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

● அலட்சியமான போக்குவரத்தும் தவறு. ஏனெனில் எங்காவது இடித்துக் கொண்டோ, விபத்து நேரிடும்போதோ சமயம் ஏற்பட்டால் ஆறுவது மிகச் சிரமம். எனவே கூடியவரை ஜாக்கிரதை யாக இருப்பது நல்லது.

● 'இந்த ஒரு வேளைதானே சர்க் கரை காப்பி சாப்ட்டுவோம், கொஞ்சம் பாதாம் அல்வா சாப்டுப்போம். இருக் கவே இருக்கு மாத்திரை' என்ற மனப் பான்மை - ரொம்பவும் தவறு. பிற்பாடு பல விளைவுகளை ஏற்படுத்தும். 'நா அடக்கம்' மிகவும் தேவை என்பது சர்க் கரை நோய்க்கு மிகமிகப் பொருந்தும்.

● சாதாரணமாக ஆரோக்கியமாக இருக்க வேண்டும் என்று நினைப்பவர் களுக்கான விதிமுறைகளில் ஒன்றாக,

'மண் பரவு கிழங்குகளில் கருணை யன்றி புசியோம்' என்று கூறப்படுகிறது. எனவே, சர்க்கரை போன்ற நோய் நொடி இல்லாதவர்களுக்குக் கூட கரு ணைக் கிழங்கு தவிர மற்றவை உடல் ஆரோக்கியத்திற்கு நல்லதல்ல எனும் போது 'மதுமேகம்' உள்ளவர்களுக்குக் கேட்கவே வேண்டாம்.

● ஓர் அருமையான பாடலில் குறிப் பிட்ட சில மூலிகைகளைச் சாப்பிட் டால் கடல்நீர் கூட வற்றிவிடும் என்கி றார்கள். அந்த அளவிற்கு வலிமை வாய்ந்த மூலிகைகள் சர்க்கரை நோய்க் காகக் கண்டுபிடித்துக் கொடுத்திருக் கிறார்கள் நம் முன்னோர்கள் -

'ஆவாரை கொன்றை நாவல் அலை கடல் முத்தக் கோஷ்டம்
மேவிய மருதத் தோலும் விரைந்துட ரெக்கக் கொண்டு
பூவிரி குழலினாளே பொருந்தவே தன்னை யுண்ண
காவிரி நீரும் வற்றிக் கடல்நீரும் வற்றுந்தானே'

என்கிறார்கள். இதிலே காவிரி நீர் இனிப்புச் சுவையுடையது. கடல்நீர் உப் பானது. எனவே உடம்பில் இனிப்பு மட்டுமில்லை, உப்பு அதிகம் இருந்தா லும் கூட குறைந்து வற்றிப் போகும். அந்த அளவிற்கு இந்த ஆவாரை கொன்றை மூலிகைகள் சக்தி வாய்ந் தவை என்கிறார்கள்.

பொதுவாகவே சித்த மருந்துகள் எந்த நோய்க்குத் தரப்படுகிறதோ அந்த நோயைத் தீர்ப்பதுடன் மட்டுமில்லாமல் பொதுவாக உடல்நலத்தையும் அதி கரிக்கச் செய்கிறது. சர்க்கரை நோய் உடையவர்கள் சோர்ந்து விடுகிறார்கள். அவர்களுக்கு இம்மருத்துவமுறை நல்ல பயனை அளிக்கும் என்கிறார்கள் பதி னெண் சித்தர் மருத்துவமனையின் மருத்துவர்கள்.

— ஜ்வாலா

# இனி இப்படித்தானோ....

**மைதிலி**

டெல்லியிலிருந்து சென்னைக்கு அந்த விமானம் குறித்த நேரத்தில் புறப் பட்டது.

விமானத்தில் பயணிப்பது என்றாலே சுந் தரத்துக்கு படு குஷிதான். சிக்கென்று கச்சிதமாய் புடவையணிந்து, மெல்லிய 'மேக்-அப்' தரித்து, உதடு நலுங்காமல் பேசி, சத்தமில்லாமல் புன்ன கைத்து, குறுக்கும், நெடுக்குமாய் நடக்கும் 'ஏர்-ஹோஸ்டஸ்'களை வைத்த கண் வாங்காமல் முறைத் துப் பார்க்க ஆரம்பித்து விடுவார். தப்பித் தவறி அந் தப் பெண் இவர் பக்கம் திரும்பி விட்டாலோ, அசட்டுச் சிரிப்பு சிரிப்பார். "தண்ணீர் வேண்டும், தலைகாணி வேண்டும், கம்பளி கிடைக்குமா?" என்று அடிக்கொரு தரம் கேட்டுச் சிரித்து வழிவார். தண்ணீர் தரும் கையை மெல்லத் தொட்டுப் பார்க்க முயன்றதும் உண்டு.

ஆனால் ஐம்பத்தைந்தை நெருங்கிக் கொண் டிருக்கும் இவரது நரைத்த தலை, மூக்குக் கண்ணாடி அணிந்த, மெல்லிய சுருக்கங்கள் ஆங்காங்கு தென்படும் முகம், சற்றே முன் னால் சரிந்த தொந்தி இது தவிர பெரிய உத்தியோகத்திலிருப்பதை குறிக்கும் விலையுயர்ந்த 'சூட், கோட்' இத்தியாதிகள் தந்த மதிப்பினால் எந்த 'ஏர்-ஹோஸ்டஸு'ம் இவரைத் தப்பாக எடுத்துக் கொண்டதில்லை.

சுந்தரம் அமர்ந்திருந்த பகுதியில், அவர் முன்னிருந்த இருக்கைகளின் முனையில், காப்பி, டீ நிரம்பிய பிளாஸ்குகள் அடங்கிய டிராலியை தள்ளியபடி நுழைந்தாள் அந்தப் பெண். நல்ல சிவந்த நிறம். கச்சிதமான உயரம், கொடியுடல் என்பதற்கு இலக்கணம் வகுத்தாற்போன்ற உடம்பு, வட்ட முகம், சிரிக்கும் கண்கள், மெல்லிய உதடுகளில் லேசான ரோஸ் கலர் 'லிப்ஸ்டிக்' கிறுகிறுக்க வைக்கும் அழகான புன் னகை. பச்சைக் குழந்தை போல் பளபளத்த மேனி. இன்றைக்கெல்லாம் இருந்தால் இருபது வயது இருக்கலாம். அவளை வெறித்துக் கொண்டிருந்த சுந்தரத்தின் கண்களில் மின்னலடித்தது. உடம்பு ஒரு தரம் சிலிர்த்து, நெஞ்சு பட படக்க ஆரம்பித்தது.

### தயாரிப்பாளருக்கு ஒரு யோசனை...

காப்பி பில்டர் தயாரிப்பவர் அதன் மேல் பாகத்தில் ஒரு கைப்பிடி (தண்ணீர் ஜக்கில் உள்ளது மாதிரி) வைத்தால் உபயோகமாக இருக்கும். அவசரமாக பில்டரை திறப்பதற்கு கஷ்டமாக உள்ளது. கையை சுட்டுக் கொள்ளாமல் இருக்கலாம்.

- ராணி ஜானகிராமன்



கையிலிருந்த டிபன் தட்டை கூட மறந்தவராய் வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்ததில், அந்தப் பெண் தன் இருக்கையை நெருங்கியதோ, "சார், உங்களுக்கு காபியா அல்லது டீயா" என்று கேட்டதோ கூட இவர் காதில் விழவில்லை. மூன்றாவது முறையாக சற்று குரலை உயர்த்தி, "உங்களுக்குக் காப்பி வேண்டுமா அல்லது டீயா?" என்று அவள் கேட்கவும், அவசர அவசரமாக தன்னை சுதாரித்துக் கொண்டு, "ஹி ஹி டீயே போதும்" என்று அசடு வழிந்தார்.

சென்னையில் உள்ள மருந்துகள் தயாரிக்கும் ஒரு பெரிய கம்பெனியில் ஜெனரல் மானேஜராக இருப்பவர் சுந்தரம். நுங்கம்பாக்கத்தில் பெரிய பங்களா, கார், டிரைவர், வகையான பாங்க் பாலன்ஸ், சமூகத்தில் நல்ல அந்தஸ்து, கௌரவம், அருமையான இரண்டு பெண் குழந்தைகள். இப்படி பெண்களை முறைக்கிற சுந்தரத்துக்கு வீட்டில் மனைவியுடன் சச்சரவு கண்டிப்பாய் ஏற்படுமே, பெண்டாட்டி இதைக் கண்டு சும்மா இருப்பாளா என்று கேட்டீர்களானால் அங்கேதான் இருக்கிறது சுந்தரத்தின் சாமர்த்தியமே.

வெளியே, வாசலிலே போகும் போது, 'பெண்கள் எங்கே எங்கே' என்று அலையும் அவர் கண்கள் வீட்டிலே இருக்கையில் தழைந்தபடிதான் இருக்கும். தன் பெண்களின் சிநேகிதிகள் வீட்டுக்கு வரும் போது 'ஹலோ' என்று மரியாதையாக ஒரு புன்னகையை உதிர்த்து விட்டு ஒதுங்கி விடுவார். "உங்கப்பா ஒரு பெர்பெக்ட் ஜென்டில் மேன்டி" என்று தன்னை அவர்கள் விமர்சிப்பது காதுகளில் விழுந்தும் விழாதது போல் பாவித்துக் கொள்வார். ஒரு நவராத்திரி, வெள்ளிக் கிழமை என்று வெற்றிலை பாக்கு வாங்க, பெண்டுகள் வீட்டுக்கு வரும் நாட்களில், தன் அறையை விட்டு வெளியே வர மாட்டார். எல்லோரும் வந்து போன பிறகு "இன்னம் வர்ற பேர் யாரும் இல்லியா?" என்று ஊர்ஜிதப்படுத்திக் கொண்டுதான் ஹாலில் நுழைவார்.

அது சரி. ஆபீசில்... தன்னுடன் வேலை பார்க்கும் நபர்களின், தன் நண்பர்களின் மனைவிமார்களிடம் மிக மரியாதையாக நடந்து கொள்வார் சுந்தரம். ஏதாவது டின்னர் மற்றும் 'பார்ட்டி' என்று அந்தப் பெண்மணிகளைச் சந்திக்க நேரும் போது அவர்களிடம் பேசுகையில், ஒன்று தரையைப் பார்த்துக் கொண்டோ, அல்லது வேறெங்கோ பார்த்தபடியோ பேசுவார். நேருக்கு நேராக முகம் பார்த்து பேச மாட்டார். அப்படி பேசும் போது, "ஏனம்மா, சௌக்கியமாம்மா? குழந்தைகள் சௌக்கியமா அம்மா" என்று வார்த்தைக்கு ஒரு 'அம்மா' போட்டு அவர் பேசுவதில் மனம் கசியாத பெண்கள் கிடையாது. "உங்க ப்ரெண்ட் சுந்தரம் இருக்காரே, ரொம்ப தங்கமான மனுஷன், எவ்வளவு கண்ணியமானவர்!" என்று பாராட்டாத மனைவிமார்கள் கிடையாது.

இதே சுந்தரம் ஆபீசில் புதிதாக வேலைக்குச் சேரும் பெண்களிடம் நடந்து கொள்ளும் தினுசே வேறுதான். குறிப்பாக, இவர் 'டிபார்ட்மெண்டி'ல் சேரும் பெண்கள் சமயத்தில் இவரிடம் ஏதாவது விளக்கம் கோரி வருவதுண்டு. அந்த மாதிரி கேஸ்களில் யாராவது அழகான பெண்களாகத் தென்பட்டால் வலுக்கட்டாயமாக, காரணமின்றி அவர்களை தன் ரூமுக்கு வரவழைத்து, அவர்களுக்கு வேலையில் இல்லாத சந்தேகங்களை உருவாக்கி, அவற்றை விளக்குவதாக பாவனை செய்வார். அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் அந்தப் பெண்களிடம் இவர் 'அசடு வழிவது'ம், கையைக் காலை தடவ முயற்சிப்பதும் உண்டு.

சாமர்த்தியமான பெண்கள் அடுத்த நாளிலிருந்து இவர் பக்கமே திரும்பாமல் சமாளித்து விடுவார்கள். சில பயந்தாங்கொள்ளிப் பெண்கள், சற்று அதட்டினால் எதிர்த்துப் பேசத் தெரியாத பெண்கள் சுந்தரத்தின் இந்த வரம்பு மீறிய விளையாட்டுகளைச் சகித்துக் கொண்டு, நெருப்பின் மீது இருப்பது போல அவர் ரூமில் அவஸ்தைப்பட்டு விட்டு கண் கலங்கி முகம் சிவந்து ரூமை விட்டு வெளியே

# தாய்ப்பால் தருவது குழந்தைக்கு நல்லது.

# அது உங்களுக்கும் சுகமானதாக இருக்க வேண்டுமல்லவா ?



தாய்ப்பால் தருவது குழந்தைக்கு நல்லதுதான். அதனால் சிலசமயம் உங்களுக்கு எவ்வளவு வலி ஏற்படுகிறது ? உங்கள் மார்பக முனைகளில் புண் ஏற்படுகிறது. விரிசல்கள் ஏற்பட்டு, வேதனை மிஞ்சுகிறது ?

எண்ணெய், நெய் அல்லது வெண்ணெய் போன்றவற்றை தடவுவதால் போதுமான நிவாரணம் பெற முடிவதில்லை.

இதற்குத் தேவை — ஒரு நல்ல கிரீம். புண்ணை ஆற்றுவதுடன், வலி ஏற்படுத்தும் விரிசல்களை குணப்படுத்தும் கிரீமாக இருக்க வேண்டும். இதைத்தான் செய்கிறது மாஸ்ஸே பிரெஸ்ட் கிரீம். நஞ்சு சாராத, துர்வாடை வீசாத கிரீம் இது. டாக்டர்கள் சிபாரிசு செய்வதும் இதைத்தான். ஏனெனில் இதில் உள்ள ஒப்பற்ற பொருளான அல்லன்டாயின், வெடிப்புகள் மற்றும் புண்களை விரைந்து குணப்படுத்துகிறது. தாய்ப்பால் தருவதை வலியற்றதாக்குகிறது. உங்களுக்கும், உங்கள் குழந்தைக்கும் ஏற்ற விசேஷமுள்ளதாக்குகிறது.

**தாய்மார்களுக்கேற்ற தலைசிறந்த உடனடி நிவாரணம்**




**மாஸ்ஸே பிரெஸ்ட் கிரீம்**

**ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன**

தாய்ப்பால் தருவது பற்றி மேலும் அறிய எழுதுங்கள் : மாஸ்ஸே ஆலோசகர், தபால் பெட்டி எண் : 9301, பம்பாய் 400 036.

*Lintas J&J Mas 7 2013 Tm*

வருவதும் உண்டு.

பிரமீளா என்ற கேரளப் பெண், கேரளாவின் இயற்கை எழிலை எல்லாம் தன் கண்களிலும், திரட்சியான உடலிலும் தேக்கிக் கொண்டு சுந்தரத்தின் பெர்சனல் செக்ரடரியாக வேலைக்குச் சேர்ந்தாள். அழகுக்கு அழகு, வேலைக்கு வேலை, நறுக்குத் தெறித்தாற் போல ஆங்கிலம் பேசினாள். ஒரு பிழையில்லாமல் 'டைப்' அடித்தாள். அப்பா இல்லை. தம்பி, தங்கைகளை கவனித்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கும் கன்னிப் பெண் பிரமீளா என்று தெரிந்ததும் சுந்தரத்தின் மனம் எக்காளமிட்டது. அடிக்கடி அகஸ்மாத்தாகபடுவது போல அவள் கையை வருடினார். தோளைத் தொட்டர். இடுப்பில் நெருடினார். பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள் பிரமீளா. ஒருநாள் அவஸ்தை பொறுக்க முடியாமல்,

"சார் நான் உங்க மகள் மாதிரி, நீங்கள் என்னிடம் நடந்து கொள்ளும் முறை சரியில்லை" என்று சீறினாள். சுந்தரமோ விஷமமாய் சிரித்தபடி,

"என் மகள் உன் மாதிரி இல்லை, ரொம்ப பிகு பண்ணாதே, வா" என்று கையைப் பிடித்தார்.

புயல் போல வேகமாய் ரூமை விட்டு வெளியேறி, எம்.டியின் ரூமில் நுழைந்தாள் பிரமீளா. ஜி.எம். தன்னிடம் தகாத முறையில் நடந்து கொள்கிறார் என்று கண்களில் நீருடன் அவள் முறையிட பஸ்ஸரை அடித்து அக்கௌண்ட்ஸ் மேனேஜரை வரவழைத்தார் எம்.டி. "அடுத்த ஐந்து நிமிடத்திற்குள் இந்தப் பெண்ணின் கணக்கைத் தீர்த்து அனுப்பி விடுங்கள்" என்று கட்டளையிட்டார். பின்னே! சுந்தரம் வேலையில் படு கெட்டிக்காரர். அவர் ஜி.எம். ஆக சேர்ந்த பிறகு கம்பெனியின் லாபம் நான்கு மடங்காக பெருகி இருந்தது. எம்.டியின் வலது கை சுந்தரம். அப்படிப்பட்டவரை பற்றித் தவறாகப் பேசி விட்டு, அந்தக் கம்பெனியில் யாரால் குப்பை கொட்ட முடியும்?

அரை மணி நேரம் கழித்து, அழுதழுது சிவந்த கண்களும் வீங்கிய முகமுமாய், ஆபீசை விட்டு கடைசியாய் வெளியேறுமுன்பு, சுந்தரத்தின் ரூமில் நுழைந்தாள் பிரமீளா. "நான் உங்களுக்கு என்ன பாவம் செய்தேன் சார். அநியாயமாய் என் வேலையைத் தொலைக்க வைச்சிட்டீங்களே" என்று அவள் கேவ, குரூரமான ஒரு புன்னகையைப் பதிலாக உதிர்த்தார் சுந்தரம்.

விமானம் சென்னையை நெருங்க சுமார் பதினைந்து நிமிடங்களிருக்கும். தனக்கு முன்னால் நான்கு இருக்கைகள் தள்ளி, ஒரு வயதான மனிதரின் முதுகுக்குப் பின் தலையணையை வைத்து, அவர் மீது கம்பளி ஒன்றை போர்த்தி விட்டபடி, தனக்குப் பக்கவாட்டை காண்பித்தாற் போல், ஒருக்களித்து நின்று கொண்டிருந்த அந்த அழகுச் சிலையையே கண்கொட்டாமல் வெறித்துக் கொண்டிருந்தார் சுந்தரம்.

சுந்தரத்தின் வெறி அதிகமாகியது. அந்தப் பெண்ணைத் தொட்டுப் பார்த்தாலென்ன என்ற வெறி. அவள் தன் பக்கம் திரும்பி நடக்கும் சமயம் பார்த்திருந்து, "எக்ஸ்யூஸ்மி. எனக்கு முதுகு வலிக்கிறது. ஒரு தலையணை கொடுக்க முடியுமா?" என்று இவர் கேட்க,

"இதோ சார்" என்று விரைந்த அவள் ஐந்து நிமிடத்தில் தலையணையுடன், முதுகு வலியால் தவிப்பவர் போல முகம் சுருங்கி முன்னால் சாய்ந்து உட்கார்ந்திருந்த சுந்தரத்தை நெருங்கினாள்.

"மே ஐ ஹெல்ப் யூ சார்" என்றபடி ஆதரவோடு தலையணையை அவர் முதுகுக்குப் பின்னால் பொருத்துவதற்காக அவள் முன் நோக்கி குனிய, அவளுடைய வயிறும், இடுப்பும், மார்பும் சுந்தரத்தின் மூச்சுக் காற்றுக்குச் சமீபத்தில்.

"அப்படியில்லை, இதோ இப்படி" சுந்தரத்தின் கைகள் தலையணையை அவளிடமிருந்து வாங்கி தன் பின்னால் சரித்துக் கொள்ளும் சாக்கில் அவள் இடுப்பை நெருங்கி, மெல்ல இடுப்பைத் தடவி, அகஸ்மாத்தாக படுவது போல மேலே ஏறி, பஞ்சுப் பொதி போன்ற மார்பகத்தில் ஒருகணம் பதிந்து... ஒரு வினாடியில் சுர்ரென்று தன் மீது தேள் கொட்டினாற்போல திடுக்கிட்டு சடேரென்று பின்னுக்குத் தள்ளினாள் அவள். அவள் முகம் சிவந்து, கலங்கிய கண்களில் கோபம் அனலாய் வீசியது.

குளிர்காலங்களில் தயிர் தோயாமல் அப்படியே பாலாகவே இருந்து விடுகிறது. கவலையேபட வேண்டாம். ஹாட் பேக்கில் தயிரை உறையூற்றி வைத்து விட்டால் நல்ல கட்டித் தயிராகத் தோய்ந்து விடும்.

- எம். அனுசந்யா.





**ரப்பர் பேண்ட் வைத்திருக்கும் டப்பாவில் சிறிது டால்கம் பவுடரைப் போட்டு வைத்தால் அவை ஒட்டிக் கொள்வதில்லை.**

**- லக்ஷ்மி சிவகுமார்**

"சார் என்னை என்னவென்று நினைத்தீர்கள்? உங்களுக்கே இது மரியாதையாக இருக்கிறதா?" மெல்லிய குரலில் அடுத்தவர்களுக்குக் கேட்காமல் அவள் சீற, சுந்தரத்தின் முகத்தில், ஓர் அலட்சியமான, "உன்னால் என்னை என்ன செய்து விட முடியும்" என்ற பாவனையில் ஒரு புன்னகை. அந்தப் பெண்ணின் உடல் பதறியது. ஆனால் சக பிரயாணிகளுக்குத் தெரிகிறாற்போல அவரிடம் குரல் உயர்த்திப் பேச அவள் கௌரவம் இடம் தரவில்லை. "எங்கே தொட்டார், எப்படித் தொட்டார், ஏன்?" என்ற ஆயிரம் கேள்விகளுடன் இருநூறு பிரயாணிகள் கண்கள் தன் உடம்பைத் துளைத்துப் பார்ப்பதை கற்பனை செய்யவும் இயலாமல், விமான சிப்பந்திகளுக்கான கேபினுள் நுழைந்து சத்தமில்லாமல் விசிக்க ஆரம்பித்தாள்.

முகத்தில் ஒரு விகாரமான புன்னகையோடு, அந்த உடலை ஸ்பரிசித்த தன் ஒரு கை விரல்களை மற்றொரு கையால் வருடிய வண்ணம் உல்லாசமாக அமர்ந்திருந்த சுந்தரத்தின் மனத்தில், தன் செய்கைக்கான அவமானமோ, குற்றஉணர்வோ சிறிதும் இருக்கவில்லை. மாறாக தான் நினைத்ததை சாதித்து விட்ட எக்களிப்பு வேறு.

**"கீ**தா! சந்திரா!" என்று தன் இரு பெண்களையும் உரக்க அழைத்தபடியே, வீட்டினுள் நுழைந்தார் சுந்தரம். ஹாலில் சோபாவில் உட்கார்ந்து, டீ.வி. பார்த்துக் கொண்டிருந்த அவர் மனைவி,

"சந்திரா அவ ரூமிலே 'ஹோம் ஒர்க்' செஞ்சிண்டிருக்கா. கீதா இன்னும் ஆபீஸிலே இருந்து வரல்லை" என்றபடியே கணவரிடமிருந்து ப்ரீப்கேஸையும், பிளாஸ்டிக் பையையும் வாங்கிக் கொண்டாள்.

"என்னது? இன்னும் கீதா ஆபீஸிலே இருந்து வரலையா? மணி எட்டாகப் போகிறது. கொஞ்சமாவது பொறுப்பு வேண்டாம்? சாயந்திரம் ஏழு மணிக்கு முன்னாடி வீட்டுக்கு வந்துடணும்னு எவ்வளவுதரம் சொல்லியிருக்கேன்? ஸ்டுபிட்!" கோபமாக இரைந்தபடி ஸூட்கேஸையும், டையையும் அவிழ்த்த சுந்தரம் சட்டென மனைவியின் பக்கம் திரும்பி,

"உனக்கெங்கே போச்சு, புத்தி? சீக்கிரம் வரச் சொல்ல வேண்டாமா? பொண்களை வளர்க்கத் தெரியலையே!" என்று சீற,

"பி.காம். படிச்சு முடிச்சதுமே கல்யாணம் பண்ணிடலாம்னேன். நீங்கதானே எம்.பி.ஏ. படிக்க வைச்சீங்க? பெரிய கம்பெனிலே ஐயாயிரம் ரூபாய் சம்பளத்திலே மார்க்கெட்டிங் எக்ஸிகியூடிவ் வேலைன்னதுமே, 'சரி'ன்னு அனுப்பிச்சது நீங்களா, நானா?" என்று அந்த அம்மாள் பதிலுக்குச் சீற வீட்டில் கனமான சூழ்நிலை.

மூன்று பேரும் மௌனமாக சாப்பாட்டு மேஜையில், சாப்பிட்டவண்ணம் இருக்கையில், "ஹாய் டாடி, ஹாய் மம்மி" என்றபடி பூந்தென்றல் போல உள்ளே நுழைந்தாள் கீதா.

"ஹௌ வாஸ் யுவர் டிரிப் டாடி?" என்றபடி அப்பாவின் கன்னத்தோடு தன் கன்னத்தை இழைத்தவள், "எனக்குப் பசியே இல்லை அம்மா. ரொம்ப டயர்டா இருக்கு. தூங்கப் போறேன்" என்றபடி தன் ரூமுக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டாள்.

தூக்கம் வராமல் புரண்டு, புரண்டு படுத்த சுந்தரத்துக்குத் தாகம் நாக்கை வரட்டியது. சமையலறைக்குச் சென்று, ப்ரிஜ்ஜை திறந்து ஒரு பாட்டில் தண்ணீரை ஒரே மூச்சில் குடித்து விட்டு திரும்பும் போதுதான் பெண்களின் ரூமில் விளக்கு எரிவதைப் பார்த்தார்.

"ராத்திரி மணி பன்னிரண்டாகப் போகிறது. இன்னும் என்ன பேச்சு? காலா காலத்திலே படுக்கப் போங்க"ன்னு ஒரு அதட்டல் போட்டு அவர்களைப் படுக்கச் சொல்ல வேண்டும் என்று நினைத்தபடியே அவர்கள் ரூமை நெருங்கி, மூடியிருந்த கதவின் மேல் கை வைத்தவர், திடுக்கிட்டுப் போய் நின்றார். ரூம் உள்ளிருந்து அழுகைச் சத்தம். கீதா ஏதோ சொல்லியபடி விசும்பி அழ, சந்திரா அவளை சமாதானப்படுத்துவது காதில் விழுந்தது.

"என்ன விஷயமாயிருக்கும். உடம்பு கிடம்பு சரியில்லையோ" என்று எண்ணியபடி கொஞ்சம் போல கதவைத் திறந்து இடைவெளி வழியே உள்ளே பார்த்து, அவர்கள் சம்பாஷணை கேட்க ஆரம்பித்து கல் போல சமைந்து நின்றார் சுந்தரம்.

# "உங்கள் மகிழ்ச்சி எங்கள் வளர்ச்சி"



நாங்கள் அறிமுகப்படுத்தும் புதிய மாருதிகார் மற்றும் 108 கவர்ச்சிகரமான பரிசுகளுடன் கூடிய புதிய திட்டம்.

"இறால் பண்ணைதிட்டம் இனிமையான எதிர்காலத்திற்கு"

**64% P.A.**

உங்கள் முதலீடு
ரூ.5000/- மட்டும்

**100% EOU**

| முதலீடு | காலம் | வருட வருமானம் | திட்டமுடிவில் போனஸ் | மொத்த தொகை | விகிதம் |
|---|---|---|---|---|---|
| ரூ.5000/- | 6 வருடம் | ரூ. 1,200/- | ரூ. 10,000/- | ரூ. 17,200/- | 40.7% P.A |
| ரூ.5000/- | 10 வருடம் | ரூ. 1,200/- | ரூ. 25,000/- | ரூ. 37,000/- | 64% P.A |

★ பணத்திற்கு உத்திரவாதமாக முன்தேதியிட்ட காசோலை
★ 1500 ச.அடி நிலம் திட்டகாலம் வரை குத்தகைக்கு
★ இத்திட்டத்தில் இணையும் அனைவருக்கும் பரிசுகூப்பன் வழங்கப்படும்

**எங்களுடன் இணைவீர்! வாழ்வில் வளம் பெறுவீர்!!**

## அபிராமி அக்வா அனெக்ஸா (மெட்ராஸ்) லிமிடெட்
## ABBIRAMI AQUA ANNEXA (MADRAS) LIMITED

உங்களுடைய டெபாசிட்டுகளுக்கு கவர்ச்சிகரமான வட்டி வழங்குகிறோம்

**24% P.A** — மாத வட்டி

**27% P.A** — வருட வட்டி

15.3.95 வரை பெறும் டெபாசிட்டுகளுக்கு 3% ஊக்கத்தொகை வழங்கப்படும்

## அபிராமி HIGH இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

**Registered Off :**
Chithra Complex,
Near Chathiram Bus Stand,
Tiruchy- 2.
✆ 31467, 468508

**Corporate Off :**
49, Brindhavan Street,
Murugan Complex,
West Mambalam,
Madras -600 033.
✆ 4840258

**Branch Off :**
55-B, Chinniah Complex,
Five Roads,
Near Gowri Theatre,
Salem - 636 004.

"ஒரு கம்பெனியிலிருந்து எங்களுக்கு சேல்ஸ் ஆர்டர் பெரிய தொகைக்கு கொடுக் கறதா சொல்லியிருந்தாங்க. இது சம்பந்தமா அந்தக் கம்பெனி சேல்ஸ் மானேஜரைப் பார்த் துப் பேச வேண்டியிருந்தது. அவரோ,

"நான் நாளையிலிருந்து ஒரு மாசம் லீவிலே போறேன். இன்னிக்குச் சாயந்தரம் ஆறரை மணிக்குத்தான் நான் ப்ரீ. அப்பத்தான் என் னைப் பார்க்க முடியும்"னுட்டார். 'சரி'ன்னு சாயந்தரம் ஆறரை மணிக்கு அவங்க ஆபீசுக் குப் போனப்போ, அந்த மானேஜரையும், பியூனையும் தவிர யாரும் இருக்கல்லை. அந்த ஆள் பியூனை காப்பி வாங்கிண்டு வர அனுப் பிச்சுட்டு என்னை ரொம்ப மரியாதையா ரூமுக்குள்ளே அழைச்கண்டு போனான்டி. நான் எங்க கம்பெனி தரப்பிலே சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லி முடிச்சேன்.

"ரொம்ப சரி, உங்க கம்பெனியிலிருந்து கண்டிப்பா இந்த சரக்கை மொத்தமா எடுத்துக் கறோம். ஒரே ஒரு கண்டிஷன்'னான்டி."

"என்ன சார் சொல்லுங்கன்னேன்."

"நீ எனக்கு அனுசரணையா நடந்துக்கோ. நான் உன்னோட 'கோ ஆபரேட்' பண்றேன். தொடர்ந்து உங்க கம்பெனிக்கு சேல்ஸ் ஆர்டர் கிடைக்கறதுக்கு நான் 'கியாரண்டி'ன் னான்டி.

"நீங்க ரொம்ப கேவலமா பேசறீங்க. உங்க கூட இனி பேச வேண்டிய அவசியமிருக்கிற தாகவே நான் நினைக்கலை"ன்னு திரும்பி கதவைத் திறக்கற போதுதான், அவன் சடால்னு வந்து என்னை..." கீதா குரல் உடைந்து மறுபடியும் விசும்பியபடி தொடர்ந் தாள். "என்னை பின்னாலேயிருந்து இறுக்கிப் பிடிச்சுண்டுட்டான்டி. எனக்கு வெல வெலன்னு போயிடுத்து. காப்பி வாங்கிண்டு வரப் போன பியூனும் வரல்லை.

"சார் நீங்க என் தகப்பனார் மாதிரி, லீவ் மி அலோன். லெட் மி கோ"ன்னேன். அதுக்கு அந்த ராஸ்கல் பதில் சொல்லாம என் கன்னத் திலே... ஐயோ அம்மா" என்று படுக்கையிலே முகம் புதைத்து அழுதாள் கீதா.

"அழாதேடி, கீதா... நீ தப்பிச்சு வந்தது வந்தாயே, அப்படியே அவன் கன்னத்திலே ஒரு அறை கொடுக்கறதுதானே" என்று சந்திரா கேட்க,

"நான் கத்தியிருந்தேன்னாலும், அவனை அடிச்சிருந்தாலும் விஷயம் வெளியே தெரிஞ் சிருக்கும். 'அந்த மனுஷன் நல்லவர்தான் இந் தப் பொண்ணு எப்படியோ'ன்னு என்னை யாராவது ஏதாவது சொன்னா? இந்த விஷயம் அம்மா, அப்பாக்குத் தெரிஞ்சா உடனே என்னை வேலையை விட்டு நிறுத்திட்டு, ஜாதகம் பார்க்க ஆரம்பிப்பா. என்னை மாதிரி படிச்சு, வேலைக்குப் போக ஆசைப்படற பெண்கள் கதி இதுதானாடி?" கீதா முகம் வீங்கிப் போய், விசும்பி விசும்பி அழ,

"அழாதேடி, தன் பெண்களைத் தவிர, மீதி கண்ல படற பெண்களையெல்லாம், பெண்டாட்டியா நினைச்சுப் பார்க்கற இந்த மிருகங்களுக்கு பெருமான் தண்டனை கொடுப்பார்டி. நாளைக்கு அவன் பொண் டாட்டியோ, பெண்ணோ நாலு பேர்கிட்ட அவமானப்பட்டு, அழுதுண்டு வந்து இவன் முன்னாடி நிப்பாடி, அப்பத்தான் அவனுக் குப் பொண்ணோட அருமை தெரியும். அழாதே" கீதாவுடன் சேர்ந்து சந்திராவும் குரல் உடைந்து அழுதபடி பேச,

வெளியே நின்றபடி தன் பெண்களின் இந்த சம்பாஷணையைக் கேட்டுக் கொண் டிருந்த சுந்தரத்தின் முகம் பேயறைந்தாற்போல வெளிறிப் போய் இருந்தது. உடம்பிலிருந்த ரத்தமெல்லாம் வற்றிப் போய் அதற்குப் பதில் ரத்தநாளங்களில் நெருப்புக் குழம்பு ஓடுவது போல் உடல் தகித்தது. கால்கள் தரையில் நிற்க மாட்டாமல் நடுங்க, கண்களில் தாரை தாரையாய் நீர் பெருக, எதிரில் சுவரில் மாட் டியிருந்த முருகன் படத்தை வெறித்துப் பார்த் தார் சுந்தரம்.

கண்ணாடிச் சட்டத்திலுள் முருகன் அவர் கண்ணுக்குத் தெரியவில்லை. அதற்குப் பதில், பிரமீளா "என்னை அநியாயமா வேலையை விட்டு போகடிச்சிட்டீங்களே சார்," என்று கேவினாள். அடுத்த வினாடி ஏர்ஹோஸ்டஸ் "என்கிட்ட முறை தவறி நடந்துக்கறீங்களே, இது நியாயமா?" என்று பரிதாபமாய் விம்மினாள். வாயைத் துண் டினால் பொத்தி, பொங்கி வந்த அழுகையை அடக்க முயன்றும் முடியாமல் சுவரில் தலை சாய்த்து விம்மத் தொடங்கினார் சுந்தரம்.

# மெதுவடை

எண்ணெயே குடிக்காத மெதுவடை செய்கிற ரகசியம் எனக்குப் பல லாண்டுகளாகத் தெரியும். அதைப் பலருக்கும் சொல்லியும் கொடுத்திருக் கிறேன். மங்கையர் மலர் வாசகர்களுக்கும் சொல்லட்டுமா?

எப்போதும் உளுந்து பத்தே நிமிடங்கள்தான் ஊற வேண்டும். அது வடைக்கு என்றாலும் சரி; இட்டிலி, தோசைக்கென்றாலும் சரி. அதற்குமேல் தண்ணீரில் ஊறினால், பொங்கி வருகிற தன்மை போய்விடுகிறது. எவ்வளவு அரைத்தாலும், கொஞ்சமாகத்தான் இருக்கும்; பொங்கி, பூரித்து வராது.

(என்னுடன் கல்லூரியில் பணியாற்றும் தோழிகள் மாலை போய் அரைப்பதற்கு, காலையிலேயே உளுந்து, அரிசி ஊற வைத்துவிட்டு வந்துவிடுவார்கள்... அதனால்தான் இட்லி கல்போல் மாறிவிடுகிறது....)

சரி... பத்தே நிமிடங்கள் ஊறிய உளுந்தைக் களைந்து, கல்போக்கி, கழுவி வைத்துக் கொள்ள வேண்டும். கிரைண்டரில் இஞ்சித் துண்டுகள், பச்சை மிளகாய், பெருங்காயம் போட்டு ஒரு சில நொடிகள் அரைத்துக் கொண்டு, பிறகு உளுந்தைப் போடவும்.

அப்போதைக்கப்போது தண்ணீர் தெளிக்கவும். உளுந்து பந்து போல, பொங்கி வர, வர தண்ணீரையும் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளித்துக் கொண்டே இருக்கவும்.



(இட்டிலிக்கு அரைக்கும் போது தண்ணீர் தெளிக்க மாட்டோமா? அதுபோலத்தான். என்ன? வடைக்குப் போயா இப்படி அரைப்பது என்று பயமாக இருக்கிறதா? ம்ஹூம்.... பயமே வேண்டாம். துணிந்து அரையுங்கள் சொல்கிறேன்....)

ஒரு பத்து நிமிடம் போல அரைத்துக் கொண்டீர்களா? ஒரு டீஸ்பூன் மிளகு, தேவையான உப்புப் போட்டு ஒரு ஓட்டு ஓட்டி நிறுத்தவும்.

ஆழாக்கு உளுந்து அரைத்திருக்கிறீர்கள் என்றால் ஆழாக்கு அரிசி மாவு, ஆழாக்கு ரவை, நறுக்கிய வெங்காயம், கறிவேப்பிலை சேர்த்து நன்றாகப் பிசைந்து, கலந்து எடுத்துக் கொள்ளவும்.

இப்போது வடை சுட்டுப் பாருங்கள். எப்படி 'மொறுமொறு'வென்று இருக்கிறது பாருங்கள்? அதைவிட முக்கியம் - துளியளவு எண்ணெய் கூட இந்த வடை குடிக்காது. அதேநேரம் பஞ்சுப் போல மிருதுவாகவும் இருக்கும்!

ரவை, அரிசி மாவு (பச்சரிசி மாவு) போட்டு கலந்து கொள்ள வேண்டுமே தவிர, கிரைண்டரில் அவற்றையும் சேர்த்து அரைக்கக் கூடாது. இது முக்கியம்.

இப்படித்தான் போண்டாவுக்கும் அரைத்துக் கொள்ள வேண்டும்.

இந்தச் செய்முறைக் குறிப்பால் இரண்டு லாபம்... ஒன்று, எண்ணெயே குடிக்காது; அதனால் சாப்பிட ருசியாக இருக்கும்.

இரண்டாவது, மாவு கணிசப்படும். தண்ணீர் தெளித்துத் தெளித்து அரைப்பதாலும், ரவை, மாவு சேர்ப்பதாலும் இரண்டு பங்கு அதிகப்படும்.

ஒருமுறை செய்துதான் பாருங்களேன்! அரசு மணிமேகலை சொன்ன முறை அற்புதம் என்று எனக்கு நன்றி தெரிவிப்பீர்கள்....

— அரசு மணிமேகலை

நம் அன்றாட வாழ்க்கை மிகவும் வேகமாகவும், இயந்திரத்தனமாகவும் அதி நாகரீக வாழ்வாகவும் செல்லச் செல்ல, நம்மில் சிலர் அதன் வேகத்திற்கும், சூழ்நிலையின் மாற்றங்களுக்கும் ஈடுகொடுக்க முடியாமல் தவிக்கின்றனர்.

பல குடும்பங்களில் கணவன் - மனைவி இருவரும் வேலைக்குச் செல்கின்றனர். மாமியார் - மருமகள் உறவு சரியாக இருப்பதில்லை. குழந்தைகள் மற்றும் குடும்பப் பொறுப்புகள் சரியாகப் பங்கிடப்படுவதில்லை. மனம் விட்டுப் பேசுவதற்கோ, கேட்பதற்கோ ஆட்களோ, நேரமோ இருப்பதில்லை. இத்தனையும் மீறி வாய்ப்பும்

# டிப்ரெஷன் உங்களையும் தாக்கலாம்



நேரமும் அமைந்தால் டீ.வி.யின் ஆதிக்கம் அதனையும் அழித்துவிடுகிறது. மொத்தத்தில் உணர்ச்சிகளின் வெளிப்பாடுகளுக்கு இடமில்லாத பரபரப்பான வாழ்க்கை.

இந்நிலையில் நம்மையறியாமல் நுழைகிறது இந்த டிப்ரெஷன் அல்லது "மனச்சோர்வு" என்னும் நோய்.

சின்னச் சின்ன ஆசைகள் நிராசை ஆகும்போது, வாழ்க்கையின் எதிர்பார்ப்புகள் யாவும் சரியான நேரத்தில் அமையாமல், ஏமாற்றமாய் மாறும்போது, தோல்வி மனப்பான்மை உருவாகி மெள்ள மெள்ள மனத்திற்குள்ளே புழுங்கி, பிறகு தாங்க முடியாத நிலையில் உங்களையறியாமல் வெளியே தெரியத் துவங்குகிறது இந்த மனச் சோர்வுஎனும் நோயின் அறிகுறிகள்.

**மனச்சோர்வில் இரண்டு வகைகள் உண்டு.**

1. சாதாரண வகை (mild depression)
2. தீவிர வகை (strong depression)

இவற்றிற்கு உரிய அறிகுறிகளாகச் சில கீழே குறிப்பிடப்பட்டுள்ளது.



## சாதாரண வகை

1) நாள் முழுவதும் சோர்வு, அசதி, எந்த வேலையிலும் ஈடுபாடற்ற மந்தமான மனநிலை.

2) சுய இரக்கம், பச்சாதாபத்தால் கண்ணீர் எப்போதும் ரெடியாகக் கொட்டும் நிலை.

3) பயம், வாழ்க்கையைத் தொடருவதில் பயம், மரண பயம், எதையும் எதிர்கொள்ள முடியாத மனநிலை.

4) சாப்பாடே பிடிக்காத நிலை அல்லது சதா ஏதாவது சாப்பிட்டுக் கொண்டே இருக்க வேண்டும் என்ற உந்துதல். இதனால் உடலில் எடை குறைந்து கொண்டே செல்லும் அல்லது கட்டுக்கடங்காமல் கூடக்கூடும்.

5) உடலின் சர்வ இடங்களிலும் வலிப்பது போல் பிரமை, ஒருநாள் வயிற்றுவலி என்றால் மறுநாள் நெஞ்சுவலி. எதையும் பெரிதுபடுத்திப் பயப்படும் நிலை.

6) மறதி, அசாத்திய ஞாபகமறதி, தன்னம்பிக்கை மிகவும் குறைந்த நிலை.

7) செக்ஸில் நாட்டமின்மை.

## தீவிர வகை

1) எதையும், யாரிடமும் வெளிப்படையாகக் கூறாமல் அழுத்தமான மௌன நிலை.

2) சூழ்நிலைகளால் பாதிக்கப்படாத ஒரு தனிமையான உணர்ச்சியற்ற நிலை.

3) மனத்திற்குள் அசரீரி குரல்கள் கட்டளையிடுதல்.

4) தற்கொலை போன்று உடலைத் துன்புறுத்திக் கொள்ளும் தீவிர நடவடிக்கைகளில் ஈடு படுதல்.

5) போதைப் பொருட்கள், அதிகமான குடிப்பழக்கத்தினால் உண்டாகும் நிலை.

6) குற்ற உணர்வு அதிகமாய் உந்தித் தள்ள, அதனால் அசாதாரண முறையில் நடத்தல், பழகுதல்.

7) தனிமையில் ஆனந்தம், கதவைத் தாளிட்டுக் கொண்டு மணிக்கணக்கில் தூங்குதல்.

8) குடும்ப வாழ்வில் விருப்பமின்மை.

இந்த அறிகுறிகளில்



ஏதேனும் சில உங்களுக்குக் குறைந்தது இரண்டு வாரங்களுக்குமேல் நீடித்திருப்பதாகத் தோன்றினால் நீங்கள் உடனே உங்கள் குடும்ப டாக்டரைச் சந்திக்க வேண்டும். உங்களுக்கு வந்திருப்பது டிப்ரெஷனா என்பதை அவரே முடிவு செய்யட்டும். அதற்கு அவரும் எக்ஸ்ரே, ஸ்கான், இரத்தப் பரிசோதனை இத்யாதிகள் என்று ஒரு ரவுண்டு சுற்றி வந்து எல்லாம் நெகடிவ் ரிசல்ட் - அதாவது உடல் ரீதியாக எந்தக் குறையும் இல்லை என்பதை ஊர்ஜிதம் செய்து, பின் மனச்சோர்வுக்கு உரிய மருத்துவத்தைத் துவங்குவார். அதனால், அதுவரை நீங்கள் கண்டிப்பாகக் காட்ட வேண்டியது பொறுமை.

கடைசியாக ஒரு வார்த்தை...

இந்த நோய் எளிதாகக் குணப்படுத்தக் கூடியது. ஆன்டிடெப்ரெசன்ட் மாத்திரைகள் எளிதாகக் கிடைக்கக் கூடியவை. இது பரம்பரை வியாதி அல்ல. இதனால் உங்கள் குழந்தைகள் பாதிக்கப்படமாட்டார்கள். ஒழுங்காக மாத்திரைகள் எடுத்துக் கொண்டால் 100% குணமடைந்து சராசரி மனிதனாக வாழலாம் என்று டாக்டர்கள் உத்தரவாதம் அளிக்கிறார்கள்.

டிப்ரெஷனை எவ்வாறு தவிர்க்கலாம்?

1. மனம் விட்டுப் பேசுதல்.

2. எந்தக் கவலையும் வெகுநாட்கள் மனத்தில் ஊறப் போடாமல் யாராவது ஒரு நபரிடம் பகிர்ந்து கொள்ளுங்கள்.

3. வாழ்க்கையைச் சரியான கோணத்தில் பார்த்து, அதிகமான ஆசைகளையும் எதிர்பார்ப்புகளையும் வளர்த்துக் கொள்ளாமல், நடைமுறையில் சிந்தித்து உடன் செயல்பட வேண்டும்.

4. மனத்தைச் சஞ்சலப்படுத்தும் காட்சிகளோ, படங்களோ, புத்தகங்களோ தவிர்க்கப்பட வேண்டியவை.

5. "தியானம்" செய்வதற்கு ஓர் ஐந்து நிமிடம் ஒதுக்கினால், அந்த நாளின் நிகழ்ச்சிகள் யாவும் சரியாக நடக்கும் நிலையை உணர்வீர். இன்னும் சொல்லிக் கொண்டே போகலாம். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம்.

"மனதில் உறுதி வேண்டும்
வாக்கினிலே இனிமை வேண்டும்
நினைவு நல்லது வேண்டும்
பெண் விடுதலை வேண்டும்
பெரிய கடவுள் காத்திட வேண்டும்"

- என்ற பாரதியின் வாக்கைப் பற்றிக் கொண்டால் டிப்ரெஷனை ஓட ஓட விரட்டலாம்.

**- மைதிலி கிருஷ்ணமூர்த்தி**

---

*மூன்று அங்குல உயரத்திற்கு உப்பும் சப்பாத்திக்கு அதிகப்படியான எண்ணெய் தேவையில்லை. சாதாரண மாவுக்கஞ்சிகூட கைகொடுக்கும்.*

*பிரஷர் குக்கரில்தான் சாதம் சமைத்தாகிவிடுகிறதே! கஞ்சிக்கு எங்கே போவது என்று கையைப் பிசைய வேண்டாம்.*

*ஒரு சின்ன பாத்திரத்தில் 1 தம்ளர் தண்ணீர் (ஆழாக்கு) விட்டு கொதிக்க விட வேண்டும். ஒரு மேஜை கரண்டி பச்சரிசிமாவை கூழ் போல் ஆக்கி, கொதிக்கும் நீரில் விட்டு, சில நிமிடங்கள் கிளற கஞ்சியின் பளபளப்பு கரண்டியில் டாலடிக்கும். இந்தப் பதத்தில் கஞ்சியை அடுப்பிலிருந்து இறக்கி, தேவையான உப்பு, சிட்டிகை சமையல் சோடா சேர்த்து ஆறினபின் கோதுமை மாவில் சப்பாத்தி மாவு பிசைந்து 5அல்லது 10 நிமிடங்கள் ஊறவிடவும். பின் எப்பொழுதும் போல் சப்பாத்தி இட்டு (ஒரே முறைதான்) தோசைக் கல்லில் எண்ணெய் விடாமல் இருமுறை திருப்புத் திருப்பிப் போட்டு, கடைசியில் தேக்கரண்டி டால்டாவோ, நெய்யோ விட்டு, எடுத்து வைக்கவும். அவ்வளவு மிருதுவாக இருக்கும்!*



*கஞ்சியை சீயக்காயில்விட்டு முடி தேய்த்துக் கொள்ளும்பொழுது முடி மிருதுவாக இருப்பதுதான் சப்பாத்தி செய்ய இந்த யோசனை எழுத்ததற்குக் காரணம்.*

—காந்தாமணி தேவனாதன்

# Handigas




**FESTIVAL OFFER**

**Rs. 2093/- only**
for Cylinder, Gas,
Regulator & Tube

**FOR LIMITED PERIOD ONLY**

## DISTRIBUTORS FOR TAMILNADU

**COIMBATORE DISTRICT**
**ARADHANA MARKETING AGENCIES,**
49-A, OM Ganesh Nagar, Vadavalli,
Coimbatore - 641 041
Phone: 422175

**PASUMBON THEVAR DISTRICT**
**J.K.C. TRADERS**
71/G, Masjid Road,
Sivaganga - 623 560
Ph: 2412

**PERIYAR DISTRICT**
**KONGUNADU MARKETING ENTERPRISES**
1181, K.N.K. Road, Karungalpalayam
Erode - 638 003
Ph : 212767

**NEYVELI DISTRICT**
**NEW BEST ENTERPRISES**
No. 16, Amaravathi Shopping Complex
Block No.16
Neyveli

**KAMARAJAR DISTRICT**
**SRI JAYA JOTHI GAS AGENCIES**
No. 311, Tiruchylai Road
(Near) Dhanalakshmi Hotel
Aruppu Kottai- 626 101 Ph: 70282

**PONDICHERRY**
**MANORANJETHAM GAS AGENCY**
No. 277, Sri Vazi Complex
Thiruvalluvar Salai, Rajan Nagar
Pondicherry - 605 013 Ph: 82263

*Marketed By*

**OLYMPIA GASES (P) LTD.,**
G3, Brigade Links, Ist Main Road, Seshadripuram,
**BANGALORE - 560 070,** Ph : 3342706.

***Enquiries Solicited for Dealership/Distributordship***



பானு





சித்ரா



ராஜேஸ்வரி



செல்வம்



இந்திரா

# இம்மாத இல்லத்தரசி

பொருள் :
ஆட்டோ
ரைஸ்
குக்கரை
உபயோகித்துச்
செய்யும்
பண்டங்கள்

முதற்பரிசு - ஃபிலிப்ஸ்
அளிக்கும் மிக்ஸர்
கிரைண்டர் + ரூ. 300/-

## ஹாட்லைன் கேக்

*தேவையான பொருட்கள் :*

மைதா மாவு - 1½ தேநீர்க் கோப்பை,
பால் - 1 தம்ளர்,
வெண்ணெய் - 1 கோப்பை (தேநீர்க் கோப்பை)
சர்க்கரை - 1 அல்லது 1½ கோப்பை
(சர்க்கரை அதிகம் வேண்டுபவர்களுக்கு),
முட்டை - 4,
ஏதாவது ஒரு எசென்ஸ் - 1 டீஸ்பூன்,
அலங்கரிக்க உலர்ந்த பழங்கள், முந்திரிப்பருப்பு சுமார் இரண்டு டீஸ்பூன்.

*செய்முறை :*

மைதாவை நன்கு சுமார் நான்கு முறையாவது சலித்து இலேசாக வறுத்து எடுத்துக் கொள்ளவும். பாலை லேசாகச்

சூடு பண்ணி அதில் வெண்ணெயைப் போடவும். பால் சூடாக இருப்பதால் ஸ்பூனால் கலக்கினால் வெண்ணெய் பாலில் கலந்து ஒரு குழம்பு போல் இருக்கும். இத்துடன் நான்கு முட்டைகளையும் உடைத்து ஊற்றி ஹேண்ட்மிக்ஸரில் (அ) மிக்ஸியின் 'விப்பர்' ப்ளேடு உபயோகித்து நன்கு நுரை வரும்வரை அடிக்கவும். பின்னர் இதனுடனே சர்க்கரையை (பொடி செய்ய அவசியமில்லை) சேர்த்துத் திரும்ப அடிக்கவும்.

பிறகு நமக்குப் பிடித்த எசென்ஸை ஒரு ஸ்பூன் ஊற்றி (எசென்ஸ் இல்லையேல் கவலையில்லை. நியூட்ரமுல், போர்ன்விடா போன்றவைகளில் ஒன்றை சுமார் 2 தேக்கரண்டி போட்டுக் கொள்ளலாம்.) திரும்ப ஒரு நிமிடம் 'விப்' பண்ணி அதனுடன் மைதாவைச் சிறிது சிறிதாகச் சேர்த்து மிக்ஸியில் அடிக்கவும். மைதா கட்டிகளின்றி நன்கு கலக்கும்வரை அடித்தால் போதுமானது. மொத்தமாக சுமார் 7 நிமிடங்கள் அடிக்க வேண்டும். பின்னர் உங்கள் எலக்ட்ரிக் குக்கர் கொள்ளும் பாத்திரத்தில் நெய் (அ) வெண்ணெய் தடவி, தண்ணீர் விட்டு, அது கொதி வந்தவுடன் இந்தக் கேக் கலவையை ஊற்றி, மூடி வைத்து விடுங்கள். சுமார் ஏழு நிமிடங்கள் கழித்து நீங்கள் அலங்கரிப்பதற்காக வைத்துள்ள உலர்ந்த பழங்கள், பருப்புகள் இவற்றை உங்கள் மனத்திற்குப் பிடித்த வடிவில் கேக் கலவையின் மீது தூவி விடுங்கள். பின்னர் நன்கு மூடி விட்டு கேக்கைப் பற்றி மறந்து விடுங்கள். முகம் கழுவிப் பொட்டிட்டு உங்கள் விருந்தினருக்குக் காத்திருங்கள். கேக்கைப் பதமாக வேக வைக்கும் வேலையை உங்கள் குக்கர் கவனித்துக் கொள்ளும்.

**பின்குறிப்பு :** பேக்கிங் சோடா இல்லாமலா என்ற கேள்வி வரும். இந்தக் கேக்கிற்கு அது அவசியமில்லை. இதன்மேல் ஐஸிங் ஷுகர் உபயோகித்து நீங்கள் விரும்பும் அலங்காரமும் செய்து கொள்ளலாம்.

- திருமதி செல்லம்,
அண்ணாமலை நகர் - 608 002.

**இரண்டாம் பரிசு - ரூ. 200/- + ஃபிலிப்ஸ் அளிக்கும் ஹேண்ட் மிக்ஸர்**

## காய்கறி கேக்கும், காரசார சட்னியும்

***தேவையான பொருட்கள் :***

பெரிய சைஸ் உருளைக்கிழங்கு - 8,
மைதா - 4 டேபிள் ஸ்பூன்,
உப்பு - ருசிக்கேற்றவாறு,

உருளைக் கிழங்கை வேக வைத்து, தோல் உரித்து, உதிர்த்துக் கொள்ளவும். இத்துடன் மைதாவையும் உப்பையும் சேர்த்து, பிசைந்து கொள்ளவும். மாவை கட்டியில்லாமல், வேண்டுமானால் சிறிது தண்ணீர் தெளித்துப் பிசையவும்.

குறிப்பிட்டுள்ள காய்கறிகளைச் சிறு துண்டங்களாக நறுக்கி தண்ணீரில் நன்றாகக் கழுவிக் கொள்க :-

காரெட் - 1 கப்,
காலிஃப்ளவர் - 1 கப்,
பீன்ஸ் - ½ கப்,
குடமிளகாய் - ½ கப்,
பெரிய வெங்காயம் - 2,
மஞ்சள் பொடி - ¼ டீஸ்பூன்,
சாம்பார் பொடி - 1 டீஸ்பூன்,
கரம் மசாலா பொடி - ¾ டீஸ்பூன்,
பொட்டுக்கடலைப் பொடி
- 2 டேபிள்ஸ்பூன்,
உப்பு - அளவாகப் போடவும்.

பூண்டுப் பல் - 6, இஞ்சி - 2 அங்குல நீளத்துக்குப் போட்டு அரைத்து விழுதாக்கவும்.

வாணலியை அடுப்பில் வைத்து, 2 டேபிள் ஸ்பூன் சமையல் செய்ய உபயோகிக்கும் எண்ணெயை விடுங்கள். மஞ்சள் பொடி, உப்பு, சாம்பார் பொடியைப் போட்டு வெங்காயத்தைச் சேர்த்து வதக்கவும். அதன்பின் காய்கறிகளைச் சேர்த்து, அரை கப் தண்ணீரையும் சேர்த்து, மூடி வைக்கவும். 'காஸ்' நிதானமாக எரியட்டும்.

தேங்காய்த் துருவல் கப், பச்சை மிள


ஊறுகாய் போட வாங்கிய எலுமிச்சம் பழங்களை அப்படியே ஃபிரிட்ஜில் வைத்துவிடுங்கள். அடுத்த நாள் காலையில் எடுத்து நறுக்கினால் எலுமிச்சம்பழத்தின் உள்ளிருக்கும் அரும்புகள் சிதறாமல், கச்சிதமாகத் துண்டுபோட வரும். சாறும் அதிகமாக வழிந்து வீணாகாது.
- செல்லம் ஹரிஹரன்

## தேடினாலும் கிடைக்காது!

**மரச்சாமான்களில் பாலிஷ் செய்யப்பட்ட பரப்பின்மேல் கீறல்கள் ஏற்பட்டால் அவற்றின் ஒத்த நிறமுள்ள லிப்ஸ்டிக்கை கீறல்பட்ட இடத்தில் தீற்றிவிட்டு ஒரு மிருதுவான துணியால் நன்கு தேய்க்கவும். கீறல்... தேடினாலும் கிடைக்காது! லிப்ஸ்டிக்கும் ஒட்டாது!**

**- உஷா**



காய் - 4 போட்டு மிக்ஸியில் அரைத்து வைத்துக் கொள்ளவும்.

கொத்துமல்லி - 1 சிறிய கட்டு, பச்சை மிளகாய் - 2, உப்பு - ருசிக்கேற்றபடி போட்டு கொத்துமல்லியை மண் போக நன்றாக அலசி, பொடியாக நறுக்கி, பச்சை மிளகாயும் உப்பும் சேர்த்து, அரைத்துக் கொள்ள வேண்டும்.

கொட்டை நீக்கிய பேரீச்சம்பழம் - 10,
பொடி செய்த வெல்லம் - ½ கப்,
மாங்காய் வற்றல் (ஆம்சூர்) பொடி - 1 டேபிள்ஸ்பூன்,
மிளகுப்பொடி - ½ ஸ்பூன்,
சீரகப் பொடி - ½ ஸ்பூன்,
உப்பு - 1 சிட்டிகை,

இவை எல்லாவற்றையும் மிக்ஸியில் இட்டு அரைத்துக் கொள்ளவும். அரைத்த விழுதுடன் தண்ணீர் கலந்து கொதிக்க வைத்துக் கொள்ளவும். இந்தச் சட்னி கூழ் போல் இருக்கட்டும்.

வேகவைத்த கறிகாயுடன் இஞ்சி, பூண்டு விழுதையும், தேங்காய், பச்சை மிளகாய் அரைத்ததையும் கலந்து பொட்டுக்கடலைப் பொடியும், கரம் மசாலா பொடியும், 2 டேபிள் ஸ்பூன் தண்ணீரில் கலந்து குழைத்துச் சேர்த்துக் கொதிக்க வைக்கவும்.

'ஆட்டோ' ரைஸ்குக்கரை உலர்ந்த துணியினால் உள்ளே வெளியே நன்றாகத் துடைத்து வைக்கவும். அதில் கொடுத்துள்ள 'பான்'ஐ எடுத்துக் கழுவி, அதில் 2 கப் தண்ணீர் சேர்த்து, அதனுள் ஒரு அலுமினியத் தட்டைக் கவிழ்த்துப் போடவும். ரைஸ்குக்கரின் ரெகுலேட்டரைச் சரியாக வைத்து, 'ஸாக்கெட்டை' ப்ளக்கில் செருகி, பாத்திரத்தை ஐந்து நிமிடம் சூடு செய்யவும்.

கேக் புட்டிங் செய்ய உபயோகிக்கும் பாத்திரத்தில் சிறிது வெண்ணெயை அடியிலும், உள்வட்டத்திலும் தடவிக் கொள்க. ப்ரெட் 4 ஸ்லைஸ் எடுத்துச் சிறிது தண்ணீர் தெளித்து, பரவலாக வைக்கவும். அதன்மேல் உருளைக்கிழங்கு மாவைப் பரப்பி வைத்து, இதற்குமேல் கொத்துமல்லி சட்னியைத் தடவ வேண்டும். இதன்மேல் காய்கறிக் கலவையையும் அதன்மேல் இனிப்பு சட்னியையும் இதேபோல் திரும்பவும் ப்ரெட் 4 ஸ்லைஸ், உருளைக்கிழங்கு, கொத்துமல்லி சட்னி, காய்கறிக் கலவை, இனிப்பு சட்னி, இதன்மேல் திரும்பவும் உருளைக் கிழங்கு மாவு என வைத்து பாத்திரத்தைக் கலவைகளை வைத்து ரெடி செய்து கொண்டு 'ஸ்விட்சை' அணைத்து, 'ப்ளக்'கை உருவி வைத்து, இந்தப் பாத்திரத்தை மெதுவாகத் தட்டின் மேல், தண்ணீருக்குள் இறக்கி வைத்து, தட்டால் மூடி, குக்கரின் மூடியை மூடி, ப்ளக்கைச் செருகி, ஸ்விட்சைப் போடுங்கள்.

முக்கால் மணி நேரத்தில் உங்களுக்குப் புதுமையும், ருசியும் கூடிய "காய்கறி கேக்" ரெடி. வெளியே எடுத்து, ஆறியபின் தட்டில் வைத்து உங்கள் இஷ்டப்படி வெட்டிப் பரிமாறவும்.

இதை எதனுடன் சாப்பிடலாம் என்று தானே கேட்கிறீர்கள்? 1. கோதுமை மாவில் உப்பு, எண்ணெய் கலந்து பிசைந்து பரோட்டா அல்லது பூரி செய்து கொள்ளுங்கள். இரண்டு பூரிகளின் நடுவே வைத்து 'ஸாண்ட்விச்' போல் செய்து சாப்பிடுங்கள். 2. ஒரு கிண்ணத்தில் வைத்து அதன்மேல் 'பால்ஏடு' விட்டு, பரிமாறவும். 3. இதன்மேல் கெட்டியான தயிர் விட்டுக் கூடச் சாப்பிடலாமே?

**- விசாலம் நாராயணஸ்வாமி, கோவை - 2.**

### மூன்றாம் பரிசு - ரூ. 100/- மற்றும் ஃபிலிப்ஸ் அளிக்கும் பழம் பிழியும் கருவி (1 லிட்டர்)

## விஜிடபிள் சூப்

***தேவையான பொருட்கள் :***

கேரட் - ¼ கப், (நறுக்கிய அளவு)
வெங்காயம் - ¼ கப்,
பெரிய குடமிளகாய் - ¼ கப்,
கோஸ் - ¼ கப்,
பூண்டு - 2 பல்,
ஸ்வீட் சோள க்ரீம் - ½ டப்பா
ப்ளெயின் நூடுல்ஸ் - உடைத்தது ¼ கப்,
உப்பு - தேவையான அளவு,
மிளகுத்தூள் - தேவையான அளவு,
அஜினமோட்டோ - ¼ டீஸ்பூன்,

***செய்முறை :***

காய்கறிகளை மிகவும் பொடிப்பொடியாக நறுக்கி வைத்துக் கொள்ளவும்.

## நெல்லிக்காயும், வேப்பிலையும், துளசியும், மருதாணியும் உங்கள் தோட்டத்திலேயே உள்ளனவா?



ஆம் என்றால் உங்களுக்கு ஷாம்பு தேவையில்லை. உங்கள் தோட்டத்திலேயே கேசப் பராமரிப்புக்கான பொருட்கள் உள்ளன. இல்லையெனில் நெல்லிக்காய், வேப்பிலை, துளசி, மருதாணி ஆகிய நான்கு இயற்கைப் பொருட்கள் உள்ள ஷாம்பு உங்களுக்குத் தேவை. தோட்டத்தில் வளரும் கேசப் பராமரிப்பு – அறிமுகம்: சித்தா. தூய இயற்கைப் பொருட்களால் ஆன ஷாம்பு. முடி உதிர்வதையும், இளநரையையும் தடுக்கும் நெல்லியும், சுத்தமான, ஆரோக்கியமான தலை பரப்பு தரும் வேப்பிலையும், பொடுகிலிருந்து விடுதலை தரும் துளசியும், செழுமையான அழகிய கூந்தலை அளிக்கக் கண்டிஷனராக மருதாணியும் கொண்டது சித்தா. உங்கள் கூந்தலுக்கு இயற்கை தரும் இயற்கை அழகு!

60 மில்லி, 100 மில்லி, 200 மில்லி மற்றும் கைக்கடக்கமான 8 மில்லி சாஷேக்களில் கிடைக்கிறது.

மத்தியக் கிழக்கு நாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது.

---

*செயற்கை வண்ணங்கள், திடப்படுத்தும் பொருட்கள் இதில் இல்லை.*




சித்தா. தோட்டத்திலிருந்து வரும் ஷாம்பு.

ஆயுர்வேத கேசப் பராமரிப்பாளரின் மற்றும் ஒரு படைப்பு.

ஆட்டோ ரைஸ் குக்கரில் உள்ள பாத்திரத்தில் 3 கப் தண்ணீர் விட்டு காய்கறிகளை அதில் போட்டு மூடிவிட வேண்டும். சிறிது நேரம் கழித்துத் திறந்து, காய்கறிகள் அரை வேக்காடு வெந்ததும் அதில் நூடுல்ஸ் போட்டு மூடிவிட வேண்டும். நூடுல்ஸ் வெந்ததும் சோள க்ரீம் போட்டு நன்றாகக் கலக்க வேண்டும். பிறகு தேவையான அளவு உப்பு, மிளகுத் தூள், அஜினமோட்டோ என்று ஒன்றன்பின் ஒன்றாகச் சேர்த்து, குக்கரை மூடிவிட வேண்டும். சிறிதுநேரம் கழித்துத் திறந்து நன்றாகக் கலக்கிவிட்டுப் பருகலாம். விஜிடபிள் சூப் ரெடி.

குறிப்பு : சாதாரண பிரஷர் குக்கரிலோ, பாத்திரத்திலோ செய்தால், குழைந்து சேர்ந்து கூட்டு போலாகிவிடும். அதோடு ஆட்டோ ரைஸ் குக்கரில் செய்வதால் வேண்டும்போது திறந்து மூடச் சௌகரியமாகவும் இருக்கும். சூப் குடிப்பதற்கு மிகவும் சுவையாக இருக்கும்.

- கீதா கோபாலன்,
சென்னை - 33.

## ஆறுதல் பரிசு - (1) ரூ. 50 + பழம் பிழியும் கருவி (½ லிட்டர்)

## தில்குஷ் - புட்டிங்

*தேவையான பொருட்கள் :*

ரவை - 1 கப்,
பைனாப்பிள் - ½ கப் (நறுக்கியது),
பச்சை வாழைப்பழம்
(நறுக்கியது) - ½ கப்,
நெய் - ¾ கப்,
சர்க்கரை - 1½ கப்,
மஞ்சள் கலர் - சிறிது,
பைனாப்பிள் எசென்ஸ் - சில துளிகள்,
டுட்டி ஃப்ரூட்டி - ¼ கப்,
செர்ரி பழம் - 6

*செய்முறை :*

வாணலியில் ஒரு ஸ்பூன் நெய்விட்டு, ரவையை லேசாக நிறம் மாறும்வரை வறுத்துக் கொள்ளவும். வறுத்த ரவையை ஒரு பாத்திரத்தில் போட்டு, அத்துடன் சர்க்கரை, நெய், பைனாப்பிள் துண்டுகள், வாழைப் பழத் துண்டுகள் இவற்றைச் சேர்த்து, 1½ கப் தண்ணீர் விட்டு நன்கு கலக்கவும். பிறகு, கலர், எசென்ஸ் ஆகியவற்றையும் சேர்த்துக் கலக்கவும். இந்தக் கலவையை ஆட்டோ ரைஸ் குக்கரில் வைத்து மூடி 'ஆன்' செய்யவும். சுமார் 10 அல்லது 15 நிமிடங்களில் வெந்தவுடன் தானே ஆஃப் ஆகிவிடும். வெளியில் எடுத்து, டுட்டி ஃப்ரூட்டியைக் கலந்து கிளறவும். பின்பு, கப்புகளில் நிரப்பி, நறுக்கிய செர்ரி பழத்தினால் அலங்கரிக்கவும். பதினைந்தே நிமிடங்களில் தேனூறும் புட்டிங் ரெடி. 4 முதல் 6 கப் வரை வரும். இனி விருந்தாளிகளை அசத்தலாம். குழந்தைகள் குதூகலத்துடன் சுவைத்துச் சாப்பிடுவர்.

- பானு ராஜாராம், சென்னை - 28.

## ஆறுதல் பரிசு - (2) ரூ. 50 + பழம் பிழியும் கருவி

## மசாலா கிச்சடி

*தேவையான பொருட்கள் :*

அரிசி - 2 கப்,
பாசிப் பருப்பு - ½ கப்,
நெய் - 1 கப்,
நீள வடிவில் வெட்டிய கறிகாய்,
உருளைக்கிழங்கு, காரட், பீன்ஸ், காலிப்ளவர், பட்டாணி,
5 கப் தண்ணீர்.
பொடிக்க - 10 கிராம்பு, 3 லவங்கப் பட்டை, சிறிது மிளகு, சிறு துண்டு வறுத்த கொப்பரைத் தேங்காய்.

*செய்முறை :*

அரிசி, பருப்பை நன்றாக அலம்பி நெய்யில் வறுத்துக் கொள்ளுங்கள். இதை ரைஸ் குக்கரில் போட்டு காய்கறிகள், உப்பு சேர்த்து, தண்ணீர் ஊற்றி, ரைஸ் குக்கரை ஆன் செய்யவும். எல்லாம் வெந்து 'கீப் வாம்' வந்ததும் பொடித்த மசாலா சேர்க்கவும். நன்றாகக் கிளறிக் கொடுத்து பத்து நிமிடம் கழித்து வெளியில் எடுத்து, தயிர்ப் பச்சடியுடன் சாப்பிடலாம்.

- இந்திரா கணபதி,
பம்பாய் - 22.

---

கேக்கும், பிஸ்கட்டும் செய்யும்போது மட்டும்தான் 'பேக்கிங் ஓவனை' உபயோகிக்கிறீர்களா? வெந்த உருளைக்கிழங்கு, சேப்பங்கிழங்கு போன்றவற்றை உப்பு, காரம், மசாலா, சிறிது சமையல் எண்ணெயுடன் நன்கு பிசிறி ஒரு டிரேயில் பரப்பி வைத்து 'பேக்' செய்யவும். அரைமணி நேரத்தில் கரகர ரோஸ்ட் கறி தயார். எண்ணெய் செலவு கம்மி. கிட்டே நின்று கிளறும் வேலையும் மிச்சம்!

- உஷா



**ஆறுதல் பரிசு - (3) - ரூ. 50 + பழம் பிழியும் கருவி (½ லிட்டர்)**

## தலியா டிலைட்

*தேவையான பொருட்கள் :*

கோதுமை மாவு (தலியா) - 1 கப்,
வெண்ணெய் - 1 டேபிள் ஸ்பூன்,
எண்ணெய் (சமையல் எண்ணெய் எதுவாயினும்) - 1 டீஸ்பூன்,
சீரகம் - 1 டேபிள் ஸ்பூன், ஏலக்காய் - 4, கிராம்பு - 4, பட்டை - சிறுதுண்டு - (இவைகளை வெறும் வாணலியில் இலேசாக வறுத்துப் பொடித்து வைத்துக் கொள்ளவும்.
உப்பு - தேவையான அளவு (1 டேபிள் ஸ்பூன் சரியாக இருக்கும்)
தண்ணீர் - ½ கப்,
மிளகு - 1 டேபிள் ஸ்பூன் (பொடித்தது).

*தேவையான காய்கறிகள் :*

உருளைக்கிழங்கு - 2 பெரியது, காரட் - 2 பெரியது, பீன்ஸ் - 100 கிராம், காலிப்ளவர் - 100 கிராம், வெங்காயம் - 2 பெரியது (இவைகளை எல்லாம் பஜ்ஜிக்கு நறுக்குவது போல் வில்லை வில்லையாக (மெலிதாக) நறுக்கி வைக்கவும். பீன்ஸ் நீளவாட்டத்தில் வெட்டி வைத்துக் கொள்ளவும்.

*செய்முறை :*

தலியாவை ஒரு பாத்திரத்தில் போட்டு அமுங்கும் வரை தண்ணீர் ஊற்றி அரை மணி நேரம் ஊற வைக்கவும்.

முதலில் ரைஸ்குக்கரை எடுத்துக் கொண்டு அடிப் பக்கங்கள் எல்லாவற்றிலும் நன்றாக வெண்ணெயைத் தடவவும். முதலில் உருளை வில்லைகளைப் பரவலாகப் பரத்தவும். அதற்கு மேலே வெங்காய வில்லைகளைப் பரவலாகப் பரத்தவும். பின் மேலே சொன்ன மசாலா பவுடரைக் கொஞ்சமாக எடுத்து அதன்மேல் தூவவும். கொஞ்சம் உப்புப் பொடி, மிளகுப் பொடிகளை அதன் மேல் தூவவும். பிறகு தலியாவை கொஞ்சம் பிழிந்தாற்போல் எடுத்துக் கொண்டு அதன் மேல் பரவலாகப் போடவும். அதற்குமேல் காரட் வில்லைகளைப் பரவலாகத் தூவி, பீன்ஸ் துண்டங்களையும் வைக்கவும். கொஞ்சம் மசாலா பவுடர், உப்புத் தூள், மிளகுத் தூள் இவைகளைத் தூவி பிறகு கொஞ்சம் தலியாவைப் பிழிந்து, காலிப்ளவர் பூக்களைப் பரவலாகப் போட்டு இப்படியே ஒன்றன்மேல் ஒன்றாகப் போட்டு மீதமிருக்கும் தலியாவைப் போட்டு, உருளை வில்லைகள், பீன்ஸ், காரட் துண்டங்கள், மிளகுத் தூள், மசாலா பவுடர் ஆகியவைகளை மேலாகத் தூவியபின் எண்ணெய் ஒரு ஸ்பூன் விட்டு அரை கப் தண்ணீரையும் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளித்து குக்கரை மூடிவிடவும். பரிமாறும் போது தக்காளி வில்லைகளையும், புதினா இலை (அ) கொத்துமல்லி இலைகளால் அலங்கரிக்கவும்.

---

'தம்பி படிக்கலையா?' என்பதும், 'அடே மாடு, படிக்கவில்லையா??' என்பதும் வினாவின் நோக்கத்தில் ஒன்றுதாம். ஆனால் எதிரில் இருக்கின்ற பிள்ளையின் மனத்தில் எத்தகைய மாறுபட்ட உணர்வுகளை அவை உருவாக்கும் என்று எண்ணிப் பாருங்கள். 'நீ எல்லாம் இனிமே படிச்சுக் கிழிச்ச மாதிரிதான். நீ எங்கடா உருப்படப் போறே' என்று சொல்லுகிற பெரியவர், 'என்னவோ உனக்கு மனசு வரல; நீ மட்டும் மனசு வைச்சா, எவன்டா உன் முன்னாடி நிற்பான்?' என்று சொல்லிப் பார்க்கட்டும்; அதன் பலன் உடனே தெரிகிறதா இல்லையா என்று பாருங்கள்.

சொன்னவர் : சாலமன் பாப்பையா
தகவல் : வயலூர் ஆர். பார்த்திபன்

---

## இதற்கு ஏற்ற சட்னி - கொய்யா சட்னி

*தேவையான பொருட்கள் :*

கொய்யா - பெரியது 1 (காயாகவோ, மிகவும் பழுத்ததாகவோ இருக்கக் கூடாது. செங்காயாக இருத்தல் நலம்)
கொத்துமல்லி - 1 கட்டு,
பச்சை மிளகாய் - 1,
சீரகம் - 1 டீஸ்பூன்,
உப்பு - 1 டீஸ்பூன்,
மஞ்சள் தூள் - ஒரு சிமிட்டா,
ஆம்சூர் - ஒரு சிமிட்டா,
மிளகாய்த் தூள் - ¼ டீஸ்பூன்,

முதலில் கொத்துமல்லியை நன்றாக ஆய்ந்து அலம்பி வடிதட்டில் வைக்கவும். கொய்யாவைச் சிறு துண்டுகளாக வெட்டி வைத்துக் கொள்ளவும். பச்சை மிளகாயையும் துண்டுகளாக்கி வைத்துக் கொள்ளவும். மிக்சியில் முதலில் கொத்துமல்லித் தழை, மிளகாய், உப்பு, சீரகம், ஆம்சூர், மஞ்சள் தூள், மிளகாய்த் தூள் முதலியவைகளைப் போட்டு 2 சுற்று அரைத்தவுடன், கொய்யாத் துண்டுகளையும் போட்டு நன்றாக மசிய அரைத்து எடுக்கவும்.

படு சூப்பரான சட்னி தயார். கொய்யாவிற்குப் பதிலாக ஆப்பிள் பழத்திலும் செய்யலாம்.

- திருமதி ராஜேஸ்வரி, புதுடெல்லி - 16.



சுத்தம் தரும்
சுகாதாரம் காக்கும்
சாயிஸ் புலோர் கிளினர்
500 ML
Rs. 23/-
Choice
Floor Cleaner
SHYAM
GROUP
SHYAM MARKETING
HYGIENE PRODUCTS DIVISION
125, G.N. Chetty Road, Madras - 600 017.
Phone : 8269290, 8269438, 8275048

சந்நியாசிகளை 'இருமுறை பிறந்தவர்கள்' என்று சொல்வதுண்டு. அதாவது பிறந்தது ஒரு பிறப்பு; சந்நியாசம் ஏற்றது இன்னொரு பிறப்பு. அதே நிலைதான் பெண்களுக்கும். திருமணத்துக்குப் பின் பிறந்த வீட்டை மறந்துவிட வேண்டியவர்கள்.

ஒரு 'லயிப்பு' ஏற்பட வேண்டும் என்பதற்காகப் புகுந்த வீட்டை முன்னேற்றுவதும் அங்கு மனிதர்களை அனுசரித்துப் போவதும் கடமை என்று சொல்லப்பட்டது. அதோடு, அவளுடைய வாரிசுகளின்மேல் கவனம் போக வேண்டும் என்பதால் வாழையடி வாழையாக, பெண்கள் புகுந்த வீட்டை மேவி வாழவேண்டும் என்றும் அவர்களுடைய பிறந்தகங்கள் அந்தந்த வீட்டு மருமகளால் தாங்கப்படும் என்றும் சங்கிலி வகுக்கப்பட்டது.

மனசளவில் பெண் இரண்டு வீடுகளுக்குமாக இழுபடுகிறது ஒருபுறமிருக்க அவளுடைய கல்வித் தகுதி, திறமைகள், உடைமைகள், அவள் பேரில் இருக்கும் சொத்துக்கள் அனைத்தும் அவளுடைய வாழ்நாளிலும் அவளுக்குப் பின்னும் புகுந்த வீட்டுக்கு மட்டுமே என்று பாத்தியதை கொண்டாடப்படுகிறது. அவளுக்கு

## திருமணமான பெண்ணின் கல்வித் தகுதி, திறமை, சொத்து, நகைகள் குறித்த உரிமை பெற்றோருக்குக் கிடையாதா?

அனைத்தையும் அள்ளிக் கொடுத்த பெற்றோர் பார்வையாளராக வெறுமனே வேடிக்கை பார்க்க வேண்டிய நிலைக்கு வரவேண்டியிருக்கிறது.

'கோத்திரம் மாற்றி விட்டோம்', 'கன்னிகாதானம் செய்து கொடுத்து விட்டோம்', 'இரவும் பகலும், இளமையிலும் முதுமையிலும், சுகத்திலும் துக்கத்திலும் உன் நிழலாக இனி உன்னைத் தொடர்வாள் இவள்' என்று கையடித்துத் தந்துவிட்டோம் என்றாலும் கண்ணுக்குக் கண்ணாக வருடக்கணக்கில் காப்பாற்றிய பெண்ணை, அவள் உடைமைகளைக் கணக்கில் வைத்துக் கொள்ளாமல் கைகழுவி மறந்துவிட வேண்டும். 'அவர்கள் பார்த்துக் கொள்கிறார்கள்' என்று விட்டுவிட வேண்டும் என்பதில் நியாயமிருக்கிறதா? வரம்பு மீறிய குறுக்கீடுகள் பெற்றோரிடமிருந்து வந்தால் அவற்றைப் பெண்ணே முறியடிப்பாள் என்பது வேறு விஷயம்.

பல சந்தர்ப்பங்களில் பெண்ணின் உடைமைகள் புகுந்த வீட்டாரால் சூறையாடப்படுகின்றன என்று சொல்லும்போது எல்லோருக்கும் சாதாரணமாக ஒரு பெண் கணவன் வீட்டில் உழைப்பதையும், சம்பளப் பணத்தைக் கொடுப்பதையும் மட்டுமே





நினைவூட்டிக் கொள்ளத் தோன்றும்.

அதற்கும் மேலே சில விஷயங்கள் உண்டு-

மிஞ்சிப் போனால் நம் கதாசிரியர்கள் மனைவிமாரின் வீணைகளை உடைத்த கதாநாயகர்களை ஆவேசத்தோடு காட்டியிருக்கிறார்கள். பாடுகின்ற மனைவியை 'இதென்ன தே.. வீடா?' என்று மிரட்டிப் பாட்டு மறக்கப் பண்ணிய கணவனைத் திரையில் பார்த்திருக்கிறோம். இருபத்தொன்றாவது நூற்றாண்டின் விளிம்பில் - இன்னும் நிறைய, பெண்களுக்கு மறுக்கப்படுகின்றன.

சிந்தனைகள், தீர்மானங்கள் கூட அவளுக்கு மறுக்கப்படுகின்றன.

சின்ன வயதில் அகால நேரத்தில் தூக்குப் போட்டுக் கொண்டு செத்துப் போனாள் ஓர் அரசாங்க ஊழியை.

அவளுடைய கடைசி நிமிடக் கடிதம் பதினெட்டு பக்க நீளம். அதில் நூறு முறை குறிப்பிட்டிருந்தாள். தன்னுடைய பிஎஃப் தொகை, கிராஜுவிடி, பென்ஷன் எதுவும் கணவனுக்குச் சேரக் கூடாதென்று.

செத்த மனைவிக்கு ஈமக்கடன் செய்ய, கொடுமைக்காரக் கணவனே அனுமதிக்கப்பட்டான். அவளுடைய பெற்றோரே அவனை அழைத்து, 'நீதாம்ப்பா செய்யணும்' என்று இறைஞ்சி அவனுக்கு அந்த உரிமையை அளித்த தந்தார்கள். கடைசியில் எந்தவிதமான சிரமமும் இல்லாமல் அவளுடைய அனைத்துத் தொகைகளும், அவள் பேரிலிருந்த வீட்டுமனை, புடைவைகள், நகைகள் உள்ளிட்ட சகலமும் கணவனைப் போய்ச் சேர்ந்தன. மறு மாதமே மறுமணம் செய்து கொண்டான் கணவன்.

வாணியின் கடைசிக் கடிதத்தை உயிலாக எடுத்துக் கொள்ள முடியாதாம். மனநிலை சிதைந்த நிலையில் எழுதப்பட்டதாம். ஹிந்தியிலும், ஆங்கிலத்திலுமாகக் கோர்வையில்லாமல் இருந்ததாம் கடிதம். சுயநினைவோடு கணவன் பேரில் நாமினேஷன் செய்திருந்தாளாம் வாணி. ஆமாம், வாணிக்கு மனநிலை ஏன் சரியில்லாமல் போயிற்று?

சீரகம் இருக்கிறதே! லேசில் மசியாது. அரைக்குமுன் பத்து நிமிடங்கள் ஊறவிட்டு அரைத்தால் முழுப் பலனும், முழு பலமும் கிடைக்கும்.

- ரோஜி



காரணம் யார்? இந்தக் கேள்விக்கெல்லாம் பதிலை யோசிப்பார் இல்லை.

'என் உடைமைகளை எப்படியாவது என் பெற்றோருக்குச் சேர்த்து விடுங்கள்' என்று பல இடத்தில் குறிப்பிட்டிருந்த அந்தப் பெண்ணின் ஆத்மாவிடம் மன்னிப்பு மட்டுமே கேட்க முடிந்தது. அவன் இறுதித் தொகையைக் கணவன் பேரில் 'செட்டில்' செய்த பெண் அதிகாரிக்கு. ஆனால் ஒன்று நடந்தது.

மறுநாள் அந்த அலுவலகத்தில் பெண் ஊழியைகள் அத்தனை பேரும் தங்கள் தங்கள் 'நாமினேஷன்'களைத் தகுந்தபடி மாற்றினார்கள்.

நித்யாவுக்குக் கல்யாணமாயிற்று. சென்னையில் கொடுத்தார்கள். கர்நாடகத்தின் உள்பகுதியில் சின்ன டவுனில் மெரிட் ஸீட் கிடைத்ததென்று ஹாஸ்டலில் விடப்பட்டு பி.ஈ. படிக்க வைக்கப்பட்ட பெண்.

சதா மாமியார் பெருமை சொல்லிக் கொண்டு சந்தோஷமாகத்தானிருந்தாள் என்று தோன்றியது. போய்ப் பார்த்து வந்தனர் பெற்றோர். திருப்தியில்லை. வருத்தம் மேலிட்டது. தந்தை இப்படிச் சொன்னார், 'எதற்கு மேடம் பெண்ணைச் சக்திக்கு மீறிப் படிக்க வைக்கிறோம். உலகம் புரியத்தானே? தைரியம் வரத்தானே? பி. ஈ. படித்தவன் துளிக் கூடத்தான் ஏதாவது செய்ய வேண்டும் என்ற சொரணையற்று இருக்கலாமா? படிப்பு எல்லாம் மறந்து அடுப்புத் துணி மாதிரி இருக்கிறான்'' என்றார்.

புதிய சம்சாரம். புதிய சூழ்நிலை. செட்டிலாகட்டும். மனசு வைத்தால் சுயதொழில் கூட செய்யலாம். வயசா ஒரு பிரச்னை? என்று வேண்டியவர்கள் சமாதானம் சொன்னார்கள்.

நித்யாவுக்குக் குழந்தை பிறந்தது. வளர்ந்தது. கூடவே இரு வீட்டினரிடையே வெறுப்பும் வளர்ந்தது. உப்புப் பெறாத விஷயமெல்லாம் தகராறாயிற்று. சீர்செனத்தி. நாளே ஆகாமல் பிரசவமான பெண்ணைக் கொண்டுவிடச் சொன்னது இத்யாதி இத்யாதியில்.

கொண்டு விட்ட பெண் ஒரு கடிதம் போட்டாள். கணவன் வெளியூர் போவதாகவும் ஒரு வாரத்துக்குத் தன்னை பெங்களூர் அழைத்துச் செல்லுமாறும். தந்தை பறந்து போய் அழைத்து வந்தார்.

இந்த முறை நித்யா பேச்சில் வித்தியாசமிருந்தது. மாமியார் பெருமை அறவே இல்லை. விரக்தியிருந்தது. 'வேறு வழியில்லை, இப்படி இருக்கேன்' என்கிற பாவம் இருந்தது. எதிலும் சுவாரஸ்யம் காட்டவில்லை. எவ்வளவு கேட்டும் மனசு விட்டுப் பேசவில்லை. கடைசியில் ஒரு வாரம் இருக்க வந்தவள் இரண்டே நாளில் டெலிபோனில் மைத்துனன் அதட்டிக் கூப்பிட கிளம்பிப் போனாள்.

ஒரே வாரத்தில் நித்யா செத்துப் போனாள். இயற்கைச் சாவு. பெற்றோர் மட்டும் அதைக் கொலையாகவே பாவித்தார்கள். கடைசி கடைசியாக வந்தவள் திரும்ப மனமில்லாமல் வற்புறுத்தலில் திரும்பியதை நினைத்து நினைத்துக் கண்ணீர் விட்டனர்.

பெண் செத்துப் போனபின் அவள் வாழவென்று தாம் கொடுத்த ஒவ்வொன்றும் பெரிசாகப்பட்டது பெற்றவர்களுக்கு. கேட்கவா முடியும்?

"நீங்களே சொல்லுங்கள். நான் பாமரம். ஏழை. குழந்தைக்கென்று சிரமப்பட்டுச் செய்தேன். கடைசி முறை வந்தபோதுகூட அவள் ஆசைப்பட்டதைக் கொடுத்தேன். சின்னவளுதையும் துடைத்துக் கொடுத்தேன்'' கதறித் தீர்த்துவிட்டார் நித்யாவின் தாய்.

பெண்ணின் கல்வித் தகுதிகள் அவற்றுக்குக் காரணமான தாய் தந்தையர்க்குச் சம்பந்தமில்லாத விஷயங்களாகப் போய்விட வேண்டும் திருமணத்துக்குப் பின்.

'என்ன ஊரில் இல்லாத எம்.பி.பி.எஸ்.






SPIC JOTHI

இவர்கள்தான் படிக்க வைத்தார்கள்! எம்.டிக்கு அனுப்பியாக வேண்டும் என்று கண்டிஷன் போட்டுக் கல்யாணம் பண்ணி னார்களாம். நாமும் அதற்கென்ன, செய்தால் போச்சு என்றோமாம். அப்புறம் வேலைக்குப் போக வேண்டாம். வீட்டைக் கவனிக்க ஆளில்லை என்றோமாம். 'வைத்தா நாட் டுப்பெண் எம்.டி.தான். வீட்டோடு அடக்க ஒடுக்கமாய் மாமியாருக்கு மட்டும் டாக்ட ராக இருக்கிறாள்' கெக்கலிப்போடு வருகிறது வார்த்தை.

அவர்களுக்கு எப்படித் தெரியும்?

எண்ட்ரன்ஸ் ரிசல்ட் வந்தபோது தாயார் 'ஈன்ற பொழுதின் பெரிதுவந்தது?' தகப் பனார் இரவு தூக்கம் பிடிக்காமல் சந்தோ ஷத்தில் புரண்டது? ஒவ்வொரு டெர்ம் பரீட் சைக்கும் கவலைப்பட்டது? ஒன்பது டெர்ம் ரிசல்ட்டுக்கும் பிள்ளையாருக்கு வேண்டிக் கொண்டது? படித்துக் களைத்த குழந்தை முகம் பார்த்து வயிற்றுக்குள் பதைத்தது? தேடித் தேடி யு.பி.எஸ்.ஸிக்கு அப்ளை செய்தது? முதல் பேனலில் கிடைத்ததும் கர்வப்பட்டது? பிள்ளை, பெண் படைத்த பெற்றோர் அத்தனை பேருக்குமே அனுப வங்கள் பொது என்றாலும் அந்தந்த வீட்டுக் குள் நடந்தது பிரத்தியேகம். அவற்றை வார்த் தைகளால் சொல்ல முடியாது. பெண்ணின் பெற்றோர் பெண்ணைக் கல்யாணம் முடித் துக் கொடுத்த விநாடியே சகலமும் மறந்து விட வேண்டும் என்பது அநியாயம்.

'அனாவசியமாக பெண்ணின் மனத்தைக் கலைக்கிறார்கள். பெண்ணை வாழ விடாமல் அடிக்கிறார்கள். கல்யாணமான பின் இவர்களுக்கு என்ன உரிமை?' என் றெல்லாம் பெற்றவர்களைப் பற்றிக் கணவ னும் அவன் வீட்டவரும் பேசுவது இப் போது வழக்கமாகிவிட்டது. அரசாங்க நியதிப்படி மனைவியின் சம்பாத்தியம் 'ஸ்த்ரீ தானம்' என்ற பிரிவில் வருவதால் ஆணின் வருமானத்துக்குள் அடங்கியதாக வருமான வரிச் சட்டம் காட்டுவதில்லை. அவள் வருமானம் தனி. இவன் வருமானம் தனி. ஆனால் சமூகம் இந்தச் சலுகையைப் பெண்ணுக்குத் தருவதில்லை. 'அவன் அனுப் பினால்தானே இவள் போக முடிகிறது?' என்கிற தானமேளம் வேறு. ஆக, இவள் மெய்நொந்து சம்பாதிக்கும் பணத்தைக் கணவனிடமும் அவன் வீட்டாரிடமும் கொடுத்துப் பின் பிச்சையாகக் கேட்டு வாங்கிக் கொள்ளும் நிலை.

அதிலும் அவள் குழந்தை பெறாதவளாக வும் இருந்துவிட்டால் இன்னும் மோசம். அவளுடைய சம்பளமும் அவள் நகைகளும் அவள் மீதுள்ள சொத்துக்களும் முழுக்க முழுக்கக் கணவனையும், அவன் வீட்டாரை யும் சாரும் என்பது எங்கும் எழுதப்படாது அமுலாக்கப்படும் சட்டம். யார் குறையாக இருந்தாலும் மலடி மட்டும் அவள்தான்.

அப்படிப்பட்ட நிலைமைக்கு ஆளாகிற பெண் தன்னைச் சேர்ந்தவர்களுக்குச் செய்ய ஆசைப்பட்டு out of the way கணவனை ஏமாற்ற வேண்டிய நிலைக்குத் தள்ளப்படு கிறாள். அப்போதும் பாதிப்பு அவளுக்குத் தான். 'அவளுக்கென்ன பிள்ளையா குட் டியா?' என்று சுரண்டுகிறவர்களில் அவளின் பெற்றோரும் உடன் பிறந்தாரும் கூடச் சேர்ந்து கொள்கிறார்கள்.

சராசரி குடும்பங்களில் கூட எல்லா பெரிய செலவினங்களுக்கும் பெண்ணின் பெய ரோடு ஒட்டிக் கொண்டிருக்கிற சொத்து, உடைமைகளைப் பறிக்க ஆவல் அதிகமிருக் கிறது. கணவனுக்கே கூட அதில் சம்மதமே.

ஆக, திருமணமான பெண்ணின் உடை மைகள் குறித்த உரிமை பெற்றோருக்கும் உண்டு என்று சொல்கின்ற அதேநேரத்தில் தன் கல்வித்தகுதி, திறமை, சொத்து, நகைகள் குறித்து வற்புறுத்தலுக்கு அடிபணியாத முழு சுதந்திரம் பெண்ணுக்கு வேண்டும் என்ப தைத் திட்டவட்டமாகத் தெரிந்து கொள் வோம்.

**— மாலதி**



**காலையில் பருப்பு மிகுந்துவிட் டால் இரவு வரை நிற்காது. (ஃபிரிஜ் இல்லாவிடில்) சப்பாத்தி மாவு பிசையும்போது போட்டுப் பிசைந்துவிடுங்கள். மிருதுவான ரொட்டி கிடைக்கும்.**

**- ரோஜி**

# சொக்குப் பொடி மீனாட்சி

நீண்ட நாட்களுக்குப் பிறகு தோழிகள் நாங்கள் சந்தித்தோம். அரட்டை..... பேச்சு.... விஷயங்களுக்கா பஞ்சம்?

எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசியபின் கவிதாவின் இரண்டரை வயது கௌதம் பக்கம் எங்கள் கவனம் திரும்பியது.

"ஆச்சு... இந்த வருஷத்திலிருந்து ஸ்கூலா?"

"அப்ளிகேஷன் 'பார்ம்' வாங்கிட்டேன். நாலு ஸ்கூல்களுக்கு, சிபாரிசுகளுக்கும் ஒரு 'வி.ஐ.பி.'யைத் தெரியும். டொனேஷன் அஃப்கோர்ஸ், கொடுக்கத்தான் வேண்டும். வேறு வழி?" என்றாள் கவிதா.

"அத்தனையையும் சுலபமா செய்துடலாம்.. நம்ம குழந்தை ஒரு ரெண்டு மாசமாவது ஸ்கூலுக்குக் கிளம்பும் வேளைகளில் அழுது, ரகளை பண்ணி, சாப்பிட்டதை வாந்தியெடுத்து , "ஸ்கூல் வேண்டாம்..." என்று தெருவே அதிருகிற மாதிரி கூப்பாடு போட்டு கலாட்டா பண்ணும் பாரு. அப்போ நமக்கு உயிரே போய்விடும்" என்றாள் சத்யா. பாவம், அனுபவஸ்தி! இரண்டு ரெட்டை வால்களுக்கு அம்மா.

"என் பையனை ஸ்கூலுக்கு அனுப்புவதற்கு மூணு மாசம் முன்பே வேலையை ஆரம்பிச்சேன். பாரு... "ஹை... ஜாலி. நான் ஸ்கூலுக்குப் போறேனே..." என்று பாடிக் கொண்டே முதல் நாளிலிருந்து பள்ளிக்கூடம் போனான் அவன். அக்கம்பக்கத்துக்கெல்லாம் அதிசயம் என்று சஸ்பென்சோடு நிறுத்தினாள் மீனாட்சி.

"என்ன சொக்குப்பொடி போட்டேடீ... எனக்கும் சொல்லிக் கொடேன்," என்று அவள் முகவாயைப் பிடித்துக் கெஞ்ச ஆரம்பித்தாள் கவிதா.

"சிம்பிள். எல்.கே.ஜி.யில் சேருவதற்கு மூணு நாலு மாசங்களுக்கு முன்பிருந்தே அடிக்கடி கார்த்திக்கிடம் அதைப் பற்றிப் பேச ஆரம்பித்தேன்.

'ஜாலி! நீ 'பிக் பாய்' ஆயிட்டியே. இனிமே நீ ஸ்ருதி அக்கா, நந்தித் அண்ணா மாதிரி ஸ்கூலுக்குப் போகலாம். அங்கே ஸீ-ஸா, ஊஞ்சல், சறுக்குமரம், பால், பில்டிங் ப்ளாக்ஸ் எல்லாம்



இருக்குமே... நீ ஜாலியா விளையாடிண்டே இருக்கலாம். நம்ம 'சில்ட்ரன்ஸ் பார்க்'கில போயி விளையாடுவோமே... அந்த மாதிரி...' என்பேன் அவனிடம்.

"பார்க்குக்குப் போகும் போது அவன் தோளில் குட்டி வாட்டர் பாட்டிலை மாட்டிவிடுவேன். "நீ ஸ்கூலுக்குப் போகும்போது இதே மாதிரி ஜோரா வாட்டர் பாட்டில், ஸ்நாக்ஸ் கொண்டு போகலாமே" என்று ஆசை காட்டுவேன்."

"நர்சரி ரைம்ஸ் ஆடியோ கேசட்டைப் போட்டுவிட்டு அதன் கூடவே பாடுவேன். மெதுவாக அவனும் பாட ஆரம்பித்தான். விளையாட்டுப் போக்கில் அத்தனை ரைம்ஸூம் மனப்பாடம். "ஸ்கூல்ல இந்த மாதிரி எல்லாம் எத்தனை எத்தனை சொல்லிக் கொடுப்பா தெரியுமா?" என்று ஆர்வத்தை உசுப்பிவிடுவேன்.

"போட்டி எங்களுக்குள்ளே! 'யார் ஜோராய் 'ஏபிசி', 1,2,3 எல்லாம் சொல்லப் போகிறார்கள்?' என்று. அவனே ஜெயிப்பான். நான் தடுமாறும்போது எடுத்துக் கொடுப்பான். "ஐயே... தப்புத் தப்பா சொல்றியேம்மா" என்று சிரிப்பான்.



"இதெல்லாம் ஸ்கூல்ல சொல்லணுமே. நீ இப்படியே ஜோரா சொன்னா அங்கேயிருக்கிற 'மிஸ்' எல்லாம் உன்னை 'வெரிகுட் பாய்' சொல்லுவாங்களே..." என்பேன்.

"அந்த ஸ்கூல்ல எத்தனை ப்ரெண்ட்ஸ் இருப்பாங்க தெரியுமா? ஜாலியா அவங்க கூட விளையாடலாம். நல்ல, நல்ல மிஸ் எல்லாம் இருப்பாங்களே... உனக்கு விளையாட என்னவெல்லாம் கேம்ஸ் சொல்லிக் குடுப்பாங்க

தெரியுமா? எனக்கு ஆசையா இருக்கு. ஸ்கூலுக்குப் போகணும்னு' என்று ஸ்கூல் ஏக்கத்தையே வளர்த்துவிட்டேன்.

"இதோ கார்த்திக் போகப் போகும் ஸ்கூல்" என்று அடிக்கடி அந்த மாய உலகத்தின் வழியே கூட்டிக் கொண்டு போய், உள்ளே போய்ப் பார்க்க மாட்டோமா?" என்ற ஆர்வத்தை ஏற்படுத்தினேன். அப்புறம் ரெண்டு மூணு தடவை லன்ச் டயத்துல அந்த ஸ்கூல்ல கொண்டு போய்க் காண்பித்தேன். தூள் பறக்க அத்தனை பேரும் விளையாடறதைப் பார்த்து வீட்டுக்கு வந்தவுடனே, "அம்மா, எனக்கு வீட்ல போரடிக்குதும்மா"ன்னு சொல்ல ஆரம்பிச்சுட்டான்னா பார்த்துக்கோயேன்..."

"புது பேக் வாங்க ஒருநாள் ஷாப்பிங், ஷூ, சாக்ஸ் வாங்க ஒருநாள் ரெண்டு...' எல்லாம் ஸ்கூலுக்குப் போவதற்காக' என்று ஓர் எதிர்பார்ப்பை வளர்த்தேன்..."

"தப்பித் தவறிக் கூட, அவன் விஷமம் செய்யும்போது ஆச்சு, இந்த ஆட்டமெல்லாம் ஸ்கூல்ல சேரும்வரைதான்" என்று சொல்ல மாட்டேன்."

"'இப்படி சாப்பாட்டைச் சிந்தினா நீ எப்படி ஸ்கூல்ல அழகா, தனியா சாப்பிடுவே?' 'சமத்தா மிஸ் சொல்படி நடக்கணும் இல்லே, தெரியும் சேதி.' 'இது எப்படித்தான் படுத்தாம ஸ்கூலுக்குப் போகுமோ தெரியலியே மாமி?' 'இவனே பூஞ்சை உடம்பு. ரிக்ஷால ரெண்டு வேளை அலைஞ்சா தாங்குமா?' - என்பது போன்ற நெகடிவ் ஐடியாக்களை அவன் காதுபடப் பேசவே மாட்டேன். யாரும் பேசவும் அனுமதிக்க மாட்டேன்.

"ஸ்கூல் என்றாலே அது ஏதோ ஒரு குஷியான இடம். அங்கே போவது ஜாலியான விஷயம். பெரிய குழந்தைகள்தான் அங்கே போகலாம் என்றே அவன் கிட்டத்தட்ட நம்ப ஆரம்பித்து ஸ்கூலுக்குப் போகும் நாளுக்காகத் தவமிருக்க ஆரம்பித்தான். ஆசையோடு போய்ப் புதிய சூழ்நிலையில் சிரமமில்லாமல் அட்ஜஸ்ட் ஆகிவிட்டான்" என்று கூறி முடித்தாள் மீனாட்சி.

நீங்களும் கூட இதே முறையில் பள்ளியில் சேரப் போகும் உங்கள் குழந்தைக்கும் 'சொக்குப் பொடி' போட்டுப் பாருங்களேன். இப்போதே போட ஆரம்பித்தால்தான் ஜூன் மாதத்திற்குள் வேலை செய்ய ஆரம்பிக்கும்!

- உஷா ஸ்ரீகுமார்



சாம்பார் வெங்காயம் நிறைய இருந்தன. அவற்றை புளி, உப்பு, மிளகாய் வற்றல் சேர்த்து மிக்ஸியில் பச்சையாக அரைத்து வாணலியில் நல்லெண்ணெய் ஊற்றி நன்கு சுருள வதக்கி ஆறியவுடன் ஒரு எவர்சில்வர் டப்பாவில் போட்டு வைத்துக் கொண்டேன். மற்ற ஊறுகாய்களைத் தூக்கி சாப்பிட்டுவிடும் இதன்ருசி. அரைக்கும் போது ஒரு பழுத்த தக்காளியையும் சேர்த்து அரைத்தால் ஆறுமாத அன்னத்துவேஷமும் போய்விடும்.

—உஷாநாராயண்.



• 'ஃபேஷன் ஷோ'வில்

# பழமையே புதுமையாக

இப்பொழுதெல்லாம் நிறைய நகை டிசைன்களை டி.வி, பத்திரிகைகள் ஏன் நம் மங்கையர் மலரிலேயே பார்க்கிறோம். நெக்லஸ், செயின், வளையல் என்ற காலம் போய் நகைகளிலேதான் எத்தனை டிசைன்கள். பார்க்க அழகாக இருந்தாலும் அத்தனையையும் வாங்கிக் கட்டுப்படி ஆகுமா?

கல்யாணத்துக்குப் பண்ணின அதே மாங்கா மாலையை எல்லா கல்யாணத்துக்கும் போட்டுக் கொண்டே




• கண் காட்சியில்...



• நடனமணிகளுக்கு 'டெம்ப்பிள் ஜுவல்லரி'...

போன காலமில்லை இது. ஒவ்வொரு கல்யாணத்துக்கு ஒவ்வொரு மாதிரி போட்டுக் கொண்டு போகத் தோணுகிறது. தங்கத்திலேதான் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அதே சமயம் அதே அளவு அழகாக, 'காத்திரமாக' இருக்க வேண்டும் அல்லவா?

''இங்குதான் நாங்கள் வருகிறோம்'' என்கிறார் 'சுக்ரா ஜுவல்லர்ஸ்'என வெள்ளி நகைகளுக்காகப் புகழ்பெற்ற கல்கிராஜு.

''நாம்தான் தங்கம் புகழ் பாடுகிறோமே தவிர வட இந்தியாவிலும், சிங்கப்பூர், மலேசியாவிலும் வெள்ளி நகைகளை அவ்வளவு விரும்பி வாங்குகிறார்கள். கல்லூரி மாணவிகளிடையே ஃபேஷனுக்குப் புகழ் பெற்றது வெள்ளி நகைகள்தான்'' என்கிறார் ராஜு.

இன்றைய ஃபேஷன் பற்றிப் பேசும் ராஜு ஆரம்பத்தில் மிகுந்த பழைமை வாய்ந்த 'கோயில் நகைகள்' எனப்படும் 'டெம்ப்பிள் ஜுவல்லரி'யுடன்தான் ஆரம்பித்தார்.



''என்னோட சொந்த ஊர் கும்பகோணம். பரம்பரையாக நகை வியாபாரிகள். அப்போது நகைக் கடை என்பதெல்லாம் கிடையாது. வெள்ளி, தங்கம் கட்டியாக இருக்கும். தேவையானவர்கள் அவரவர் குடும்ப பொற்கொல்லரிடம் சொல்லிச் செய்து கொள்வார்கள். இப்படித்தான் நாங்களும் செய்து வந்தோம்.

நான் நிறைய வடநாடு டூர் எல்லாம் செல்வேன். அப்போது அவர்கள் நிறைய வெள்ளி நகைகள் அணிவதைப் பார்த்திருக்கிறேன். அதே சமயம் நடனமணிகள் தங்கள் அணிகலன்களை வெள்ளியில் செய்து தங்க முலாம் பூசி வாடகைக்கு எடுத்துக் கொள்வதைப் பார்த்தேன். அவர்களின் ஆபரணங்களை கோயிலில் இருக்கும் நடனச் சிலைகளின் ஆபரணங்களைப் போலச் செய்யலாமே என்று தோன்றியது. இப்படி



# காமதேனு அக்ரோ பார்ம்ஸ்
# IN
# மதுராந்தகம்
## PHASE - II

உங்களது மகிழ்ச்சிகரமான எதிர்கால நல்வாழ்விற்கு வழிகாட்டுகிறது!

நாங்கள் உழைக்கிறோம் - நீங்கள் பலன் பெறுகிறீர்கள்!

காமதேனு அக்ரோ பார்ம்ஸ் திட்டத்தின்படி உங்கள் பெயரில் ஒரு யூனிட் 6000 சதுர அடி நிலம் வாங்கி எங்களுக்கு 10 வருடங்கள் குத்தகைக்கு அளிக்கிறீர்கள். நாங்கள் முதல் வருடத்தில் இருந்து வரியில்லாத வருமானம் பெற்றுத் தருகிறோம். 10 வருட முடிவில் உங்களது முதலீட்டை விட 2½ மடங்குக்கும் அதிகமான வருமானத்தைப் பெறுவதுடன் மூன்று மடங்கு விலைமதிப்பான நிலத்தையும் சொந்தமாகப் பெறுகிறீர்கள்!

மதுராந்தகத்திற்கு அருகில் காமதேனு அக்ரோ பார்ம்ஸ் நிறுவனத்திற்குச் சொந்தமான வளமான பண்ணை நிலத்தில் விவசாய தொழில்நுட்ப வல்லுநர்களின் மேற்பார்வையில் சூரியகாந்தி மற்றும் ஏற்றுமதி மதிப்புமிக்க தாவர பணப்பயிர் வளர்க்கும் திட்டத்தை மேற்கொண்டு இருக்கிறோம்.

எங்களது வெற்றிகரமான இரண்டாவது திட்டம்!

ஏற்கெனவே ஓம்சக்தி கார்டன் தென்னந்தோப்பு பண்ணைத் திட்டத்தை மேல்மருவத்தூருக்கு அருகில் வெற்றிகரமாகச் செயல்படுத்திய எங்களது இரண்டாவது திட்டம் இது!

- ⌘ ஒரு யூனிட் 2½ கிரவுண்ட் - 6000 சதுர அடி விலை ரூ. 23,500/- மட்டுமே.
- ⌘ முதல் வருடமே முன் தேதியிட்ட செக் வழங்குகிறோம்.
- ⌘ 1 முதல் 3-வது வருடம் வரை வருடத்திற்கு ரூ. 3,500/-
- ⌘ 4-வது முதல் 8-வது வருடம் வரை வருடத்திற்கு ரூ. 4,500/-
- ⌘ 9-வது முதல் 10வது வருடம் வரை வருடத்திற்கு ரூ. 5,500/-
- ⌘ வரி விலக்கு பெற்ற வருமானம்
- ⌘ விரும்பினால் 5 வருட முடிவில் கம்பெனிக்கே விற்கும் வசதி!
- ⌘ தவணை முறையில் வாங்கும் வசதி

விவரங்களுக்கு :

**காமதேனு ஹாலிடே ரிசார்ட்ஸ் (பி) லிட்**

நிர்வாக அலுவலகம் : 3, கீழ் தளம்,<br>
ஹாங்காங் காம்ப்ளக்ஸ்,<br>
9, ராமநாதன் தெரு,<br>
சென்னை - 600 017.<br>
போன் : 4343986 / 4937856

நான் காமதேனு அக்ரோ பார்ம்ஸ் திட்டத்தில் சேர விரும்புகிறேன். எனக்கு விண்ணப்ப பாரம்/பிரதிநிதி அனுப்பவும்.

பெயர் : ..............................

தொழில் : ..............................

முகவரி : ..............................

— Adstart

ஆரம்பித்ததுதான் என்னுடைய 'டெம்பிள் ஜுவல்லரி'.

இது நான் எதிர்பாராத அளவு பெரும் வெற்றியடைந்தது. நிறைய நடனமணிகள் அவர்களும் ஐடியாக்கள் கொடுத்துச் செய்யச் சொல்வார்கள். வாடகைக்கு வாங்கி அந்த வேளைக்கு அணிவது என்றில்லாமல் அவரவர்களே




• தலை நகைகள்...

• கல்கி ராஜு தம்பதியினர்

சொந்தமாக வாங்கிக் கொள்ள ஆரம்பித்தார்கள்..."

"அப்படி நீங்கள் செய்த நகைகளில் வித்தியாசமானது ஏதாவது..."

"நாக ஒத்து எனப்படும் பதக்கம் ரொம்பப் பழைய டிசைன். ஒரு கோயிலில் பார்த்துச் செய்தேன். அந்த அழகிய பதக்கம் விற்றுத் தீர்ந்தது. மிகப் பழைய டிசைன்களே இன்று ஃபேஷனாகி விடுகிறது..."

"அப்படித்தான் இன்றைய நாகரீக டிசைன்களுக்கு



• 'பாதக் கொலுசு'கள்!

வந்திர்களா?"

"எங்களிடம் நகை வாங்க வரும் பெண்மணிகளோடு கூட வரும் பெண்கள் அட இது அழகா இருக்கு என்று சாதாரணமாகப் போட்டுக் கொள்ள வாங்கிக் கொள்வார்கள். அப்படித்தான் நாங்கள் நவயுகப் பெண்களுக்கும் டிசைன்கள் செய்ய ஆரம்பித்தோம். இன்று எங்களுடைய விதவிதமான கொலுசுகள் ரொம்பப் பிரபலம்."

"வெளிநாட்டவர்கள் எப்படிப்பட்ட டிசைன்களை விரும்புவார்கள்?"

"இலங்கையில் சிங்களவர்களிடையே கண்டச்சரம் என்பது ரொம்பப் பிரபலமானது. மணமேடையில் பெண் அணிய வேண்டிய நகை இது. அதைப் பார்த்த பலரும் சாதாரணமாகக் கூட வாங்க ஆரம்பித்தார்கள். சிங்கப்பூர், மலேஷியா பெண்மணிகள் பழைய டிசைன்களையே புதிய ஃபேஷனாக எடுத்துச் செல்கிறார்கள்."

"நீங்கள் என்னதான் சொன்னாலும் வெள்ளி வெள்ளிதானே?"

"தங்கத்தோடு பல விஷயங்களில் ஒத்துப் போகக் கூடியது வெள்ளி. இதுவும் அலர்ஜி ஏற்படுத்தாது. 'ரீசேல் வேல்யூ' உண்டு. திரும்ப விற்கும்போது வெள்ளியின் விலை கிடைத்து விடுமே. நீங்கள் ஒரு நகையைத் தங்கத்தில் செய்கின்றபோது கொடுக்கும் கூலி, சேதாரம் தொகைக்கு அதே மாடல் 'டிப்' செய்த வெள்ளி நகை வாங்கிவிடலாம்..."

"ஆனால் அது கறுத்து ஸாரி வெளுத்து விடுமே! வெள்ளியும் பிறகு கறுத்துத்தான் போகிறது இல்லையா?"

"வைரம் கூட நாம் வைத்திருக்கும் விதத்தில்தான் பொலிவுடன் இருக்கும். நகைகளை அது எந்த உலோகத்தில் செய்திருந்தாலும் ரொம்ப ஆசைப்பட்டு வாங்குகிறோம். ஆனால் அதே அளவு அக்கறையும் எடுத்துக் கொண்டு 'சுக்ரா' நகைகளைப் பாதுகாத்தால் பல வருடங்களுக்கு அப்படியே இருக்கும்.

- நாம் நகை அணிய வேண்டுமென்றால், எல்லா அலங்காரங்களையும் முடித்துக் கொண்டு (பவுடர் போடுவது முதல் அனைத்தும்) கடைசியாகத்தான் நகையை அணிய வேண்டும். அதே போல வீட்டிற்கு வந்தவுடன் முதலில் கழற்றி வைக்க வேண்டியது நகைகளைத்தான். பெர்ஃப்யூம், மேக் அப் பொருட்கள், வியர்வை எல்லாமே நகைகளுக்கு எதிரிதான். எனவேதான் எல்லாவற்றையும் போட்டுக் கொண்டே நகை போட வேண்டும்.
- நகையைக் கழற்றிய உடன் அதற்கென்று உள்ள பெட்டியில் நகையை நல்லபட்டுத் துணியால் வியர்வை போன்றவற்றை மென்மையாக துடைத்து விட்டு வைக்க வேண்டும்.
- இரும்பு பீரோவில் வைப்பதைத் தவிர்த்து மரப்பெட்டியில் வைக்க வேண்டும்."

"சரி பாலீஷ் போய் விட்டால் என்ன செய்வது?"

"சரியான முறையில் பராமரித்து பல வருடங்கள் கழித்து பாலீஷ் போகும்போது மீண்டும் போடலாம். எத்தனை முறை போட்டாலும் தவறில்லை."

"இந்த 'டெம்ப்பிள் ஜுவல்லரி' செய்வதற்கென்றே தனியாக ஆட்கள் உள்ளனரா?"

"இது சாதா நகைகள் போன்றது அல்ல. வடசேரியில் உள்ள சில குடும்பத்தினரே பரம்பரையாக இதைச் செய்து வருகிறார்கள்!"

"என்னதான் இருந்தாலும் வெள்ளிதானே என்ற நினைப்பு வருவதைத் தவிர்க்க

---

ரவை, கோதுமை மாவு மற்றும் பொட்டுக் கடலையில் 'மா'லட்டு பிடிக்கும் பொழுது, மாவுடன் சிறிது வறுத்த (முழு) எள் கலந்து லட்டு செய்து பாருங்கள். மாறுதலான மணமுடன், சுவையாக இருப்பதுடன், எள் சத்தும் நிறைந்தது.

—பாலா



ஸ்தாபிதம் : 1986

போன் : 8250770




# ஸ்ரீமதி சிட் பண்ட்ஸ்

9 ஆம் ஆண்டை நோக்கி

வெற்றி நடை போடும்

## ஸ்ரீமதி சீட்டில்

இன்றே சேர்ந்து பயன் பெறுவீர்!

| எங்களது சீட்டு அமைப்புகள் | | | | |
|---|---|---|---|---|
| குரூப் | சீட்டுகாலம் (மாதங்கள்) | மாதாந்திர சந்தா (ரூ) | மொத்த தொகை (ரூ) | அதிகப்படி தள்ளுபடி |
| SV | 50 | 10,000 | 5,00,000 | 30% |
| SL | 50 | 2,000 | 1,00,000 | 30% |
| SJ | 50 | 1,000 | 50,000 | 30% |
| SR | 50 | 600 | 30,000 | 30% |
| SA | 40 | 500 | 20,000 | 30% |
| SB | 40 | 250 | 10,000 | 30% |
| SC | 40 | 125 | 5,000 | 30% |
| SK | 25 | 1,000 | 25,000 | 20% |
| SI | 30 | 500 | 15,000 | 20% |
| SF | 25 | 400 | 10,000 | 20% |
| SS | 25 | 200 | 5,000 | 20% |

ஸ்ரீமதி சிட் பண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்




பதிவு அலுவலகம் 34-B, நுங்கம்பாக்கம்
நெடுஞ்சாலை, சென்னை - 600 034.
போன் : 8250770

• நுழைவுக் கட்டணம் தனி

புதிதாகச் சேருபவர்களுக்குப் பரிசு உண்டு.



நம்பிக்கை நாணயம் நேர்மை

# ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் எண்டர்பிரைசஸ் - பைனான்ஸ்



தலைமை அலுவலகம் : ஜானகி ரியல் எஸ்டேட், எண் 5, ஆழ்வார் திருநகர் அனெக்ஸ், சென்னை - 600 087. ☎: 424676, 425964, 422674, 834634. Regd. No.00745/94

## மாருதி கார் பரிசு பெறும் முத்தான முக்கனித் திட்டம்




- ★ இத்திட்டத்தில் பரிசு பெறலாம் !
- ★ தேவைக்குப் பணம் பெறலாம் !
- ★ வீட்டு உபயோக பொருள் ஒன்றுஉத்திரவாதம் !

- ❋ உறுப்பினர் கட்ட வேண்டிய தொகை ரூ. 500/-
- ❋ சுலப தவணைத் திட்டம், முதல் மாதம் ரூபாய் 250/- இரண்டாவது மாதம் ரூபாய் 250/-
- ❋ உறுப்பினர்களின் எண்ணிக்கை 10,000.

தமிழ் புத்தாண்டு தினமான **14.4.95** அன்று விஜயசேஷ மஹால், வடபழனியில் பொதுவான ஒருவரை நீதிபதியாக வைத்து உறுப்பினர்கள் அனைவரையும் வரவழைத்து 10,000 (பத்து ஆயிரம்) உறுப்பினர் டோக்கனையும் குலுக்கி அதன் மூலம் முதல் 100 நபர்களை தேர்ந்தெடுத்து அவர்களுக்கு விலை உயர்ந்த கவர்ச்சிகரமான பொருட்களை சிறப்பு பரிசாக வழங்கப்படும்.

| | |
|---|---|
| முதல் பரிசு | - மாருதி கார் 800 - 1 நபருக்கு |
| இரண்டாம் பரிசு | - சென்னை புறநகர் பகுதியில் 1½ லட்சம் ரூபாய் மதிப்புள்ள 1 கிரவுண்டு காலி மனை (பத்திர செலவு உட்பட) - 1 நபருக்கு |
| மூன்றாம் பரிசு | - ஹீரோ ஹோண்டா - 3 நபருக்கு |
| நான்காம் பரிசு | - வீடியோகான் கலர் டி.வி. - 5 நபருக்கு |
| ஐந்தாம் பரிசு | - டி.வி.எஸ். 50 - 10 நபருக்கு |
| ஆறாம் பரிசு | - குளிர்சாதன பெட்டி - 5 நபருக்கு |
| ஏழாம் பரிசு | - இரண்டு சவரன் தங்க நகை வீதம் - 10 நபருக்கு |
| எட்டாம் பரிசு | - மிக்ஸி 20 நபருக்கு |
| ஒன்பதாம் பரிசு | - ஸ்டீல் பீரோ (காட்ரேஜ்) 10 நபருக்கு |
| பத்தாம் பரிசு | - சைக்கிள் (35 நபருக்கு) |

★ இன்றே உறுப்பினராகுங்கள் ★

சிறப்பு பரிசு 100 உறுப்பினர்கள் தவிர்த்து மீதி 9,900 உறுப்பினர்களுக்கும் குலுக்கல் முறையில் ரூபாய் 500/- மதிப்புள்ள வீட்டு உபயோகப் பொருள் ஒன்று பரிசாக வழங்கப்படும்.

ரூபாய் 500/- செலுத்தி பரிசு பொருள் பெற்ற உறுப்பினர்களுக்கு நிர்வாகம் 10,000/- ரூபாயிலிருந்து 50,000/- ரூபாய் வரை 2 சதவீதம் வட்டி மூலம் இரண்டு உறுப்பினர்கள் ஜாமீன் பெயரிலும் லோன் வழங்கப்படும்.

நான் உறுப்பினராகிவிட்டேன் இத்திட்டம் எனக்கு பிடித்திருக்கிறது.



திரைப்பட நடிகை
பானுப்பிரியா

K. ராஜகோபாலன்
(சட்ட ஆலோசகர்)
M.A. (Econ.) M.A. (Lit), M.Ed., M.L., D.P.P.A., D.T.L., D.C.B.I., D.C.F. Sc.

தங்களுக்காக பொறுப்பேற்று நடத்துபவர்
**விருகை ஜி. ஜெயராமன் (B.A.)**
(நிர்வாக இயக்குனர்)

S.M. மன்னார்
இயக்குனர்

முதல் குரூப்பில் 7,500 க்கும் மேல் உறுப்பினர்கள் சேர்ந்து விட்டார்கள். இன்னும் ஏன் காலதாமதம் உறுப்பினர் தொகையை D.D. / M.O. மூலமாகவோ எங்கள் ஏஜெண்ட், நிர்வாக அதிகாரி மூலமாகவோ அல்லது நேரிலோ உறுப்பினராகுங்கள்.

ரூபாய் 500 மதிப்புள்ள
பரிசுகளின் விபரம் :



பட்டுப்புடவை



ஒரு கிராம் தங்க மூக்குத்தி



வெள்ளி கொலுசு (1 செட்)



H.M.T.
கைக்கடிகாரம்



குக்கர்



எவர்சில்வர்
குடம்
மற்றும் குத்துவிளக்கு



டிரான்சிஸ்டர்



இஸ்திரி பெட்டி



ஸ்டீல் VIP சேர்



VIP சூட்கேஸ்

சென்னை செங்கை எம்.ஜி.ஆர் மாவட்ட அனைத்து பகுதிகளிலும் இத்திட்டத்திற்கு உறுப்பினர்களை சேர்க்க செல்வாக்கும் திறமையும் படைத்தவர்கள் நிர்வாக அதிகாரியாக பணியாற்ற அணுகவும், 100 பேர்களை சேர்ப்பவர்களுக்கு 3,000 ரூபாய் போனசும் 1,000 பேர்களை சேர்ப்பவர்களுக்கு 30,000 ரூபாய் போனசும் அளிக்கப்படும். மற்றும் சிறப்பு சலுகைகளும் பெறலாம். வயது வரம்பு இல்லை ஆண் - பெண் இருபாலரும் பணியாற்றலாம். நேரில் அணுகி வாய்ப்பு பெறலாம்.

போரூர், வளசர வாக்கம், பூந்தமல்லி, மதுரவாயல், கே. கே. நகர், வடபழனி, கோடம்பாக்கம், மாம்பலம் ஆகிய பகுதிகளில் இத்திட்டத்திற்கு சூப்பர்வைசராகவும் ஏரியா அதிகாரியாகவும் பணியாற்றுவதற்கு பட்டதாரிகள், (தேறிய, தவறிய) பெண்களும், ஆண்களும் சான்றிதழ்களுடன் நேரில் அணுகவும்.

எங்களது ஜானகி ரியல் எஸ்டேட் நிறுவனத்தில் போரூர், வளசரவாக்கம், விருகம்பாக்கம் பகுதிகளில் அரசு அங்கீகாரம் பெற்ற மனைகளும், பட்டா மனைகளும் விற்பனைக்குள்ளன. அணுகவும். உறுப்பினர்களுக்கு விசேஷ சலுகை உண்டு.





**B. Mohan Kumar** B.Sc., B.L.
Government Advocate
High Court

திரு விருகை ஜெயராமன் அவர்களுக்கு

வணக்கம், நான் தங்களின் முத்தான முக்கனித் திட்டம் பற்றி கேள்விபட்டு அதில் உறுப்பினராகும் வாய்ப்பு பெற்றேன். நம் சமுதாயத்தில் ஏழை நடுத்தர வர்க்கம் மற்றும் அனைத்து மக்களும் பயன் பெற தக்க வகையில் அமைந்துள்ள இத்திட்டத்தில் அனைவரும் பங்கு பெற்று பயன் அடைய வேண்டும் என்பது என் அவா!

தங்கள் திட்டம் பயன் பெற என் உளமார்ந்த வாழ்த்துக்கள்.

ஆசீர்வாதத்துடன்
பி. மோகன்குமார் B.Sc., B.L.
அரசு வழக்கறிஞர்
24.1.95



காந்திமதி
சினிமா நடிகை

ஒரு விரல்
கிருஷ்ணாராவ்
சினிமா நடிகர்

கலைஞர்களாகிய நாங்கள் கனிவோடு சொல்கிறோம். இனிய இத்திட்டத்தில் ஏற்கனவே நாங்கள் உறுப்பினராகி விட்டோம், நீங்களும் உறுப்பினராகி பயன் பெற வேண்டுகிறோம்




உறுப்பினர்களுக்கு மட்டும் விசேஷ சலுகையாக எங்கள் ஜானகி ரியல் எஸ்டேட் - ல் பூந்தமல்லி "ஹைவே ஹோட்டல்" அருகில் உள்ள வீட்டு மனைகள் 1 கிரவுண்டு (2400 சதுர.அடி) ரூ. 10,000க்கு தவணை முறையில் தரப்படும் ரூ. 2500 செலுத்தினாலே பத்திரம் ரிஜிஸ்டர் செய்து தரப்படும். நீங்களும் உறுப்பினராகி வீட்டு மனைக்கு சொந்தக்காரராவீர்!



• எலுமிச்சம் பழம், கிடாரங்காய் போன்ற வற்றில் ஊறுகாய் போடும் பொழுது, கடுகு தாளிப்பதற்கு பதில், சிறிது சோம்பு தாளித்துப் பாருங்கள். ஊறுகாய் கமகம வென மணம் வீசுவதுடன், எளிதில் ஜீரணமும் ஆகும்.

—பாலா.

முடிவதில்லையே...''

''தென்னகத்தில் மட்டும்தான் அப்படி இருந்தது. இப்போது அதுவும் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வருகிறது. நிறைய இளம் பெண்கள் வெள்ளி நகைகளை 'ஆன்டிக் ஃபினிஷ்' அதாவது பழங்கால நகை போன்ற தோற்றத்தில் அணிய ஆரம்பித்து இருக்கிறார்கள். மற்றொன்று தங்க நகைகளை இடுப்புக்குக் கீழ் பெண்கள் அணிவதில்லை. ஆனால் வெள்ளியில் பாதம் வரை அணியலாம் அல்லவா? அந்த வகையில் தலை முதல் கால்வரை வெள்ளியை டிசைன் டிசைனாக அணிய முடிகிறது. இப்போதைய நிலவரப்படி எத்தனை நகைகள் இருந்தாலும் 'டெம்ப்பிள் ஜுவல்லரி'யும் ஒன்று இருக்க வேண்டும் என்ற அளவிற்கு நாங்கள் மக்களின் மனதில் இடம் பிடித்து விட்டோம்...!''

விதவிதமாக நகைகள் அணிய வேண்டும் என்று விரும்புகிறவர்களுக்கு இவை உகந்தவை என்றுதான் சொல்ல வேண்டும். கொலுசுகளிலே விதவிதமாக இருப்பது போல தலையிலே அணியும் நெத்திச் சுட்டியிலும் ஏராளமான டிசைன்கள்.

''நடனமாடுபவர்கள் உங்களிடம் நகைகள் வாங்குகிறார்கள் என்கிறீர்களே! நடனமாடும் ஆண்களின் நகைகளுக்கும், பெண்களின் நகைகளுக்கும் வித்தியாசம் உண்டா?''

''பெண்கள் நிறைய நகைகளை அணிகிறார்கள். நடன நகைகளிலே சிவப்பு, பச்சைக் கற்கள் ரொம்பப் பிரபலம். இவற்றை வரிசையாகப் பெண்கள் அணிவார்கள். பொதுவாக நடனமாடும் பெண்கள் நகைகளை தங்கள் உடைகளோடு தைத்துக் கொள்வதால் அவர்கள் ஆடும்போது கலைவதில்லை. ஆனால் ஆண்கள் மேலே வெற்று மார்பில்தான் ஆபரணங்களை அணிய வேண்டியதாக இருக்கிறது. எனவே ஒன்றிரண்டு நகைகளை மட்டுமே அணிகிறார்கள். மற்றபடி கைக்கு வங்கி எல்லாம் அணிவார்கள்...''

''நீங்கள் புதிதாக ஏதாவது டிசைன் உருவாக்க திட்டம் போட்டு இருக்கிறீர்களா...?''

''நாகரீகம் என்பதே பழமையிலிருந்து வருவதுதான். அதுவும் நம் நாட்டில் இருந்த கலாசாரம், கலையழகு, வேலைத்திறன் என்பதெல்லாம் தோண்டத் தோண்ட சுரங்கம் போன்றதுதான். ஒரு சிறிய நகையிலே எத்தனை வேலைப்பாடுகள் செய்திருக்கிறார்கள்! அவற்றின், அவர்களின் பெருமையை எல்லாம் நாம் உலகறியச் செய்தாலே போதும். அந்த வகையில்தான் நாங்கள் ஒவ்வொரு வருடமும் கண்காட்சியாக நடத்துகிறோம். ஆயிரக் கணக்கானவர்கள் வந்து பார்க்கிறார்கள். நிறைய நகைக் கடைக்காரர்கள் வந்து டிசைன்களை எடுத்துச் செல்வது கூட உண்டு.

இந்த வருடம் பழமையான 'டெம்ப்பிள் ஜுவல்லரி' இன்றைய நவீன நாகரீக மங்கைகளுக்குக் கூட பொருந்தும் என்பதை நிரூபிக்க கண்காட்சியிலேயே ஒரு 'ஃபேஷன் ஷோ' கூட வைத்தோம். எந்த மாதிரி உடைகளுக்கு எந்த நகை பொருந்தும் என்று அழகுக் கலை நிபுணர் மைதிலிபாபுவைக் கொண்டு அந்த ஷோவை நடத்தினோம்...''

மொத்தத்தில் இவர்களும் நம் கலாசார தூதுவர்களாகவே செயல்படுகிறார்கள் போலும்!

-ஷோபா

# எழுத்துக்கு வயது ஏது?



**ஹே**ரியட் டோயெர் என்ற பெண் இரண்டு நாவல்கள் தான் எழுதினார். அதுவும் ஒன்றுக்கொன்று நீண்ட கால இடைவெளியில், இருந்தாலும் அவை உலகப் புகழ் பெற்று விட்டன!

ஹேரியட்டுக்கு 73 வயதாக இருந்தபோது அவரது முதல்நாவல் Stones for Ibarra வெளிவந்தது. அந்தப் புத்தகத்திற்கு 1984-ம் ஆண்டுக்கான அமெரிக்க புத்தகங்களில் சிறந்தது என்ற விருது கிடைத்தது. பத்து ஆண்டுகள் கழித்து அதாவது ஹேரியட்டின் 83 வது வயதில் இரண்டாவது நாவல் வெளி வந்தது. Consider this Senora என்ற அந்த நாவல் அமெரிக்காவில் அதிகமான பிரதிகள் விற்பனையாகும் பத்து புத்தகங்களில் ஒன்றாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

ஹேரியட் கல்லூரியில் படித்துக் கொண்டு இருந்தபோது படிப்பை விட்டு விட்டு, உடன்படித்த இளைஞர் ஒருவரைத் திருமணம் புரிந்து கொள்ள, அவரோடு மெக்ஸிகோவிலுள்ள வசதி ஏதுமில்லாத கிராமம் ஒன்றுக்குக் குடியேறினார். கையில் ஒரு குழந்தை வேறு.

தொடக்கத்தில் முன்பின் பழக்கமில்லாத, மொழிபுரியாத கிராமம் ஒன்றில் வாழ்க்கை நடத்துவது கண்களைக் கட்டிக் காட்டில் விட்டதைப் போல் இருந்தாலும், நாள் செல்லச் செல்ல தனது கணவர் ஒரு அற்புதமான திருமணப் பரிசைக் கொடுத்திருக்கிறார் என்று ஹேரியட் உணரத் தொடங்கினார்.

ஹேரியட்டின் இரண்டு நாவல்களும் மனித வாழ்வின் நிலையான உணர்ச்சி களான

காதல், சோகம், சாவு போன்றவற்றைச் சுற்றிச் சுற்றிப் பின்னப்பட்டுள்ளன. மெக்ஸிகோ நாட்டிற்கே உரிய கடைக்காரர், வேலைக்காரப் பெண்கள், மதகுருமார்கள், அதிகாரிகள், நிலச்சுவான்தார்கள் போன்றவர்களை மிகவும் வித்தியாசமாக எடுத்துக் காட்டுகின்றன. அதன் விளைவு, அவரது நாவல்கள், பலரது கவனத்தைக் கவர்ந்தன.

இரண்டு நாவல்களிலும் வெளிநாட்டினர் மெக்ஸிகோவிற்கு வந்தாலும், அவர்கள் தம் தாய்நாடுகளுக்குத் திரும்பும் போது எந்தவித மாற்றமும் அடையாமல் திரும்புவதாகக் காட்டப்படுகின்றன.

இருபது ஆண்டுகளுக்குமுன் அன்புக் கணவர் இறந்து போக, பெற்ற இரண்டு குழந்தைகள் பெரியவர்களாக வளர்ந்து போக, ஹேரியட் டோயெர் இப்போது அரைகுறையாக விட்ட கல்வியை மீண்டும் கற்கத் தொடங்கினார்! கலிஃபோர்னியாவிலுள்ள ஸ்கிரிப்ஸ் கல்லூரியில் கலைக் கல்வி பயின்றார். பின்னர், எழுதுவது எப்படி என்று கூடப் படித்தார்.

ஹேரியட் மிகவும் நிதானமாக எழுதுபவர். சில சமயங்களில், ஒரு அத்தியாயம் எழுத அவருக்கு மாதக் கணக்கில் கூட காலம் தேவைப்படுகிறது. எதையும் மனத்தில் முற்றிலுமாய் தேக்கி வைத்து, வார்த்தைகளாக வடிக்கிறார்.

எழுதுவது தனக்குச் சரியான சமயத்தில் கை வந்தது என்று ஹேரியட் பெருமையாகச் சொல்கிறார். முன்பு நினைத்துக் கூடப் பார்க்காததெல்லாம், எழுதத் தொடங்கியதால், உள்ளத்தில் ஓவியமாக வந்து நிலைபெறத் தொடங்கிவிட்டன என்று அவர் பெருமைப்படுகிறார்!

–'ஸ்பானி' விருந்து

**-சேலம் சக்திக்கொடி**

## குழந்தைகளுக்கு டைரி

என் பள்ளியில் படிக்கும் பெண் வருடம் ஆரம்பித்தவுடன் தனக்கு ஒரு புது டைரி வேண்டும் என்று கேட்டாள். தொல்லை பொறுக்க முடியாமல் டைரி ஒன்று கொடுத்தேன். சமீபத்தில் ஒரு நாள் அவள் டைரியில் என்ன எழுதியிருக்கிறாள் என்று பார்ப்பதற்கு எடுத்தேன். டைரியைப் பார்த்தவுடன் அசந்து விட்டேன். அவளுடைய அடுத்த நாள் வேலைகளை முதல் நாள் இரவே எழுதி வைத்துவிடுவாள். முதலில் மிக முக்கியமான வேலைகளை Must என்றும் Desirables என்றும் பிரித்து எழுதிவிட்டு பின் கீழே அவள் படிக்க வேண்டிய பாடங்களை டைம்டேபிள் போட்டு எழுதியிருந்தாள். அதில் டீ.வி.க்கு, டின்னர், படிக்க வேண்டிய நேரம் எல்லாம் அடங்கும்



இந்தக் கால குழந்தைகள் புத்திசாலிகள். 10 வயதிற்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு இந்த மாதிரி டைரி எழுதும் பழக்கம் ஏற்படுத்திக் கொடுத்தால் சுய கட்டுப்பாடு வளரும்.

- பத்மாவதி ராதாகிருஷ்ணன்

# வெற்றிக் குதிரை

– கோபிநாத் ஆத்ரேயன்

"அம்மா! நாந்தான் பவர்லூம் பட்டறைக்கார மனுசனை கலியாணம் பண்ணிக்கிட்டுக் கஷ்டப் படறேன்! தங்கச்சி சொர்ணமாவது ஒரு உத்தியோகஸ்தனைக் கட்டிக்கிட்டு சொகப்படட்டும்!"

பிளாஸ்ட்டிக் தாளில் வில்லை, வில்லைகளாய்க் காய்ந்திருந்த இலந்தப் பழ வடைகளை பிய்த்து எடுத்த ஜீவரத்னம்மாவின், தோளில் சாய்ந்து கொண்டாள் சவுந்திரவல்லி.

"ஏம்மா இவ்வளவு சலிப்பு? மாப்பிள்ளைத்தான் உன்னைக் கையில வெச்சிக்கிட்டு தாங்குது! நீ என்னடான்னா...?"

"போம்மா! என்ன தாங்குறாரு? என்னடா பொண்டாட்டி புள்ளைத்தாச்சிப் பொம்பளையாச்சே? கூடவே இருப்போம்! கோயிலு, கொளம்னு கூட்டிட்டுப் போலாம்னு தோணுதா அந்த மனுசருக்கு?"

"ஏம்மா... மாப்பிள்ளைதான் நல்ல மனுசராச்சே! கெட்டப் பளக்கம்லாம் இல்லாதவராச்சே?"

"பொழுதா பொழுதுக்கும், பட்டறையே கதி! நல்ல எக்ஸ்போர்ட் ஆர்டர் கெடைச்சாலும் கெடைச்சது! விட்டா நைட்டும் அங்கியே படுத்துக்கும். காசு காசுன்னு அலையுது!"

"ஏம்புள்ளை! பொழுதனிக்கும் உம் முந்தானையையே புடிச்சிக்கிட்டுத் திரிஞ்சா பூவாவுக்கு வழி?"

பாசத்தோடு மகள் தலையை நீவி விட்டாள் அம்மா ஜீவரத்தினம்.

"கலியாணமாயி ஒரு பத்து நாள், கூட இருந்தாப்பலே! அவ்வளவுதாம்மா! பாவா (கணவன்) பட்டறைதான் எனக்கு மொத சக்களத்தி!





போ!"

நீண்ட பிளாஸ்டிக் பைகளில் ஒவ்வொன்றாக இலந்தை வடையை வைத்து நுனியை மெழுகு வர்த்தியில் காட்டி ஒட்டிக் கொண்டிருந்த அம்மா நிமிர்ந்தாள்.

"பயித்தியகாரத்தனமாப் பேசாதடீ!"

"அதனாலத்தான் சொல்றேன் ஒரு உத்யோகஸ்தனுக்குக் கட்டி வையி சொர்ணலெஷ்மிய! தொழில் பண்றவன் வேணாம். காசு மட்டும் சம்பாரிச்சாப் போதுமா? அத அனுபவிக்கணும்! சும்மா காசு சேத்து வச்சி, கெழவங் கெழவியாவறதுதான் மிச்சம்!"

எரிச்சல் காட்டினாள் சவுந்தரவல்லிராதாகிருஷ்ணன்.

சவுந்தரி பக்கத்துத் தெருவிலதான் குடியிருக்கிறாள். ஒரு கிலோ மீட்டர் தொலைவில் வீராணம் மெயின் ரோட்டில் பனிரண்டு விசைத்தறிகள் கொண்ட சின்ன பவர்லூம் பட்டறை வைத்திருக்கிறான் ராதாகிருஷ்ணன். இப்போது ஜாப் ஓர்க்காக சர்ட்டிங் துணிகளை எக்ஸ் போர்ட்டுக்காக ஆள் வைத்து நெய்பவன்.

நாயுடு டெக்ஸ் என்ற பெயரில் தொழில் அமோகமாக நடப்பதன் விளைவு தீபாவளி, புத்தாண்டு, பொங்கல் என்று புதிதாக சவுந்தரிக்கு இருபத்தைந்து பவுன் நகை வாங்கி இருக்கிறான். மூணு ஷிப்டுகள் ஓட்டி நல்ல லாபம். இருப்பினும் இன்னும் அதிக நேரம் கணவன் தன்னுடன் கழிக்க வில்லையே என்று சௌந்தரி குறைபட்டுக் கொண்டிருந்தாள்.

"ஆமா அந்த கூட்டுறவு பாங்க் குமாஸ்தா மாப்பிள்ளை என்னாச்சி? ஜாதகம்லாம் பொருந்தி இருக்குன்னாரே நைனா?"

"நகை சீரு செனத்திதாம் பொருந்தலை சௌந்தரீ! பாங்க் வேலைன்னா என்னா பெரிய மன்மோகன் சிங்குன்னு எண்ணமா?..." மோவாயினைத் தோளிலே இடித்துக் கொண்டாள்.

"முப்பத்தஞ்சி பவுனு போட்டு... மாப்ளைக்கு டூ-வீலர் வாங்கித் தந்து, மிக்சி, கிரைண்டர், கட்டில் பீரோ, மெத்தைன்னு கேக்கறாங்க! கூட மாப்பிள்ளைக்கு மூணு பவுன்லே செயினு ஒரு பவுன்ல மோதிரம் ஒரு பவுன்ல கோல்ட் ஸ்ட்ராப்பாம்..."

"பகல் கொள்ளையால்ல இருக்கும்மா!"

"கணக்குப் போட்டா ரெண்டு ரெண்டரைக்கு ஆகுது! எங்கியாவது ஏ.கே 47 கொண்டுக்கிட்டு போயி கொள்ளை அடிச்சாத்தான் முடியும்!"

கலர் ஜவ்வரிசி வற்றலை பேக் பண்ணத் துவங்கினார் அம்மா! அவர் வேலை அவருக்கு!

"ஏம்மா...? வாழப்பாடிலேந்து ஜானகிராமன்னு ஒரு மாப்பிள்ளை வந்து பாத்தாங்களே? என்னாச்சி? நாந்தான் அவங்கூட்ல, விசேசமின்னு போயிட்டேன் என்ன நடந்துச்சி?"

"ஜெயராமுலுண்ணா! நானும் மூணு பெண்ணைக் கட்டிக் குடுத்தவ! பொண்ணுங்க கல்யாணம்னா என்னன்னு அனுபவப் பட்டவ! மத்தவங்க மாதிரி கலந்துக்கிட்டு கடுதாசி போடறன்கறதோ யோஜனைப் பண்ணிட்டு சொல்றேங்கறதோ நம்மகிட்ட இல்லைங்கண்ணா!"

"விஷயத்தை சொல்லும்மா தங்கச்சி! – ஜெயராமுலு சொர்ணலஷ்மியின் அப்பா விஷயந் தொட்டார்.

"எம் பையனுக்குஞ் சரி, எங்கூட்லயும் எல்லாத்துக்கும் சரி! பொண்ணை ரொம்பப் புடிச்சிருக்கு! பாவா(கணவர்) சம்மதஞ் சொல்லிட்டார்... மே கொண்டு லௌகீகம் பேசலாங்களா?"

சோபா-கம் பெட்டில் நிமிர்ந்து உட்கார்ந்தாள் தனலட்சுமி.

"நமக்கு அதிகம்லாம் வாணாம்ணா. பொண்ணுக்கு இருவது பவுன் போட்ருங்க! சீரு செனத்தில்லாம் உங்க இஷ்டம்! கல்யாணத்தை சிம்பிளா எங்கயாவது திருப்பதிலயோ... இல்ல சீரங்கத்துலயோ வச்சிக்கலாம்! லோக்கலா ரிசப்சன் வச்சிக் கலாம்ணா!"

"நல்ல விஷயந்தேன்!"

"அதோட பையனுக்கு மூணு பவுன் போட்டுங்க... ஆனா மொத்தம் இருவத்தி மூணு பவுனையும் ரொக்கமாக் கைலத் தந்திடுங்க! அவ்வளவுதான்!"

"ஆமாங்க பாவா! (மாமா) நான் பண்ணையம் பண்றேன். பையன் ஜானகி பி.ஏ. படிச்சி முடிச்சிட்டு... சுயவேலை வாய்ப்புத் திட்டத்திலே லோன் வாங்கி...வாழப்பாடி பஸ் ஸ்டாண்ல காஃபி பார் வச்சிருக்கான்!..."

"நகைப் பணத்தை வெச்சிக்கிட்டு பக்கத்திலயே அன்னபூரணி விலாஸ்னு ஒரு அய்யிரு ஓட்டல் வெலைக்கு ஜாமான் செட்டோடு வருது. உடுப்பிக்கார அய்யர் சொந்த ஊருக்கே போறாரு! கைலருக்கற பணத்தையும் போட்டுப் பண்ணலாமின்னு யோஜனை! அதாம் பணமாக் கேக்கறோம்."

"ஆமாண்ணா! ஒரு அய்யிரை கல்லாவில ஒக்காத்தி வெச்சிட்டு, பிராமணாள் ஓட்டல்னு நடத்தறதா உத்தேசம்! ஃபர்னிச்சர்லாம் மைக்கா ஒட்டி, ஃபிரிட்ஜ், வசதில்லாம் பண்ணனும்..."

"நகையாப் போட்டா எப்படியும் விக்கத்தாம் போறம்! கடை ஓட ஓட நகை பண்ணிக்கலாம்! பணமாவேத் தந்தீங்கன்னா... தேவலை!"

"யோஜனை பண்ணி சொல்லியனுப்பறோமுங்க!"

எழுந்து சவுந்தரியின் நைனா ஜெயராமுலு கை கூப்பினார்.

"என்னாக்கா...? என்னோட கலியாணம் பெரிய தேசியப் பிரச்சனையா? இவ்வளவு சீரியசாப் பேசிட்டிருக்கீங்க!"

உள்ளே வந்த சொர்ணலஷ்மி கைப்பையை பீரோவில் வைத்தாள்.

"அம்மா லீ பஜார்லேந்து ஜவ்வரிசி, எலந்தப்பழம், கௌங்கு மாவு, நாட்டுச் சக்கரை, எசன்ஸு, வெல்லம் எல்லாம் ஆட்டோல இருக்கு! வா ஒரு கைப் புடி! உள்ளார எடுத்து அடுக்கிடலாம்!" மெல்லிய குரலில் இரைந்தாள்.

கையை ஊன்றி எழ முயன்றவளை முறைத்தாள் சொர்ணா!

"உஷ்! புள்ளைத் தாச்சியா... லெச்சணமா இரு! என்ன?"

அதட்டி விட்டு அம்மா கையை தன் முந்தாணியில் துடைத்தபடியே பின்னே போனாள்.

எல்லா சாமான்களையும் அதனதன் இடத்தில் வைத்து விட்டு நைட்டிக்குள் நுழைந்தாள் சொர்ணா. வந்து எதிரே உட்கார்ந்தபடி அக்காவைப் பார்த்தாள்.

"என்னாக்கா நைட்டெல்லாம் உய்யலாலாவா! கண்ணுல ஒரே செவப்பு!"

"ச்சீய் போடி" தங்கையின் கன்னத்தை நிமிண்டினாள்.

"ஆமா நைனா எங்க?" அம்மா ஜீவரத்னம்மா வந்தார்.

"வசூலுக்குப் போயிருக்காப்பலே!"

சொர்ணா அம்மாவின் மடியில் படுத்துக் கொண்டாள்.

"ஏம்மாடி சொர்ணம்! செலவு ஆனாலுஞ் சரின்னு பேங்கு மாப்பிள்ளையவே பேசி முடிச்சிடலாம்னு அக்கா சொல்றாம்மா. எப்படி உன்னோட யோசனைம்மா?"

"நல்ல வேளை கேட்டியே ரொம்ப சந்தோஷம்மா!"

அம்மாவின் கைகளை எடுத்துக் கண்ணிலே ஒற்றிக் கொண்டு, சட்டென 'பச்சக்' என்று முத்தம் இட்டாள் சொர்ணா.

"அம்மா வாழப்பாடி மாப்பிள்ளையவேக் கட்டி வச்சிரம்மா!"

**முதல்நாள் செய்த இட்லி (மீந்து விட்டதை) உப்புமா போல செய்யும்போது இட்லி சிறு உருண்டைகளாக இருப்பதைத் தவிர்க்க தாளித்த எண்ணெயில் இட்லியை உதிர்த்துப் போடும் முன் இரண்டு ஸ்பூன் நல்லெண்ணெய்விட்டு உதிர்த்தால் பூப்போல வரும். பிறகு உப்புமா நன்கு உதிரியாக இருப்பதுடன் நல்ல மிருதுவாகவும் இருக்கும்.**

**—மயிலை கே.கற்பகம்**



"ஏண்டி உனக்கென்னாடி பயித்தியமா? போயும் போயும்... டீக்கடைக்காரனையா...?"

"சும்மாருக்கா! அவர் காஃபி பார் ஓனர்... கூலிக்குத் தறி ஓட்டறவரில்லே! கடனுக்கு ஜாமானா வாங்கி ரொக்கத்துக்கு விக்கறவரு! தெரியுமா?" சீண்டினாள் சவுந்தரவல்லியை.

"என்னா புள்ளை! பி.எஸ்.சி. படிச்சிட்டு டீக்கடைல வடை சுடப் போறியா?"

"ஏஞ் சுட்டா என்ன தப்பு! மாசச் சம்பளம் வாங்கற பாங்க் காரன்னா... கோவத்துல எலந்த வடை தட்டி விக்கற குடும்பந்தானேன்னு திட்டுவான். என்னால அதத் தாங்க முடியாது!..."

"உழைப்போட அருமை பெருமை தெரிஞ்ச விவசாயக் குடும்பம். அவங்களால அடுத்தவங்க உழைப்பை, கேவலமாப் பேச முடியாது! பேசவும் மாட்டாங்க! எல்லாத்துக்கும் மேல டப்பூ! பணம்!" காற்றைக் காசாக கண்டிக் காட்டினாள்.

"நிகரமா ஒரு நாளைக்கு நூத்தம்பதிலந்து எழுநூறு ரூவா கல்லாக் கட்டற வியாபாரம்! மாசம் நாலாயிரத்தி, ஐந்நூறுக்கு பஞ்சமில்லே! ராஜா வருமானம்! போதும்!"

"அடிப்பாவி! நகை வேணாம்... காசில்ல கேக்கறாங்க?"

"சும்மாருடீ! ஏம் பேங்க் காரன்னா பொண்டாட்டி நகைய அடமானம் வைக்க மாட்டானா? கேட்டா இல்லைன்னா சொல்ல முடியும்! பண்ணயக் காரங்க இல்லே! பொய் வரலை! வெளிப்படையா நெஜம் சொல்லினதேப் பெரிய விஷயம்! அவ்வளவு ஓப்பனா... பேசினத பாராட்ட வேணாம்! யோசிச்சாவது பாக்கணுமில்லே!" வக்காலத்து வாங்கினாள்.

"ஏண்டி காபிக் கடைக்காரனுக்காகவா நீ பட்டம் வாங்கின? யோசனை பண்ணும்மா?" மெல்ல அம்மா துவங்கினாள்.

"அம்மா இது அநியாயம்? நீ பேசறது அக்ரமம்! பெரிய பெரிய ஆபீசருங்களே பொண்ணு கல்யாணத்துக்கு நகை போட முடியாம தவிக்கறப்ப நம்ம நைனா ஆளாளுக்கு முப்பது பவுன் போட்டு, கலியாணச் செலவுக்கும் பணம் வச்சிருக்கறது எவ்வளவு பெரிய விஷயம்?"

"வாஸ்தவந்தாம்மா!" ஆமோதித்தாள் அம்மா.

"காரணம்? கேவலமாப் படற இந்த எலந்த வடை, ஜவ்வரிசி வடாகம், வத்தல், சுமர்கட் வியாபாரந்தாம்மா காரணம்! இதை மொதல்லப் புரிஞ்சுக்கம்மா."

"ஆமாந்ததாயி! திங்கிற சோத்தை பழிச்ச மாதிரிப் பேசிட்டேம்மா!"

"ஏண்டி? நாமதான் சின்ன வயசிலந்து பாக்கிட்டு ஓட்டினமே பத்தாது?"

"பத்தாது... அவர் டீக்கடைலந்து ஓட்டலுக்கு போனா... நானும் நாலு பொம்பளைங்களை வச்சிக்கிட்டு அப்பளம், வடாம் போட்டு பிளாஸ்டிக் கவர்ல மாடர்னா பாக் பண்ணி விப்பேன்! எக்ஸ் போர்ட்டும் பண்ணுவேன்! ரண்டே ரண்டு வருஷம் போதும்ங்கா! நிமிந்திர்லாம்..."

"சமைக்கறது, புள்ளைப் பெத்துக்கறது மட்டும் பொம்பாட்டி வேலை இல்லக்கா! புருஷன் கமையப் பகிர்ந்து ஆலோசனை சொன்னா மட்டும் போதாது! அடுப்படியையும், பெட்ரூமையும் விட்டுட்டு வெளில வா!..."

"நான் வரணும்னு நெனைக்கறன்! நம்மாலும் முடியும்க்கா! அம்மா கடனுக்கு அழுவறா மாதிரிப் பண்ணன இதே இலந்த வடை சமாச்சாரத்தை, இன்னும் ஈடுபாட்டோட, துடிப்பா செஞ்சிருந்தா இன்னும் நல்லா வளர்ந்திருப்போம்! யோசிங்கம்மா! ஜெயிக்கற குதிரை மேலதாம்மா பணங் கட்டணும்!"

சரேல் என்று எழுந்தவள் எலந்த வடைளையும் கவரில் போட்டு ஒட்டத் துவங்கினாள்.



பிறரை நிந்தனை செய்வதன் வாயிலாக ஒருவன் தனது கௌரவத்தைத் தேடக் கூடாது. அவன் தன்னுடைய நல்ல குணங்களாலேயே மேன்மையை தேடிக் கொள்ள வேண்டும்.

(மகாபாரதம்) – ஆர்.பார்த்திபன்.

**இந்த மாதம் ஆன்மீகப் பக்கங்கள் அதிகமாப் போச்சு!**

# மனம் சாந்தி பெறும் மார்க்கம்

## திங்களூர்

தள்ளாத வயதிலும் சைவ மதம் தழைக்க வேண்டும் என பாதம் நோக நாடு முழுக்க நடந்து, கைலாசநாதரை ஒவ்வொரு திருக்கோயிலிலும் பாடி மக்களிடையே பக்தி மார்க்கத்தை பரப்பிக் கொண்டு இருந்தார் திருநாவுக்கரசர் எனும் அப்பர் அடிகள். திங்களூர் வருகிறார். எங்கு பார்த்தாலும் அப்பர் அடிகளின் பெயர். தண்ணீர்ப் பந்தலுக்கா... இவர் பெயர்! வாசக சாலையா? இவர் பெயர்... எல்லாப் பொதுத் தொண்டு காரியங்களுக்கும் திருநாவுக்கரசரின் பெயர் சூட்டப்பட்டிருந்தது.

"இது என்ன விந்தை...? என் பெயர் ஏன் இங்கெல்லாம்...?"

தள்ளாமையில் சுருங்கித் தளர்ந்த தசைகள் வியப்பில் விரிய கண்கள் மலர்ந்து பார்க்கிறார். குழுமியிருந்த பக்தர்கள் சொன்னார்கள் -

"ஐயா, உங்கள் பரம பக்தர் ஒருவர் இங்கு இருக்கிறார். அப்பூதி அடிகள் என்பது அவர் பெயர். அவர் செய்யும் எல்லாச் சேவைகளுக்கும் உங்கள் பெயரையே வைத்திருக்கிறார்..."

"இது என்ன வேடிக்கை... என் அப்பன் சிதம்பரநாதன் அந்தக் கைலாசநாதன் பெயர் வைக்கட்டும். இல்லையேல் கைங்கர்யம் செய்யும் அவர் பெயரையே வைத்துக் கொள்ளட்டுமே..."

ஓடிவந்து தடாலென்று பாதம் பணிந்தார் அப்பூதி அடிகளார்.

"ஐயனே, உங்களைவிட மேலானவர் ஒருவர் உண்டோ? தொண்





• சந்திரன்

• சந்திர புஷ்கரணி



மங்கையர் மலர்



&



எம். ஜி. நாயுடு தம்பதியினர்
நினைவாக

## நாயுடு ஹால்

தரும்

## ஆன்மீகப் பக்கங்கள்

டருக்குத் தொண்டு செய்யும் பாக்கியம் பெற எனக்கு வரம் அருளுங்கள்.. திருத் தொண்டரான தங்களின் அடிமை நான்...''

அவர் பக்தியின் செம்மையை மெச்சிய திருநாவுக்கரசர் பகலுணவு செய்ய அப்பூதி அடிகள் இல்லம் சென்றார். அமுதனைய உணவு தயார் செய்திருந்தனர். அவர்களின் ஒரே மகன் உணவு உண்ண வாழை இலையை நறுக்க தோட்டத்திற்குச் சென்றவன் நாகம் கடித்து அங்கேயே இறந்து விட்டான்.

அப்பூதி அடிகளும், அவர் மனைவியும் தன் ஒரே மகன் இறந்ததை உள்ளத்தில் போட்டு இறுக்கினர். திருநாவுக்கரசரை சகல உபசாரங்களுடன் விருந்துண்ண அழைத்தனர். அதுவரை ஓடியா

**மஞ்சுளா ரமேஷ்**



• பெரியநாயகி அம்மன்

டிய பையனைக் காணவில்லையே, 'அவ னையும் கூப்பிடுங்கள். என்னோடு உண வருந்தட்டும்' என்றார். பல சாக்கு சொல்லி பலிக்காமல் போனபோது பெற்ற வயிறு கதறிவிட்டது.

திருநாவுக்கரசர் பிரமித்துவிட்டார். இப்படியும் ஒரு பக்தியா? பெற்ற மகன் துடிக்கத் துடிக்க இறந்ததைக் கூட மறைத்து, வந்த விருந்தினருக்கு அறு



சுவை உணவா?

மகனை எடுத்து வரச் சொன்னார். துள்ளிக் கொண்டு ஓடிய சிறுவனை நீலம் பாய்ந்த சடலமாகக் கொண்டுவந்து போட்டார்கள். முற்றும் துறந்த அந்த மகா முனிவரின் மனம்கூட கலங்கிவிட்டது.

'நீலம் உண்ட கண்டனே! உன் அடி மையான என்பால் பற்று கொண்ட இந்த அடியவருக்கு இப்படி ஒரு துக்கம் நேர லாமா? எனத் தொழுதார்.

**'ஒன்று கொலாமவர் சிந்தையும் வரை யொன்று கொலா முயரும் சூடுவ...'**

என விடந்தீர்ந்த திருப்பதிகம் பாடி னார். சிறுவன் தூங்கியெழுந்தாற் போல கண்மலர்ந்தான். பார்த்துக் கொண்டிருந்த அத்தனை பக்தர்களும் மெய்சிலிர்த்துக் கரம் கூப்பினார்கள்.

அப்பேர்ப்பட்ட திருப்பதியில் இன்று வரை நாகம் தீண்டி இறந்தவர்கள் யாரு மில்லை என்பது கண்கூடு. இத்தனை சிறப்பு வாய்ந்த ஊர்தான் திருவையாறு கும்பகோணம் போகும் வழியில் முனி யாண்டவர் கோவிலில் இருந்து ஒரு மைல் தொலைவில் உள்ள திங்களூர்.

திங்களூரைச் சமீபிக்கும்போதே, அப்படி ஒரு குளிர்ச்சி இருப்பது ஆச்சர்ய மாகத்தான் இருக்கிறது. பச்சைப் பசே லென்று வயல்களும், சிலுசிலுவென்று காற்றுமாக இருப்பது காரணமா? இல்லை குளிர்ச்சிக்கே நாயகனான சந்திரன் இங்கே க்ஷேத்ர நாயகனாக வீற்றிருப்பது காரணமா எனத் தெரியவில்லை!

இங்கு கோயிலில் உறையும் சுவாமியின் பெயர் கைலாசநாதர். அம்பாள் பெரிய நாயகி அம்மன். இத்திருத்தலத்தில் ஆண்டுதோறும் பங்குனி உத்திரத்தன்று சிவலிங்கத்தின் மேல் காலை 6.00 மணிக்கு சூரிய ஒளி படும். மறுநாள் (பிரதமையில்) மாலை 6.30 மணிக்குச் சந்திர ஒளி படுகிறது. எனவே சூரியனும் சந்திரனுமே இங்கு வந்து தொழுவதாகக் கொண்டு ஒவ்வொரு வருடமும் இந்த இரண்டு நாளும் இங்கு சூரிய பூஜை, சந்திர பூஜை செய்கிறார்கள்.

சந்திரன் தண்ணொளி தருபவன். சூரிய னுக்கு நேர் எதிர்க்குணங்கள் கொண் டவன். பதினாறு கலைகள் உடையவன். வெள்ளை உடை. குளிர்ச்சி குணம். நிவே



# TAMILNADU PEOPLE'S BENEFIT FUND (PURASAWALKAM) LTD.,

79, Perambur Barracks Road, Purasawalkam, Madras - 600 007.
Central Government Approved (Reg. No. 18-21907/91) ☎ 5323360

## DEPOSIT SCHEME

| | 46 Days | 3 Months | 6 Months | 1 Year | 2 Years | 3 Years | 5 Years |
|---|---|---|---|---|---|---|---|
| FIXED DEPOSIT | 13% | 14% | 15% | 17% | 18% | 19% | 20% |

## 20% FOR SENIOR CITIZEN SPECIAL SCHEME

**for Rs. 10,000/- and above 1 Year**

*Your Deposit Doubles in 45 months Triples in 72 months.*

| | Rs | 1 Year | 2 Years | 3 Years | 45 Months | 72 Months | 90 Months |
|---|---|---|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 1,000<br>5,000 | 1,180<br>5,920 | 1,430<br>7,150 | 1,730<br>8,650 | 2,000<br>10,000 | 3,000<br>15,000 | 4,000<br>20,000 |

## "TAMILARASAN PORKUVIYAL" SCHEME

| | Rs | 15 Year | Rs. | 5 Years |
|---|---|---|---|---|
| CASH CERTIFICATE | 7,500<br>9,000 | 1,25,000<br>1,50,000 | 25,000<br>35,000 | 72,000<br>1,50,000 |

## "SENTAMIL SELVAKUVIYAL" SCHEME

| Rs, | 21 Years |
|---|---|
| 500<br>250 | 35,000<br>17,500 |

## மங்கையர் திருமண திட்டம்

மாதம் ரூ.100/- வீதம்
60 மாதங்கள் மட்டும் செலுத்தி
20ம். ஆண்டு முடிவில்
ரூ.1,50,000/- பெறலாம்

| | Rs. | 12 Months | 24 Months | 36 Months | 48 Months | 60 Months |
|---|---|---|---|---|---|---|
| RECURRING DEPOSIT | 50<br>100 | 660<br>1,320 | 1,430<br>2,860 | 2,360<br>4,720 | 3,600<br>7,200 | 5,030<br>10,060 |

**கடன்**
நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.315/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்
வட்டி வீதம் ரூ.1.75

## SAVINGS DEPOSIT INTEREST RATE 10% P.A

கொடுக்கல் வாங்கல் ரூ.1/- செலுத்தி பங்குதாரர்களாகிறவர்களிடம் மட்டும்

**Weekly Holiday Friday**

**Working Hours : Week Days: 8.30 a.m. to 5.00 p.m.** **Sunday: 8.30 a.m. to 1.00 p.m.**

| V. KRISHNAMOORTHY B.A., B.L.,<br>Secretary | A. THIAGARAJAN M.A.,<br>Executive Director | R.SUBRAMANIAN B.SC., B.L.,<br>President |
|---|---|---|

தனம் - தயிர்சாதம். தானியம் - பச்சரிசி; மலர் - அல்லி; ரத்தினம் - முத்து.

'தண்' ஒளியே தன் குணமாகக் கொண்ட சந்திரன் எனும் நவக்கிரக நாயகர்களில் ஒருவன் இங்கே அருளாட்சி செய்கிறான். சென்ற இதழில் சொன்னது போல இவ்வூரும் பரிகார க்ஷேத்திரமே. சந்திர தோஷத்தால் பீடிக்கப்பட்டவர்கள் இங்கே வந்து பரிகாரங்கள் செய்ய, அன்னவன் அருளாசி தந்து ஆறுதல் செய்கிறான் என்கிறார்கள்.

மிகப் பழைமையான கோயில். ஆயினும் மகத்துவம் வாய்ந்த ஸ்தல புராணமும், மகிமை வாய்ந்த சம்பவங்களும் நடந்த கோயில் இக்கோயில். இங்கு சந்திர புஷ்கரணி உள்ளது. அல்லியும் தாமரையும் மலர்ந்து மணம் வீசும் இப்புஷ்கரணியில் நீராடி கைலாசநாதரை வழிபட மனத்தில் சாந்தியை அக்குணத்திற்கு உரிய சந்திரன் அருளுகிறான்.

"மனித குணங்கள் கோபம், பொறாமை வருவதால் மாறுகிறது. மனம் குளிர்ச்சியாக இருந்தால் தீய எண்ணங்கள் வராது" என்பதற்கு இந்த க்ஷேத்ர மகிமை கண் கண்ட சாட்சி என்கிறார் இங்கு பூஜை செய்யும் தலவனேஸ்வர சிவாச்சார்யார்.

"உறவுகளுக்குள் ஏற்படும் சண்டையேயானாலும் சரி, கணவன் மனைவிக்குள் ஏற்படும் தகராறு ஆகட்டும். இங்கே வந்து பூஜை செய்து மனதார வேண்டிக் கொண்டால் சரியாகிவிடும். இப்படி வந்து நல்லபடியாக மாறிய பலரை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். சமீபத்தில் அப்பா மகனுக்குள் பெரிய தகராறு வந்து இங்கே வந்து பூஜை செய்தார் மகன். ஊருக்குத் திரும்பிப் போன அவர் அப்புறம் எந்தப் பிரச்னையுமில்லை என்று எழுதியிருந்தார்!" என்கிறார் இவர்.

சூரியன் தந்தையின் அம்சம் எனில், சந்திரன் தாயாரின் அம்சம். அன்னை

அருளே வடிவினள். அவளுக்குக் குளிர்ச்சி தான் தெரியுமே தவிர, வெப்பம், கோபம் அறியாள். அதனால்தான் இங்கு க்ஷேத்ர நாயகி பெரியநாயகித் தாயார் அன்னை அம்சமாக அருள்பாலித்துக் கொண்டிருக் கிறாள்.

இக்கோயிலில் ஆடி மாதம் திங்கட் கிழமை பௌர்ணமி விசேஷமானது. ஆடி, புரட்டாசி, பங்குனி மாதங்களிலும் விசேஷமாக பௌர்ணமி பூஜை செய் கிறார்கள். கோயிலுக்குச் செல்பவர்கள் பொதுவாகவே திங்கட்கிழமைகளில் செல் வது சிறப்பு. ஏனெனில் குளிர்ச்சிதரும் சந்திரனுக்கு உகந்த நாள் திங்கள்தானே!

பகலெல்லாம் உழைத்து வெம்மை யில் தகித்து வீடு நோக்கி ஓடிவரும் மக்களுக்கு இல்லம் குளிர்ச்சியைத் தரும். மாலையும் இரவும் மனத்துக்கு நிம்மதியை அமைதியைத் தரும். இர வுக்கு அதிபதியான சந்திரனை வழிபட் டால் மனத்தில் சாந்தி நிலவும். சந்திர காயத்ரியைச் சொல்லி அல்லி மலரானை வழிபடுவோமே.

ஒரே ஒரு விஷயம் மட்டும் இங்கே மனத்தை உறுத்தியது. இன்றைய பர பரப்பான வன்முறை டென்ஷன் உலகில் மனச்சாந்தியை அளிக்கும் இப்படிப்பட்ட கோவில்களின் மகத்துவத்தை நாம் உணர வேண்டும். ஆனால் குளிர்ச்சி தரும் சந்திரன் சாந்தசொரூபி என்ப தாலோ என்னவோ கோயில் போதிய பரா மரிப்பின்றி விளங்குகிறது.

படங்கள் : ராஜு

நவக்கிரக நாயகர் களின் பெருமையும், ஸ்தோத்திரமும், வழிபட உகந்த இடமும், வழித்தடங்களும்



# மேனியின் இளமைத் தோற்றத்தின் ரகசியத்தை கண்டு உணருங்கள்



சந்தனத்தின் அன்பான புதியதோர் அனுபவத்தை உமதாக்குவீர். ஆம் அழகுமிகு புதிய ஸந்தூர். இதில் இருக்கிறது மனதை சுண்டி இழுக்கும் சந்தனத்தின் சர்வதேச நறுமணம், வளமான-க்ரீமி நுரை மற்றும் மேனியின் இளமைத் தோற்றத்தின் சிதம்பர ரகசியம்.




ULKA-18322 TAM




# பூமி கேஸ்

இன்றே பெறலாம்
முன்பதிவு செய்ய
தேவை இல்லை



[illegible] பூமி பாட்டிலிங் கேஸ் கம்பெனியின் சேர்மன் & மானேஜிங் டைரக்டர் திரு. K.V.P. பூமிநாதன், MRL சேர்மன் திரு. S. இராமலிங்கம், அருணா குரூப் அதிபர் திரு. P. மருதப்பிள்ளை, MRL பைனான்ஸ் டைரக்டர் திரு. T. நாகநாதன், டாக்டர் நல்லி குப்புசாமிசெட்டி, [illegible] அட்வைசர் திரு. P. ஜோதிமணி, எல்லாரா கம்பெனி அட்வைசர் திரு. D.H.P. இரத்தினசாமி

**இந்தியாவிலேயே இரண்டு மாபெரும் கேஸ் பாட்லிங் பிளாண்ட்டுகளைக் கொண்ட ஒரே நிறுவனம்.**

தட்டுபாடில்லாத விநியோகம்.
ISI முத்திரை பெற்ற
உயர்தர ஸ்டவ் மற்றும்
கேஸ் சிலிண்டர்கள் -
பாதுகாப்பானது -
பயன்படுத்த சுலபமானது.

திறமை வாய்ந்த
டிஸ்ட்ரிபியூட்டர்கள் மற்றும்
டீலர்களைக் கொண்டது
பூமி கேஸ் நிறுவனம்.
விற்பனைக்கு பிறகும்
சிறந்த சேவை செய்கிறது.

11, 12 மற்றும் 17 கிலோ
அளவுகளில் கிடைக்கும்.
விபரங்களுக்கு
அருகாமையிலுள்ள
டீலர்களையும் எங்களது
தலைமை அலுவலகத்தையும்
அணுகவும்.




## பூமி பாட்டிலிங் கேஸ் கம்பெனி (பி) லிமிடெட்

*648, அண்ணா சாலை, சென்னை - 600 006. தொலைபேசி : 8273863 ஃபேக்ஸ் : 8278185*

டீலர்கள் இல்லாத ஊர்களில் டீலர்ஷிப் பெற தொடர்பு கொள்ளவும்.

# கன்னியாகுமரியிலிருந்து

# திருவண்ணாமலை



கடல் அலைகள் பாதங்களைத் தொட்டு அருள்பெற முயற்சிக்க, நீளத் தவம் செய்யும் கன்னியாகுமரிக்கு எட்டு கிலோமீட்டர் முன்னே இருக்கும் காணி மடமும் பெரும் சாந்நித்யம் பெற்று வருகிறது.

வாழும் மகானாக இன்று நம்மிடையே உலவி வரும் யோகி ராம்சுரத் குமாருக்காகக் கோவில் கட்டி தாசனுக்குத் தாசனாக வாழ்ந்து வருகிறார் பொன். காமராஜ்.. 'இனி நீ பிழைக்க மாட்டாய்' என மருத்துவர்கள் கைவிரிக்க, யோகியின் சிரட்டையால் மறுபிறவி எடுத்தவர் பொன். காமராஜ். 'அன்னவன் தான் சரணம்' என அப்போதே யோகிக்கு பக்த

பிரிமியர்* மில்ஸ்

ப்ளவுஸ் துணிகளில் நெ. 1

நீங்கள் தேர்ந்தெடுக்க...

* ரூபி
* ஃபேர் & லவ்லி
* பிளாட்டினம் சூப்பர்
* லவ்லி லேடி

சேலையும் சோளியும் ...

இதுவல்லவா ஜோடிப்பொருத்தம்!

SASI / 469 / 94

• பொன். காமராஜ்



மீராவாக மாறியவர் இவர்.

தான் வாழும் ஊரான காணிமடத்திலே சிறு குடிலிலே யோகியின் படத்தை வைத்து பக்தியைப் பரப்பி வந்தார். அங்கேயும் எத்தனையோ அற்புதங்கள்.. கன்னியாகுமரி மாவட்ட அந்த எளிய கிராம மக்கள் எவ்வளவோ நன்மைகளை அடைந்தார்கள்.

அங்கேயே ஒரு கோயிலையும் கட்டி யோகிக்கோர் சிலை எழுப்பி நித்ய பூஜை செய்யும் அளவுக்குக் கொண்டு வந்திருக்கிறார். அமைதியான கிராமச் சூழ்நிலையில் நம்பூதிரி ஆத்ம சமர்ப்பணத்துடன் யோகிக்குச் செய்கின்ற பூஜையைக் காணக் கண்கோடி வேண்டும்.

யோகியின் பாதங்களை வெள்ளியில் செய்து அதற்கும் பூஜை செய்யப்படுகிறது. சந்தன, விபூதி, பழ அபிஷேகங்களும் கண்டாமணி ஒலிக்க தீபாராதனையும் நம்மைப் பரவசத்தில் ஆழ்த்துகின்றன.

மனம் ஆழ்மன த்யானத்தில் மூழ்கியது. யோகியின் ஆசிக்காகக் கையுயர்த்தி புன்னகைக்கும் திருமுகம் நினைவில் கூடுகிறது. என்ன தேச ஒற்றுமை! கன்னியாகுமரியின் கடைகோடியில் அமர்ந்து, நினைத்தாலே முக்தியளிக்கும் திருவண்ணாமலையில் வாழும் யோகியின் தியானம்.

கன்னியாகுமரி செல்பவர்கள் அவசியம் காண வேண்டிய க்ஷேத்திரம். தேசிய நெடுஞ்சாலையிலேயே எட்டு கிலோ மீட்டருக்கு முன்பு வருகிறது காணிமடம் கிராமம். சாலை பிரியும் இடத்தில் அடையாளத்திற்குக் கைகாட்டி போர்டு உள்ளது. காணிமடம் போய் தெய்வப் புன்னகை புரியும் யோகியைப் பார்ப்போம்.

# மன சஞ்சலத்திற்கு எங்கே போவது?

"மனம் மிகவும் சஞ்சலப்படுகிறது. இப்படிச் சொல்லிக் கொண்டு யாரிடமும் போய் ஆறுதல் தேடக் கூட பயமாக இருக்கிறது. கோயில் களில் வழக்கமான பூஜைகள் தான் நடக்கின்றன. ரெகுலராக பூஜை, வழி பாடு என பெரிய அளவில் ஆத்மார்த் தமாக எங்கேனும் செய்வதாக இருந்தால், அந்தக் கோலாகலமான பூஜையில் கலந்து கொண்டால் கொஞ்சம் மன அமைதியும் கிடைக்கும். தெய்வ அனுக்கிரகமும் கிடைக்கும்" என எழுதியிருந்தார் மேற்கு சைதாப்பேட்டையில் இருந்து தங்கமணி எனும் வாசகி.ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி பூஜை, அஷ்டமி பூஜை இவற்றைச் செய்து கொண்டிருக்கும் ஸ்ரீ புவனேஸ்வரி ஆஸ்ரமத்தில் கேட்ட போது –

"ஏன் பிறந்தேன் என வருந்த நேரிடு கிறது. வாழ்வின் துன்பம் அப்படி வருந்தச் செய்கிறது. முன்வினை கெட்டதாக இருப்ப தால் இந்த வாழ்வில் துன்பம் ஏற்பட்டது. முன்வினை எத்தனை உள்ளது? அதனைக் கடக்க முடியுமா? கடக்க வழி எது? இப்படி மூச்சுத் திணறி தெய்வமே கதி என 'அவன்' சரணம் புகும் போது ஒவ்வொரு வினை யா



• யோகமாயா ஸ்ரீ புவனேஸ்வரி



• புவனேஸ்வரி ஸ்வாமிகள்



• ஸ்ரீபரத்வாஜ் சுவாமிகள்

யும் ராஜ ராஜேஸ்வரி, ஆதி பராசக்தி, மீனாக்ஷி என்றெல்லாம் பல நாமங்கள் சொல்லிப் போற்றும் லோகமாதா புவனேஸ்வரியின் கருணை என்னும் தீ அழிக்கிறது. வினையை அழித்த தீ நம்மைக் காக்கிறது. பிணியிலிருந்து விடுபட்ட நம்முன் க்ஷேமப் பாதை தெரிகிறது. புவனேஸ்வரி தேவியின் கருணை புரியும் உதவி இது. கருணாஸமுத்திரமாய் இந்தப் பேராற்றலைச் செய்யும் யோகமாயா புவனேஸ்வரி, ஸ்ரீபரத்வாஜ ஆச்ரமத்தில் (ஸ்ரீ புவனேஸ்வரி மந்த்ரம், ஸ்ரீ புவனேஸ்வரி தெரு, கங்கை நகர், ரெட் ஹில்ஸ் ரோடு, அம்பத்தூர், சென்னை - 53) கொலுவீற்றிருக்கிறாள்.

நோயாகிய மலையைப் பிளக்கும் வஜ்ஜிராயுதம் இவளே. சுகத்தைத் தரும் பாக்கியமெனும் கடலைப் பொங்கி எழச் செய்யும் நிலவும் இவளே. மரணமென்னும் மரத்தை பிளக்கும் கோடாரியும் இவளே. பாபமென்னும் காட்டை அழிக்கும் காட்டுத் தீயாக இருப்பவளும் இவளே. தன்னை அண்டியவர்களை அரச பீடத்தில் அமர்த்துபவளும் இவளே.

இந்தக் கருணைக் கடலான புவனேஸ்வரியின் திருப்பெயரை உச்சரித்தவர் உபாசனையை நடத்தியவர் எண்ணிலர். இருப்பினும் இப்புவியில், ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள் வேத விதிப்படி துதித்து, ஓதி உணர்ந்து அன்னையின் அருளுமுதைப் பெற்று மெய்யன்பர்களின் துயர் துடைக்க, தான்பெற்ற அந்த அருளமுதை அடியவர்களுக்கு அருளி அதில் மகிழ்ச்சிக் கொள்பவர். இப் புனிதரின் உபாசனையில், அன்னையின் பேராற்றலில் இருள் நீங்கி இன்பம் அடைந்தவர் பலர். துக்கம் நீங்கி அமைதி பெற்றவர் அநேகம்.

நூற்றுக்கணக்கான வரன்கள் பார்த்து வசந்திக்கு ஒன்று சரியாய்ப் பொருந்தவில்லை. பொருந்தினாலும் வரன்கள் ஒத்துக் கொள்ளவில்லை. முப்பத்தெட்டு வயது தாண்டியும் வசந்திக்குத் திருமணம் தள்ளிப் போயிற்று. ஸ்வாமிகள் நடத்திய சுவர்ண மங்கள கௌரி பூஜையில் பங்குகொண்டு, அப் பூஜையில் வைத்த மஞ்சளை முகத்தில் பூசி வருகிறாள். இரண்டே மாதத்தில் அமெரிக்காவிலிருந்து மாப்பிள்ளை வருகிறார். மாப்பிள்ளை இன்ஜினியர். இன்று வசந்தி அமெரிக்காவில். இது அம்பிகையின் திருவிளையாடல். இப்படி எத்தனையோ இங்கு நடந்திருக்கிறது.

## பௌர்ணமி :

பௌர்ணமி தினத்தில் இந்த அன்னைக்கு நடக்கும் அறுபத்து நான்கு விதமான அபிஷேகத்தையும், நூற்றியெட்டு வலம்புரி சங்காபிஷேகத்தைக் காணவுமே இந்தியா வெங்கிலுமுள்ள பக்தர்கள் கூடுவார்கள். பச்சிலைகள், அன்னம், பால், தேன், பலாச்சுளை, லட்டு, மாதுளை முத்துக்கள், பழரசங்கள், பன்னீர் என நானாவிதமாய் லோக நாயகிக்கு நடக்கும். அன்றைய தினம் முத்தங்கி அலங்கார சேவையில் ராஜமாதா புவனேஸ்வரி சேவை சாதிப்பாள். ஆயிரம் கண்கள் போதாது. மாதாராணியை விண்ணாட்டவர்கள் கண்ணாரக் கண்டார்களே அதே காட்சிதான் இங்கு அலங்காரக் காட்சி.

பௌர்மணி இரவு ஆசிரம மேல்விதானத்தில் முழு நிலவை பெரிய கண்ணாடியில் பிரதிபலிக்கச் செய்து, அதன் கீழ் சந்திர மண்டலம் வரைந்து, ஸ்ரீஸூக்த பிரகாரம் நிலவை புவனேஸ்வரியாக பாவித்துப் பூஜை நடக்கும். இது தேவி உபாசனையில் விசேஷ பூஜை.

## அஷ்டமி பூஜை

ஆசிரமத்தில் கிட்டத்தட்ட நாற்பது பௌர்ணமி பூஜைகள் தொடர்ந்து வந்த

என் தோழியின் வீட்டிற்குச் சென்றிருந்தேன். மாலை பள்ளியில் இருந்து வந்த அவள் பையன், ஒரே பசி ஏதாவது தா என்று பரபரத்தான். உள்ளே சென்ற தோழி ஐந்தே நிமிடத்தில் தட்டில் ஆவி பறக்கும் உப்புமாவுடன் வெளிப்பட்டாள். எப்படி? அவளே விளக்கினாள் :-

''வாரம் ஒருமுறை வெறும் வாணலியில், தேவையான அளவு எண்ணெயில் எல்லா சாமான்களையும் தாளித்து அதில் ரவையையும் கொட்டி நன்கு வறுத்து, உப்பும் போட்டு வைத்து விடுவேன். தேவைப்படும் போது 1 டம்ளர் மிக்ஸுக்கு 3 டம்ளர் என நீரை மட்டும் கொதிக்க விட்டு கிளறி விடுவேன்'' என்றாள்.

— ஜெயா



அடுத்தமுறை இம்மாதிரியான

**பட்டப் பகலில் துணிகரக் கொள்ளை!**

மூன்று முகமூடி கொள்ளைக் காரர்கள், காலை 10 மணிக்கு ஒரு வீட்டினுள் புகுந்து கொள்ளையு... தனர். அவர்கள்... வெளியூ ரிலிருந்து அன்றுதான் திரும்பி வந்த அந்த வீட்டி னருக்கு அதிர்ச்சி. ஒரு டெலிவிஷன், விசிஆர், 20,000 ரூபாய் மதிப்புள்ள நகை, ரொக்கமாக 5,000 ரூபாய் கொள்ளை... போயிருந்தது. போலீஸார் புலன் விசாரணை நடத்தி வருகின்றனர்.

பத்திரிகைத் தலைப்புகளைப் படிக்கும்போது

**வழிப்பறிக் கொள்ளைகள் வளர்கின்றன!**

...த்து இந்தப் ... நடைபெற்று ...வழிப்பறிகள், கொள் ...கள் அதிகரித்த வண்ணம் இருக்கின்றன. ஒரே நேரத்தில் இரண்டு இடங்களில் ... பெற்ற இத்தகைய கொள்ளை பற்றிப் போலீஸார் தீவிர மாக புலன் விசாரணை செய்து கொண்டிருக் கின்றனர். கடந்த ... மாதங்களுக்குள் 20க்கும் அதிகமான கொள்ளைகள் பற்றிப் புகார் வந்திருக் கிறது. வீட்டுச் சொந்தக் காரர்களை மிகக் ... இருக்கும்படி போலீஸார் எச்சரிக்கை விடுத்துள் ளனர்.

ஒரு ஹவுஸ்ஹோல்டர் பாலிசி

**என் தாலியையும் விடவில்லை... பெண்ணின் கதறல்!**

சென்னை, நவ. 15 "என் தாலியைக் கூட ...விட்டு வைக்காமல் எல்லா வற்றையுமே திருடிக் கொண்டு ஓடி விட்டனர்!" ...ன்று கதறிக் ... கூறினார் திருமதி சுஜாதா. இவர் ராயபுரத்தில் வசிப் ...வர். "என்னை அழக்கூட விடாமல் மிரட்டி வைத் தனர்!" என்று கூறி பரிதாப ...மாக அழுதார் சுஜாதா.

உங்களுக்காக எடுத்திடுங்கள்

**உங்கள் வீட்டையும்**
**அதிலுள்ள அனைத்தையும்**
**இன்ஷ்யூர் செய்யுங்கள்**

**யூஐ ஹவுஸ்ஹோல்டர் பாலிசி**




**யுனைடெட் இந்தியா இன்ஷூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

24, ஒயிட்ஸ் ரோடு சென்னை 600 014.



# அரைமணி நேரம் செலவிடத் தயாரா?

## உங்களது முன்னேற்றத்திற்காக தினசரி அரைமணி நேரம் ஒதுக்க முடியுமானால் மேற்கொண்டு படியுங்கள்!

★ வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பமுடையவரா நீங்கள்?

★ ஆங்கிலம் சரிவரத் தெரியாததனால் உங்களது முன்னேற்றம் தடைபடுகிறதா?

★ பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களை வாங்கிப் படித்தும், ஆங்கிலத்தில் பேசத் தயக்கமாக இருக்கிறதா?

**கவலையை விடுங்கள்!**

உளவியலின் அடிப்படையில் **விவேகானந்தா கல்வி நிலையம்** அளித்துவரும் ஓர் எளிய பயிற்சியின் மூலம் நீங்கள் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசக் கற்றுக்கொள்ளலாம். தினசரி அரைமணி நேரம் செலவிட்டால் போதும் என்ற வகையில் இப்பயிற்சிமுறை அமைக்கப்பட்டிருப்பதால்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"
(பெண்களுக்குத் தனி வகுப்புகள்)
போன் : 4341216, 4347034, 4341164.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில், தபால் மூலம் நீங்கள் பயிற்சி பெறலாம்.

இதுவரை நான்கு லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் இப்பயிற்சியில் சேர்ந்து பயனடைந்துள்ளனர்.

நீங்களும் தினசரி அரைமணி நேரம் பயிற்சி செய்து ஆறே மாதங்களில் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசத் தொடங்குங்கள்.

என்ன...... பயிற்சிக்காக தினசரி அரைமணி நேரம் செலவிடத் தீர்மானித்து விட்டீர்களா?

அப்படியானால், ஓர் ஐந்து நிமிடம் செலவிட்டு, ஒரு போஸ்ட் கார்டில்

**"நான் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்"**

என்று எழுதி, உங்களது முகவரியைக் குறிப்பிட்டு, இன்றே எங்களுக்கு அனுப்புங்கள். பயிற்சி பற்றிய விவரங்களை உடனே அனுப்பி வைக்கிறோம்.

*உங்களது வெற்றியின் முகவரி*



**விவேகானந்தா கல்வி நிலையம்**

தபால் பெட்டி எண் MM 4986.
9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை - 600 017.

போதும், மாதத்தில் இருமுறை வருகின்ற அஷ்டமி நாட்களில் சண்டி பாராயண பூஜை நடந்து வருகிறது. தேவி மகாத்மியத்தி லுள்ள பதிமூன்று அத்தியாய தேவதைகளை பதிமூன்று விளக்கில் ஆவாஹனம் செய்து, சண்டி பாடத்திலுள்ள ஏழுநூறு ஸ்லோகங் களுக்குப் பின் "ரூபம் தேஹி ஜயம் தேஹி யசோ தேஹி த்விஷோ தேஹி" "ஓம் ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே" என திரும்ப திரும்பச் சொல்லி என்ளுப் பாயஸம், என்ளுருண்டை, தேன், உப்பில்லாத வடை நைவேத்யம் செய்து அன்றைய தினம் விமர் சையாக இந்த திவ்யமங்கள சண்டிசப்தசதி தீபார்ச்சன பூஜை நடக்கும். கஷ்டங்கள் தீர அஷ்டமி வழிபாடு சிறந்ததாகும்.

*"யம்யம் சிந்தயதே காமம் தம்தம் ப்ராப்னோதி நிச்சயத்"*

என்றபடி யார் யாருக்கு என்னென்ன தேவைகள் விருப்பங்கள் உண்டோ அவை யாவும் சண்டியாகிற என்னைத் துதித்தால் நிச்சயம் நிறைவேறும் என்பதைத் தேவி மாகாத்மிய ஸ்லோகத்தில் காணலாம். மனக் கோணலை நிமிர்த்தவும், துர்நிமித்தங்களைப் போக்கவும், பாவக்குவியலைப் பொசுக்கவும் சண்டி தேவியின் ஆராதனையே சிறந்த வழி பாடாகும்.

## ஸ்வாமிகளின் பிறந்த தினம்

புன்சிரிப்பால் அருள்புரிவதற்குத் தேவி எடுக்கும் வடிவம் குரு. அறியாமையைப் போக்கி இறையுணர்வைத் தந்தருளும் குருவே தேவி. மந்திர ஜபத்தைத் தொடங் குகையில் குரு வடிவில் தலை மேல் கை கூப்பி வணங்குவதற்கு உரியவள். சொல் வடி வமான மந்திரமும் அதனைப் போதித்த ஆசாரியனும் தேவியே என்று ஐக்கிய பாவ னையால் மட்டுமே மந்திர சித்தி பெற முடி யும். அந்த வகையில் குருவாய் இருக்கும் ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகளுக்கு மாசி மாதம் உத்திரட்டாதி திருநக்ஷத்திர (3.3.1995) அன்று ஆசிரம அன்பர்கள் குரு பூஜை நடத்த உள்ளார்கள். விசேஷமாய் அன்று "க்வாத தீர்த்தம்" என்பதான முன்னூற்றுக் கும் மேற்பட்ட மூலிகைகளை சேகரித்துப் பெரிய பாத்திரத்தில் வைத்து காய்ச்சி அத னைக் கலசத்தில் அமைத்து, புவனேஸ்வரி ஆவரண பூஜை நடத்தி மந்திர சக்தி ஏற்றி, அந்தத் தீர்த்தத்தை ஸ்வாமிகளுக்கு அபிஷேகம் செய்வார்கள். பின் அத் தீர்த் தத்தை வருகின்ற அத்தனை மெய்யன்பர் களுக்கும் ஸ்வாமிகள் தெளிப்பார்கள். ஞான மூலிகைகள் அடங்கப் பெற்ற தீர்த்தமாதா லால் விசேஷ நல்ல புத்தி அமைவதாயும் இந்த க்வாத தீர்த்த பெருமையை ஸ்வாமிகள் கூறுகிறார்கள். அவருடனே இருக்கும் சீடர் ஸ்ரீமத் பாரத்வாஜ ஸ்வாமிகளும், அவருடைய எல்லா பூஜை வழிபாடுகளிலும் கலந்து கொள்கிறார்.



**ஒரு சமயம் என் வீட்டில் தேங்காய் அதிகம் மீந்து விட்டது. தேங்காயை அரைத்துப் பால் எடுத்து தேங்காய்ப் பாலில் கோதுமை மாவை பிசைந்து வைத்தேன். சாதாரண சப்பாத்தியை விட மிகவும் சுவையாக இருந்தது. குழந்தை கள் மிகவும் விரும்பிச் சாப்பிட்டார்கள். அடிக்கடி செய்யச் சொல்லி ஒரே தொல்லை.**

**— பத்மாவதி ராதாகிருஷ்ணன்.**

## பக்தர்களுக்காக அன்னதானம்

வாழ வைப்பது உணவு - அன்னம். புவ னேஸ்வரி அன்னபூர்ணா. ஒரு கையில் உணவு நிரம்பிய பாத்திரமும், மற்றொரு கையில் அதனை வாரி வழங்கும் கரண்டியும் கொண்டவள். அவள் அளிக்கும் உணவு ஊட்டமளிப்பதுடன் ஞானமும் வைராக்கிய மும் தரவல்லது. இதை உத்தேசித்துத்தான் ஆசிரமத்தில் பக்தர்களின் பிறந்த நாள், விவாஹ தினம், மறைந்த பெற்றோர்களின் நினைவு தினம் ஆகிய நாட்களில் அன்ன தானம், பக்தர்களின் விருப்பப்படி நடந்து வருகிறது. அன்னதானம் என்பது பசுக்களுக் கும் சேர்த்துதான். காலச் சூழ்நிலையும், அவ சரப் போக்கும், வெளிநாடுகளில் உள்ள சூழ் நிலையில் இருப்பதாலும், மறைந்த முன் னோர்களுக்கு சிரார்த்தம், முதலிய வழிபாடு நடத்த முடியாமல் போகிறது. அதனைப் போக்கிட ரூபாய் இரண்டாயிரத்தை ஒரு முறை வைப்பு நிதியாகச் செலுத்தி மேற் குறிப்பிட்ட நாட்களில் அன்னதானத்தை நடத்தலாம். தொகையை ஸ்ரீ புவனேஸ்வரி மந்த்ரம் என்ற பெயருக்கு அனுப்பலாம். ஸ்வாமிகளின் இருப்பிடம் -

ஸ்ரீ புவனேஸ்வரி மந்த்ரம், 23, ஹனுமந்த ராயன் கோவில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005. போன் : 844 579 (மாலை 5 மணியிலிருந்து 7 மணி வரை)

சுமார் ஒன்றரை வருடங்களுக்கு முன்னால் சீவலப்பேரி துர்க்கை பற்றி எழுதியிருந்தோம். இந்த இடைப்பட்ட காலத்திலேதான் துர்க்கையின் திரு விளையாடல்கள் எத்தனை! அப்போது மூலஸ்தான மூர்த்தங்கள் இருந்த இடம் மட்டுமே கட்டப்பட்டிருந்தது. முன்புற மண்டபம் மண்ணும் தரையுமாக இடர்பட்டுக் கொண்டிருந்தது.

''எத்தனையோ பக்தர்கள் வர்றாங்க. எங்கெங்கு இருந்தோ வர்றாங்க. துர்க்கையை நினைச்சு இந்தக் காரியம் செஞ்சேன், பலிச்சுதுன்னு. நிறைய பேர் அங்கப்ரதட்சிணம் பண்றாங்க. இந்த மண்ணும், கல்லுமா இருக்கிற ப்ராகாரத்துல அவங்க பண்றப்போ பார்க்கக் கஷ்டமா இருக்கு.''

என்றார் அப்போது, பெங்களூர் சங்கரய்யர்! இப்போதோ நாலு பக்க மும் நன்கு கட்டப்பட்ட பிராகாரங்கள். விநாயகர், முருகன், துணையோடு. முன்புறம் மணி மண்டபம், அடுத்ததாக விசாலமான மண்டபம். எவ்வளவு முன்னேற்றம்!

அன்னையோ காதில் தாடங்கமும், கழுத்தில் ஆபரணங்களும், கண்டாமணி யும், விளக்குகளும் வெளிச்சமுமாக ஜெகஜ்ஜோதியாக மின்னிக் கொண்டு இருக்கிறாள்.

எல்லாம் 'அவள்' செய்து கொண் டது. இங்கு வரும் அன்பர்கள் சொல் லும் கதைகள் எல்லாம் அவள் நடத் திய திருவிளையாடல்கள். எத் தனையோ பேரின் மனத்திலே புகுந்து கோவிலுக்கு வேண்டியதைச் செய்து கொண்டு இருக்கிறாள். வேண்டியதை வேண்டியவாறு கொடுக் கும் ப்ரத்யக்ஷ துர்க்காம்பிகா அல்லவா இவள்!

# துர்க்கை



இப்படி நாம் சொல்லவில்லை. பிரபல பாடகர் பாலமுரளி கிருஷ்ணா சொல்கிறார். துர்க்காம்பிகை தன் விளையாடல்களுக்குக் கருவியாகத் தேர்ந்தெடுத்தது பெங்களூர் சங்கரய் யரை. சீவலப்பேரியில் பிறந்து சாப்பிடக் கூட கஷ்டமான வறுமை நிலையில் ஊரைவிட்டுப் போனவர்

சங்கரய்யர். போகும்போது,

''அம்மா நான் நல்லபடி வாழ்க்கையிலே வந்தேன்னா உனக்கொரு கோவில் கட்டுகிறேன்'' என்று வேண்டிக் கொண்டார்.

பெங்களூர் போய் உத்தியோகம் கிடைத்து மிகவுயர்ந்த நிலைக்கு வந்து குடும்பம், குழந்தைகள் என ஆனார். பிரபலமான கம்பெனியில் உயர்ந்த பதவியில் ரிடையரான பிறகு சீவலப் பேரி துர்க்கை புன்னகைத்தாள். அவளுக்கு ஒரு சிறிய கோயில் கட்ட

காலத்தில் குத்துவிளக்குப் பூஜை நடந்து அம்மனின் வீதிப் புறப்பாடு நடந்தது. தெய்வீக அருள் சுரக்கும் சூழ்நிலையில் நடந்த இவ்விழா மனத்தைப் பரவசத்தில் ஆழ்த்தியது.

துர்க்கையின் விசேஷம் இங்கு அள விடற்கரியது. இவள் சாந்த துர்க்கை. தமையன் விஷ்ணுவுடன் நின்ற திருக் கோலமாக எங்கும் காணக் கிடைக்காத காட்சியாக இருக்கிறாள். துர்க்கை என் றாலே ரௌத்ரம் என்பது போய், சாந்த மும் புன்னகையுமாக கையில் சங்கு



எண்ணி கையில் கொஞ்சம் பணத் துடன் வந்தவரை தனக்கே அடிமை யாக்கிக் கொண்டார். அப்போதில் இருந்து தொடங்கியதுதான் கோவில் வளர்ச்சி.

சமீபத்தில் இக்கோயிலில் மிகச் சிறப்பாகக் கும்பாபிஷேகம் நடை பெற்றது. பல்லாயிரக்கணக்கான பக்தர் கள் கூடி துர்க்கையின் அருளைப் பெற் றார்கள். அலங்கார் கந்தசாமி போன்ற திருநெல்வேலிப் பிரமுகர்கள் வந்திருந் தார்கள். மாலையில் ஞாயிறு ராகு

சக்ரதாரியாக எழுந்தருளி இருக்கிறாள்.

சீவலப்பேரி திருநெல்வேலிக்கு அருகில் உள்ள கிராமம். நகரத்தில் இருந்து நிறைய பேருந்துகள் இவ்வழியே செல்கின்றன. இக்கோயில் சம்பந்தமாகத் தொடர்பு கொள்ள விரும்புபவர்கள், ஸ்ரீ துர்காம்பிகா தேவஸ்தானம் டிரஸ்ட், ஸ்ரீராமா 41-பி நாலாவது பிளாக், 8வது மெயின், ராஜாஜி நகர், பெங்களூர் - 560 010 என்ற முகவரியில் தொடர்பு கொள்ளலாம்.

# டிரஸ்ட் ப்ளஸ்



## INVITES DEPOSITS

Fixed Deposits will be accepted at the following rates of interest and subject to the terms and conditions as indicated in the form of application of deposit available at the administrative Office and other branch offices of the Company.

### DEPOSIT SCHEMES

| CUMULATIVE DEPOSIT SCHEME | | | FIXED DEPOSIT SCHEME | |
|---|---|---|---|---|
| Period in Months | For Rs. 1000 Deposit Amount Payable on Maturity | Effective Annual Yield | Period in Months | Rate of Interest per annum Monthly Quarterly |
| 12 Months & 1 Day | Rs. 1150/- | 15.00% | 12 Months & 1 Day | |
| 24 Months & 1 Day | Rs. 1321/- | 16.05% | 24Months & 1 Day | |
| 36 Months | Rs. 1518/- | 17.27% | 36 Months | |
| 48 Months | Rs. 1745/- | 18.63% | 48 Months | 14% 14.16% |
| 60 Months | Rs. 2006/- | 20.12% | 60 Months | |

| RECURRING DEPOSIT SCHEME (Minimum Rs. 500/-) | | | |
|---|---|---|---|
| Period in Months | Rate of Interest Per Annum | Maturity Value (for Rs. 500) | For Every Additional Rs. 100/- |
| 12 Months & 1 Day | 14% | Rs. 6480/- | Rs. 1296/- |
| 24 Months & 1 Day | | Rs. 13915/- | Rs. 2783/- |
| 36 Months | | Rs. 22470/- | Rs. 4494/- |

1. Interest warrants payable at par at all branches of SBI.

Information required to be specified as per Non-Banking Financial Companies (Reserve Bank) Direction, 1977 and Non Banking Financial Companies and Miscellaneous Non-Banking Financial Companies (Advertisement) Rules, 1977, are given below.

A. Name of the Company : The Investment Trust of India Ltd.

B. Date of Incorporation : 2nd August 1946

C. Business carried on by the Company and its subsidiaries with details of branches or units, if any :

Business : Hire Purchase Financing, Investments, Leasing, Industrial Financing, Mortgage Financing etc.

Subsidiary : I.T.I. Pioneer AMC Ltd. And I.T.I. Capital Markets Ltd.

Branches : Refer to Head Office.

D. Brief Particulars of the Management of the Company.

The Company is managed by the Managing Director under the supervision, direction and control of the Board of Directors.

E. Name, address & occupation of the Directors.

Mr. B.R. KOTHARI, Chairman & Managing Director, "Kothari Bagh", 11, Nungambakkam High Road, Madras-600034, Industrialist. Mr. A.L. MUDALIAR, "Avanti", 858, Poonamallee High Road, Kilpauk, Madras -600010, Business Executive & Management Consultant. Mr. G.K. SUNDARAM, "Rasakondalu" Circuit House Road, Coimbatore 641 018, Industrialist. Mr. G. CHIDAMBAR, 101-A, Janakpuri, 2nd St. Off : Velachery Road, Madras 600 032, Former Managing Director-LIC. Mr. N. SRINIVASAN, T-18, Sixth Avenue, Besant Nagar, Madras 600 090, Chartered Accountant. Mr. RAM GANAPATHI, No. 27, "Ashok Crescent", D.L.F. Kudap Enclave, Phase-I, Gurgaon, Haryana - 122 001, Former Chairman of BIFR. Mr. C.R. RAMAKRISHNAN, "Meenakshi", No. 4, Sir P.S. Sivasamy Road, Mylapore, Madras 600 004, Former Joint Managing Director of Larsen & Toubro Ltd. Mr. M.R. SHAH, A-23/24, Woodlands Apartments, Peddar Road, Bombay 400 026, Business.

(F) Profit of the Company before and after making provisions for tax for the three financial years immediately preceding the date of advertisement — (G) Dividend declared by the Company in respect of the said year (Rupees in lakhs percentages)

| | Profit before Depreciation & taxation | Profit before taxation | Profit after taxation | Amount (Rs. in lakhs) | Percentage |
|---|---|---|---|---|---|
| | (Rupees in lakhs) | | | | |
| 31-3-94 | 752.74 | 434.91 | 411.91 | 76.27 | 35 |
| 31-3-93 | 474.37 | 307.08 | 291.08 | 76.27 | 35 |
| 31-3-92 | 312.81 | 187.44 | 183.19 | 56.10 | 28 |

(H) Summarised financial position of the Company as appearing in the two latest Audited Balance Sheets:

| LIABILITIES | 31-3-94 (Rs. in lakhs) | 31-3-93 | ASSETS | 31-3-94 (Rs. in lakhs) | 31-3-93 |
|---|---|---|---|---|---|
| Share Capital | 217.88 | 217.67 | Fixed Assets | 3239.01 | 2438.88 |
| Reserves & Surplus | 1233.31 | 897.35 | Investments | 741.13 | 215.66 |
| Secured Loans | 3229.69 | 2766.40 | Current Assets, Loans & Advances | 8671.19 | 6066.06 |
| Unsecured Loans | 5290.77 | 2802.41 | Miscellaneous Expenditure | 14.79 | 16.22 |
| Current Liabilities | 2535.08 | 1916.60 | | | |
| Provisions | 159.39 | 136.39 | | | |
| | 12666.12 | 8736.82 | | 12666.12 | 8736.82 |

Note : Contingent Liabilities not provided for

(i) On partly paid Shares and Debentures — Rs. 3.08 lakhs

(ii) Sales tax on lease contracts under writ petitions — Rs. 22.35 lakhs

I. The amount which the company can raise by way of deposit under Reserve Bank of India directions — Rs. 143.64 crores.

Aggregate of deposits actually held on the last day of the immediately preceding financial year, viz 31-3-94 — Rs. 37.88 crores.

J. The Company has no over due deposits other than unclaimed deposits.

K. It is hereby declared that :-

(i) The company has complied with the applicable provisions of the directions.

(ii) The compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the Reserve Bank of India.

(iii) The deposits accepted by the Company are unsecured and rank pari passu with other unsecured liabilities.

The above text of this advertisement has been approved by the Board of Directors on 27-5-94

(By order of the Board)
For The Investment Trust of India Limited

**P.S. Balasubramanian**
Chief Executive and Secretary.

Note : A copy of this text duly signed by a majority of the Directors of the Company has been filed with the Reserve Bank of India, Bangalore.

# விஸ்வ ரூப ஆஞ்சநேயர்!

மூன்று வருடங்களுக்கு மேல் இருக்கும் அந்தக் கோயிலுக்குப் போய். அப்போது போன போது வானமும் பூமியும் அளப்பது போல் 32 அடிக்கு உயர்ந்து நின்ற ஆஞ்சநேயர் மட்டுமே நின்று கொண்டிருந்தார். சுற்றிலும் கோயில் பிரகாரம் ஒன்றும் கிடையாது.

32 அடி உயர ஆஞ்சநேயர், அவருக்குக் கோயில் கட்டுவதையே தியானமாகக் கொண்டு சுற்றிவந்து கொண்டிருந்த மாருதி பக்த சமாஜ அன்பர்கள்தான் இருந்தார்கள். இப்போது அதே கோயிலுக்குப் போனால் அடேங்கப்பா, எவ்வளவு மாற்றங்கள்.

நீண்டு நிமிர்ந்து கை கூப்பி அருள்பாலித்துக் கொண்டிருக்கும் ஆதிவ்யாதிஹர ஸ்ரீ பக்த ஆஞ்சநேயரைச் சுற்றிக் கோயில் எழுப்பிக் கொண்டிருக்கிறார்கள். மூலஸ்தான முன் மண்டப வேலையெல்லாம் முடிந்து விட்டது. எதிரே கோதண்ட ராமர் சந்நிதி வெகுவேகமாக உருவாகிக் கொண்டு இருக்கிறது.

இது என்ன சமானியமான வேலையா? 1974 முதல் ஆஞ்சநேய உற்சவம் செய்து வந்த மாருதி பக்த சமாஜம் பத்து வருடங்கள் கழித்து ஆஞ்சநேயருக்குக் கோயில் கட்ட வேண்டுமென்று ஆசைப்பட்டது. ஸ்ரீ ஆஞ்சநேய உபாசகரான ரமணி உள்ளிட்ட இந்தக் குழுவினர் 32 அடி ஆஞ்சநேயர் சிலை செய்ய முடிவெடுத்த போது பட்ட அலைச்சல் கொஞ்ச நஞ்சமில்லை. ஸ்ரீ பரமாச்சார்யாரின் ஆசியோடு அந்த மிகப் பெரிய சாதனையை நிகழ்த்தினார்கள். சென்னை, நங்கைநல்லூரில் இந்தக் கோயில் கட்ட வேண்டுமென்று நினைத்த இடத்திற்குக் கொண்டு வந்த போதே பல அற்புதங்கள். நங்கைநல்லூரின் அந்தச் சந்து பொந்துகளில் அத்தனை உயர கல்லை டிரெய்லரில் வைத்துக் கொண்டு வந்த போது ஏதோ ரப்பர் போல வளைந்து வந்ததைக் கண்டு புல்லரித்து நின்றார்கள் அனைவரும்.

சாஸ்த்ரோக்தமாக ஆஞ்சநேயர் சிலை செதுக்கப்பட்டு, கொஞ்சம் கொஞ்சமாகக் கோயிலும் கட்ட ஆரம்பித்தார்கள். இந்த மூர்த்தத்திற்கு உத்தரீயம் என்றால் சாதாரணமா. வெள்ளிக் கவசம் என்றால் லேசுப்பட்ட காரியமா? ஒவ்வொன்றையும் பிரம்மாண்டமாக அல்லவா செய்ய வேண்டும்? செய்து கொண்டுதான் வருகிறார்கள்!

32 அடி ஆஞ்சநேயருக்கும் உயர்ந்து நிற்கும் மூலஸ்தானமும், முன் மண்டபமும் முத்தையா ஸ்தபதியின் கைவண்ணத்தில் மிளிர்ந்து கொண்டு வருகிறது. மேலே கோபுர வேலைகள் நடந்து கொண்டு இருக்கின்றன.

இவ்வளவு பிரம்மாண்ட வேலைக்கு நிதி? ஆஞ்சநேயரே தருவித்துக் கொண்டிருக்கிறார். இங்கே நடக்கின்ற லீலா விநோதங்கள் நிறைய. ஆஞ்சநேயர் நித்ய ப்ரம்மச்சாரி. ஆனால் இங்கே நடந்த திருமணங்கள் விசித்திரமானவை. வாயு புத்திரனை அணுகி வேண்டிக் கொண்டு நடந்தவை. இவன் பக்த ஹனுமான் அல்லவா? பக்தர்கள் வேண்டியதை வேண்டியாங்கு தருகிறான். எத்தனையோ பேர் வாழ்க்கையில் ரக்ஷையாக நின்றதையும் கேட்க முடிந்தது.

ஆத்வ்யாதிஹர அனுமான்! மனோ வியாதி, உடல் வியாதிகளைத் தீர்ப்பான். விசுவரூபியான ஸ்ரீ ஹரியிடம் ஆழ்ந்த நிலையான பக்தி ஏற்படுவதற்கு அவரை விசுவரூபியாக தியானிக்க வேண்டும் என்பது ஸ்ரீசுக பிரம்மத்தின் கூற்று. விசுவரூபியாக இங்கே எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பக்த ஆஞ்சநேயரும் இப்படித்தான். வரமளித்துக் கொண்டு இருக்கிறார்.

இன்னும் கும்பாபிஷேகத்திற்கு வேலைகள் பாக்கி இருக்கிறது. ஆயினும் ஜூலை 3 ந் தேதியன்று நாள் குறித்திருக்கிறார்கள்.

"இத்தனை நாள் நாங்களா செய்தோம்? அவரே எங்களை இயக்கி வேலைகளைச் செய்து கொண்டு இருக்கிறார். எனவே நல்லபடியாக முடியும்" என்கிறார்கள் கோயில் டிரஸ்டியினர்.

ஸ்ரீ ஆஞ்சநேய பக்த சமாஜம் டிரஸ்ட், 8, வது தெரு, ராம்நகர், நங்கைநல்லூர், சென்னை - 600 061. இதுதான் இவர்களுடைய முகவரி.

# கருப்பை நலம் காக்கும் காய்கனிகளும் கீரைகளும்

நம் எளிய உணவு முறைகளிலேயே நம் உடல் நலம் காக்கும் காய்கனிகளும் கீரைகளும் உண்டு என நாம் அறிவோம். கருப்பையைப் பலவிதமான நோய்கள் தாக்கும் காலமிது. 35 வயது தாண்டி விட்டாலே கருப்பைக் கோளாறுகள் பலவும் ஆரம்பமாகி விடுகின்றன. சாதாரணமாக ஆரம்பிக்கும் உதிரப் போக்கு கடைசியில் கருப்பை அறுவை சிகிச்சையில் போய் முடிகிறது. நம் கருப்பை நலம் காக்கும் காய்கனிகளும் கீரைகளும் எவை? இது போன்றவைகளை நாம் ஆராய்ந்து உண்பதால் கருப்பை கோளாறுகளைத் தவிர்க்க முடியுமா? சித்த மருத்துவரும், ஆராய்ச்சியாளரும், 'நவோதயா சித்தா ரெமிடீஸ்'ன் இயக்குனருமான டாக்டர் திரு ஜெயராம் அவர்கள் பதில் தருகிறார்.



“நீங்கள் சொல்வது போல சாதாரண காய்கனி கீரைகளே கருப்பை கோளாறுகளைத் தீர்க்கும் வல்லமை படைத்தவை. வாழைப்பூ நம் ஊரில் எப்போதுமே கிடைக்கக் கூடியதுதான். இதை அடிக்கடி நம் உணவில் சேர்த்து வர கருப்பை பலப்படும். இரத்தப் போக்கு குறையும். உடலும், குடலும் பலம் பெறும். வயிற்றுக் கோளாறுகள் நீங்கும். வாழைப் பூவின் முதல் மூன்று பட்டைகளை அகற்றி விட்டு பின்பு அதை நன்றாகத் துருவி, மோர் தெளித்து மிக்ஸியில் அரைக்க வேண்டும். அரைத்ததை துணியில் கொட்டிப் பிழிந்து 3 கிராம் கருவேலம் பட்டைத்தூள் அல்லது 2 கிராம் காய்ச்சுக்கட்டி எனப்படும் காசிக்கட்டியை போட்டுக் கலக்கி தேவையான அளவு பனங்கற்கண்டு சேர்த்து காலை-மாலை இருவேளையும் வெறும் வயிற்றில் மூன்று நாட்கள் தொடர்ந்து குடிக்க வேண்டும். மாதவிலக்கின் போது 3 நாட்கள் மட்டும், - தொடர்ந்து 3 மாதம் சாப்பிட (புண், கட்டி இல்லாத சாதாரணமான) அதிக இரத்தப் போக்கு கட்டுப்படும். இதை அருந்தும் நாட்களில் காரத்தை அறவே தவிர்க்க வேண்டும். மோர், தயிர் அதிகம் சாப்பிட வேண்டும். படுத்து ஓய்வெடுக்க வேண்டும். நிற்கும் போது புவிஈர்ப்பினால் இரத்தப் போக்கு அதிகமாகும்.

இரத்த சோகை, குடல்களில் பலவீனம், வாய்வுத் தாக்குதல் தீராத மலச்சிக்கல் போன்றவை



பத்திரிக்கைகளிலும், தினசரி பத்திரிக்கைகளிலும், பிரசுரிக்கப் படும் விளம்பரங்களில், நாம் காணும் பற்பல பொருட்களின் படங்களை உடனுக்குடன் கத்தரித்து வைத்துக் கொண்டால், பள்ளிக் குழந்தைகள், திடீர், திடீரென நோட்டில் ஒட்டுவதற்கு படங்கள் கேட்கும் போது, பிரச்னையின்றி சமாளிக்கலாம். கடையில் வாங்கும் படங்களைவிட விளம்பரத்தில் காணும் படங்கள் பெரியதாக, அழகாக இருப்பதால் குழந்தைகளுக்குப் பள்ளியிலும் அவை பாராட்டைப் பெற்றுத்தரும்.

— வி. தனுசு



கள் உள்ளவர்களுக்குக் கருப்பை நோய்கள் வர அதிக வாய்ப்பு உண்டு. சிவந்த நிறமும், துவர்ப்பு ருசியும், இரும்புச் சத்தும் கொண்ட காய்கறிகள் கருப்பைக்கு நலம் மிக தரும். கேரட், காலிஃபிளவர், முள்ளங்கி, அத்திக்காய் போன்றவைகளை அடிக்கடி உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

முருங்கைப் பூவை அரைத்து பெரிய நெல்லிக்காய் அளவு அரைத்த விழுதை ஒரு டம்ளர் பச்சைப் பாலில் கலந்து - சிறிது சர்க்கரை சேர்த்து காலையும் மாலையும் மாத விலக்கின் போது மூன்று நாட்கள் வெறும் வயிற்றில் மூன்று மாதங்கள் தொடர்ந்து குடித்துவர உதிரப் போக்கு நிற்கும்.

வெடிக்காத தென்னம் பாளையிலுள்ள தென்னம்பூவை ஒரு கைப்பிடி அளவு (சுமார் 25 கிராம்) எடுத்து ¾ டம்ளர் மோர் தெளித்து இடித்துப் பிழிந்து வடிகட்டி 2 கிராம் காசிக்கட்டி சேர்த்துக் கலக்கி காலை மாலை இரண்டு வேளையும் மாதவிலக்கின் போது 3 நாட்கள் - தொடர்ந்து 3 மாதம் குடித்துவர அதிகமான இரத்தப் போக்கு கட்டுப்படும்.

ஏரி ஓரங்களில் புதர் போல வளர்ந்து இருக்கும் பூலாக்கீரையை (முருங்கை கீரை போன்ற உருவில் ஆனால் சிறிய அளவில் இருக்கும்) அரைத்து எலுமிச்சை அளவு விழுதை எடுத்து பால் அல்லது மோர் கலந்து மாதவிலக்கின் போது 3 நாட்கள் - தொடர்ந்து மூன்று மாதம் குடித்துவர இரத்தப் போக்கு தணியும். வெள்ளை படுதலும் தீரும்.

½ லிட்டர் பசும் பாலை ஒரு பாத்திரத்தில் ஊற்றி அதன் வாயை ஒரு துணியால் மூடி - அந்தத் துணியின் மீது ஒரு பிடி புங்கம் பூவை பரத்தி வைத்து - பின்பு இதை அப்படியே ஒரு துணியால் மூடி - பால் பாதியாகக் கரையும் வரை சுண்டக் காய்ச்சி இறக்க வேண்டும். பாலைக் குடித்து விடலாம். புங்கம் பூவை நிழலில் உலர்த்தி - அது உலர்ந்த பின்பு சம அளவு பனங்கற்கண்டு சேர்த்து பொடி செய்து வைத்துக் கொண்டு காலை, மாலை இருவேளையும் ஒரு டீஸ்பூன் அளவு பாலில் கலந்து தொடர்ந்து 10 நாட்கள் குடிக்க கருப்பை மற்றும் கருப்பை வாயில் வரும் புண்கள், அழற்சி தீரும். இரத்தப் போக்கும் கட்டுப்படும்.

மாதுளத்திற்கு நிகர் எதுவுமே இல்லை என்று அடித்துச் சொல்லலாம். பழம், பூ, பட்டை - இப்படி ஒவ்வொன்றுமே தனியான பயன் கொண்டவை. பழத்தை உண்பதால் இரத்தப் போக்கு கட்டுப்படும். கருப்பை பலப்படும். இரத்தம் விருத்தியாகும். கருப்பை பலவீனத்தினால் ஏற்படும் குறைப்பிரசவம் தவிர்க்கப்படும். கருப்பையில் உண்டாகும் அழலையினால் ஏற்படும் குழந்தை உண்டாகாத நிலைமாறி கருத்தரிக்கச் செய்யும். கருமுட்டைப் பை (ஓவரி) பலம் பெறுவதுடன் அதில் 'சிஸ்ட்' எனப்படும் 'மறு' வராமல் தடுக்கும். மாதுளம் பழத்தின் தோல் கருப்பையின் சுவர்களை வலுப்படுத்தும். தோலை நிழலில் உலர்த்தி பொடி செய்து கொள்ள வேண்டும். இந்தப் பொடி 1 மடங்கு எனில் அதில் ¼ மடங்கு ஜாதிக்காய் பொடி சேர்த்து - இவை இரண்டின் அளவிற்குச் சம அளவில் பனங்கற்கண்டு தூள் சேர்த்து காலை, மாலை இருவேளையும் வெறும் வயிற்றில் பால் அல்லது மோர் கலந்து 5 அல்லது 7 நாட்கள் அருந்த வேண்டும். குடித்துவர கருப்பை மற்றும் அதன் சுவர்கள் வலிமை பெறுவதுடன் அகால கருச் சிதைவையும் தடுக்கும். இரத்தப் போக்கிற்கும் இது சஞ்சீவியாகும். இந்தப் பொடியுடன் அயச் செந்தூரம் சேர்த்துத் தொடர்ந்து சாப்பிட்டு வர 'க்லோரோசிஸ்' போன்ற மாத விலக்கு ஒழுங்கீனங்கள் தீரும். ஆனால் இந்த முறைகளை ஒரு மருத்துவரின் ஆலோசனையின் பேரில் மட்டுமே செய்ய வேண்டும்.

மாதுளம் பூ குடல், மற்றும் கருப்பை புண்களை ஆற்ற வல்லது. கருமுட்டை பையின் அழலையையும் தணிக்க வல்லது.

தீட்டு படாத நிலை, அதிகம் நாள் தள்ளி வரும் மாதவிலக்கு போன்றவைகளுக்கு மாதுளம் இலை நல்ல பலன் தரும். மாத

விலக்கு நாளை அனுசரித்து இலையை அரைத்து நெல்லிக்காய் அளவு விழுதை மோரில் கலந்து காலை, மாலை வெறும் வயிற்றில், 3 நாட்கள் அருந்த வேண்டும். காரம் மட்டும் சாப்பிடக் கூடாது. 3 வேளை யிலேயே பலன் நன்கு தெரியும். கருப்பை வளர்ச்சியிருந்தும் பருவமடையாத நிலைக்கும் மாதுளம் இலை பலன் தரும்.

இதன் வேரின் பட்டையை அரைத்து நெல்லிக்காய் அளவு விழுது எடுத்து மோரில் இட்டு கரைத்துக் காலை, மாலை வெறும் வயிற்றில் குடித்துவர வயிற்றிலுள்ள பூச்சி களுடன் கருப்பையின் வாயில் தங்கி உயிரணுக்களை விழுங்கி விடும் கர்ப்பக் கிருமிகளும் ஒழியும்.

முற்றிய மாதுளங்காயில் ¼ பங்கு எடுத்து பாலுடன் சேர்த்து வேகவைத்து நிழலில் உலர்த்தி பொடி செய்து அதனுடன் அமுக்க ராங் கிழங்கின் சூரணம் 5 கிராம், கோஷ்டம் சூரணம் 5 கிராம் சேர்த்து அதை தேவை யான அளவு வெண்ணையில் குழைத்து காலை, மாலை வெறும் வயிற்றில் 40 நாட்கள் தொடர்ந்து சாப்பிட்டு வர வேண்டும். இப் படிச் செய்வதால் கருப்பையும் மார்பகங் களும் நல்ல வளர்ச்சி பெறும். புளி, காரம் முதலியவைகளைத் தவிர்க்க வேண்டும்.

மாதுளங்காய் ஒன்றை 4 பாகங்களாகக் கீறி துண்டாக்கி 300 மிலி நல்லெண்ணையில் ஒவ்வொரு துண்டாகப் போட்டு சிவக்கக் காய்ச்சி - எண்ணையை மட்டும் ஆறவைத்து எடுத்து வைத்துக் கொண்டு மார்பகங்களில் தடவ அவை நல்ல வளர்ச்சி பெறும். ஓரிரு குழந்தைகள் பெற்று பால் கொடுத்தவர்களும் இதைத் தடவலாம். மார்பகத்தின் தளர்ச்சி நீங்கும்.

ஜாதிக்காய் பொடியுடன் பனங்கற்கண்டு பொடி. (இரண்டுமே 3 கிராம்) சேர்த்து 3 நாட்கள் வெறும் வயிற்றில் சாப்பிட்டு பின்பு பால் குடிக்க வேண்டும். மாதவிலக்கு நிற்கும் வயதில் ஏற்படும் அதிகமான இரத்தப் போக்கை இது கட்டுப் படுத்தும்.

கொய்யா காய் (பழம் அல்ல - காய் மட் டுமே) கருமுட்டைப் பைக்கு நலம் மிக தரும். முற்றிய கற்றாழையின் வடதிசை வேரைக் கிள்ளி எடுத்து நன்கு கழுவி சுத்தம் செய்து தண்ணீர் விடாமல் அரைத்து எடுத்து கொஞ்சம் பனங்கற்கண்டு சேர்த்து காலை (சூரிய நமஸ்காரம் செய்த பின்பு) இதை விழுங்க வேண்டும். பின்பு பால் குடிக்க வேண்டும். மாதவிலக்கின் நான்காம் நாள் முதல் மூன்று நாட்கள் தொடர்ந்து சாப்பிட கர்ப்ப வெட்டை நீங்கி கருத்தரிக்க வாய்ப்பு உண்டு.

பூமியில் விழாதபடி ஆலம் விழுதின் கொழுந்தை கொய்து முன்பு செய்தது போல அரைத்து பனங்கற்கண்டு சேர்த்து காலை சூரிய நமஸ்காரம் செய்து - சாப்பிட்டு பால் குடித்துவர (மாதவிலக்கின் 4-ம் நாள் முதல் மூன்று நாட்கள் சாப்பிட வேண்டும்.) கர்ப்ப வெட்டை நீங்கி கருத்தரிக்கும் நிலை உண் டாகும்.

சுத்தமான துணியில் கடுகைச் சுத்தம் செய்து தளர முடிந்து பின்பு மண்பரப்பி அதன் மீது இந்த முடிச்சை வைத்து இதன் மேல் நீர் நிறைந்த மண்பானையை வைக்க வேண்டும். கடுகு நன்கு முளை விட்டதும் அதை நிழலில் உலர்த்தி சம அளவு பனங் கற்கண்டு அல்லது பனை வெல்லம் சேர்த் துப் பொடி செய்து கொண்டு தினமும் ஒரு டீஸ்பூன் தொடர்ந்து 15 நாட்கள் காலை, மாலை சாப்பிட்டு வர கருமுட்டை உருவா வதில் உள்ள சிக்கல் தீரும். மாத விலக்கும் சரியாக வரும்.

பிரண்டைக் கிழங்கு அல்லது புளி நடலைக் கிழங்கு கருப்பைக் குழாயின் அடைப்புகளை நீக்குவதில் முக்கிய இடம்

## வாசனைத் துவையல்

ஒரு நாள் சமையலில் மீதி இருந்த 10 மிளகாய் வற்றலை அஞ்சறைப் பெட்டியில் போட சோம்பல் பட்டுக் கொண்டு, பக்கத்தில் இருந்த, சோம்பு லவங்கம், பட்டை, கிராம்பு இருக்கும் மசாலா டப்பாவில் போட்டேன். மற்றொரு நாள் தேங்காய்த் துவையல் அரைக்கும் போது, மசாலா டப்பாவில் இருக்கும் மிளகாய் வற்றல்களை உபயோகித்தேன். என்ன ஆச்சர்யம்! துவையலில் அருமையான கிராம்பு மணம். சாப்பிடுவதற்கு, கறிவேப்பிலை துவையல் போல நல்ல மணமாக இருந்தது. அன்றிலிருந்து, என் வீட்டில், ஒரு பகுதி மிளகாய் வற்றல் மசாலா சாமான் டப்பாவில்தான் இருக்கிறது.

— வி.ஆர். சித்ரா





17 புள்ளி, 3 வரிசை, 3ல் நிற்க



17 புள்ளி, 5 வரிசை, 5ல் நிற்க

— உமா மகேஸ்வரி

பெற்றவை. ஆனால் இவைகளை ஒரு மருத்துவரின் ஆலோசனை பெற்றே உண்ண வேண்டும். வயதுக்கு வராத (இயல்பான கருப்பை வளர்ச்சியிருந்த போதும்) பெண்களுக்கு பிரண்டைக் கிழங்கும், புளி நடலைக் கிழங்கும் நல்ல பலன் தரும். ஆனால் இவைகளை ஒரு மருத்தவரின் மேற்பார்வையில் மட்டுமே சாப்பிட வேண்டும்.

கருப்பை நோய்க்கு சஞ்சீவி போன்றது பச்சிலை அம்மான் பச்சரிசிதான். கீழா நெல்லி போன்ற உருவ அமைப்பில் ஆனால் சற்று பெரிய உருவத்துடன் - மூட்டைப் பூச்சி போன்ற நீள வட்ட இலைகளுடன், கணுக்களில் தினை அரிசியைப் போன்ற சிறு கொத்தான காய்களும் உடைய இந்தப் பச்சிலை சிவப்பு, பச்சை ஆகிய இரு நிறங்களிலும் தரைமேல் படர்ந்து இருக்கும். இதன் தண்டை கிள்ளி ஒடித்தால் பனித் துளியைப் போன்ற பால் வரும். இந்தப் பாலைத் தொட்டு கையின் மேல் புள்ளி போல வைத்து அதன் மேல் கரித்தூளை தூவி அழித்தால் பச்சை குத்தியது போல இருக்கும். இதனால் இதற்குச் சித்திரப் பாலாடை என்ற ஒரு பெயரும் உண்டு. இதைத் தண்ணீரில் அலம்பி விட்டு அப்படியே கூட மென்று தின்னலாம். இதை அரைத்து - கொட்டைபாக்களவு விழுது எடுத்து தினமும் 2 வேளை 3 நாள் அல்லது 5 நாள் சாப்பிட்டு பால் குடிக்க வேண்டும். உணவில் உப்பு, புளி, காரம் விலக்கி உண்ண நீடித்த, அதிகமான இரத்தப் போக்கு நிற்கும். மாதவிலக்கை சில நாட்கள் தள்ளிப் போட இன்றும் கிராமப் புறங்களில் பலருக்கு இது கைகண்ட மருந்தாக விளங்குகிறது.

ஒழுங்காக வரும் மாத விலக்கு திடீரென ஒழுங்கினமாக வரத் தொடங்கினால் இரத்த சோகை மட்டுமல்லாமல் வேறு சிக்கலான காரணங்களும் இருக்கக் கூடும். அடிக்கடி வலி நிவாரணிகளையும், ஹார்மோன் சம்பந்தமான மருந்துகளையும், ஸ்டீராயிடுகளையும் பயன் படுத்துவோருக்கு இது போன்ற பாதிப்புகள் இருக்கும். இப்படி ஒரு நிலையில் முழுப்பரிசோதனை தேவை. கட்டிகள் போன்ற பிரச்னைகளும் இருக்கலாம். இது போன்ற பிரச்னைகள் எதுவுமில்லாத நிலையில் மாதவிலக்கு வரத் தாமதமானால் சதகுப்பை, ஓமம், கறுப்பு நிறமான கொள்ளு இவை மூன்றையும் தலா 25 கிராம் வீதம் எடுத்து நசுக்கி 4 பங்கு நீருடன் கலந்து அது 1 பங்காகக் குறையும் வரை காய்ச்சி இந்தக் கஷாயத்தை முறைப்படி 5 நாட்கள் குடித்து வர சூதகம் உடையும். 20 நாட்களுக்குட்பட்ட கருவும் கலையும் வாய்ப்பு உண்டு.

கருப்பை நோய்களே பெண்களை வாட்டும் நோய்களில் முக்கியமானவைகளாகவும், மற்ற பல நோய்களுக்கு மூல காரணமாகவும் அமைந்துள்ளன. சில வகை கருப்பைக் கோளாறுகளினால் பல பெண்களுக்குக் குழந்தைப் பேறு இல்லாமல் போகவும் காரணமாகி விடுகிறது. இளம் வயதில் இவைகளை அலட்சியம் செய்து விட்டு காலம் கடந்த பின்பு இவைகளை நாடுவதால் என்ன பயன். எளிதாகக் கிடைக்கக் கூடிய வீட்டிலேயே சமைத்து உண்ணக் கூடிய பழங்கள், கீரைகள் பச்சிலைகளைக் கொண்டு ஆரம்ப நிலையிலேயே குணப்படுத்தமுயல வேண்டும்" என்றார் டாக்டர் ஜெயராமன்.

— வைதேகி தேசிகன்

மங்கையர் மலர் &
மீரா ஹெர்பல்
பவுடர்

இணைந்து வழங்கும்

கூந்தல்
பராமரிப்புப்
பக்கங்கள்

# இராட்சசி போல புருவம் வளருமா?

பதில்கள்:
மைதிலிபாபு



எல்லா பெண்கள் வாழ்க்கையில் வரும் வசந்தமான நாள் திருமண நாள்தான்! எத்தனைக் கனவுகளுடன் காத்திருந்து அந்த ஒரே நாள்தான் இனிமையை ரசித்து அனுபவிக்கும் நாள்! இதில் மிகப் பெரும்பான்மையோர் என்ன நினைக்கிறார்கள் என்றால், மணப்பெண் அலங்காரம் நாமே செய்து கொள்ளலாமே, எதற்காக அழகுக்கலை நிலையம் சென்று பணத்தைச் செலவழிக்க வேண்டும் என்பது தான்!

ஆனால் ஒரு திருமணத்தின்போது எத்தனையோ இலட்சங்கள் செலவாகிறது. ஏன், கூரைப்புடவை கூட தற்போது 50,000 ருபாயில் வருகின்ற இந்தக் காலத்தில் நம் அழகுக்காக சில ஆயிரங்கள் செலவு செய்வதில் தவறில்லை. அதாவது மணப்பெண் அழகு நிலையம் சென்று அழகாக மேக்கப், தலை அலங்காரங்கள் செய்து கொண்டால், கல்யாணத்தை வீடியோ எடுக்கும்போது மணப்பெண்ணின் அழகுக்கு அழகு சேர்ப்பதாக இருக்கும். 60 வயதில் போட்டுப் பார்த்தால் கூட மலரும் நினைவுகள் தானே! அட நாம் இத்தனை அழகாக இருந்திருக்கிறோமா என்ற ஒரு புத்துணர்ச்சி மலரும். இனி light make up செய்வது எப்படி? என்று விளக்கு வோம்.

முதலில் முகத்தை நன்றாகக் கிளின்சிங் க்ரீம் போட்டு சுத்தம் செய்து விட்டு பின் கடைகளில் கிடைக்கும் நல்ல பவுண்டேஷன் நம் முகத்திற்கு தகுந்த ஷேடில் தேர்ந்து எடுக்க வேண்டும். பின்பு அதே கலரிலேயே கடைகளில் கிடைக்கும் பவுர் போட

வேண்டும். பின்பு கண்களுக்கு மேற்புறம் நாம் அணியும் உடைக்கு ஏற்ற கலரில் ஐ ஷேடோ போட வேண்டும். பின் கண்களுக்குக் கீழ், மேல், பகுதிகளில் ஐலைனர் போட வேண்டும். பிறகு இமை முடிகளின் மேல் மஸ்காரா ப்ரெஷ் போட்டு நன்றாக ரோல் செய்து விட வேண்டும். இதனால் ஒவ்வொரு கண் இமை முடியும் தனியே தெரிவதோடு, கண்கள் அழகாக தெரியும். பிறகு ரூஜ் போட வேண்டும். இது அவரவர்கள் கன்ன கதுப்புகளுக்கேற்றபடி போட வேண்டும். பிறகு ஐப்ரோ பென்சில் வைத்து புருவங்களை அழகு படுத்த வேண்டும். பிறகு தங்களுக்குப் பிடித்த கலரில் உதடுகளை நேர்த்தியாக வடிவம் கொண்டு மிக அழகாக வரைய வேண்டும்.

நீங்கள் அழகு நிலையம் சென்று அலங்காரம் செய்து கொண்டால், அங்கு உபயோகப் படுத்தப்படும் மேக்–அப் சாதனங்கள் நல்ல ப்ராண்ட் ஆக உள்ளதா எனப் பார்க்க வேண்டும். இல்லையெனில் பக்க விளைவுகள் ஏற்படும். அதனால் நல்ல சாதனங்களை உபயோகப்படுத்தும் அழகு நிலையம் செல்ல வேண்டும். திருமணப் பெண்கள் கைகளில் உள்ள முடியை வேக்ஸிங் செய்து எடுத்து விட்டால், வீடியோவில் அழகாக இருக்கும். ஒருமுறை வேக்ஸிங் பண்ணுவதால் ஒரு கெடுதலும் வராது!

***கேள்வி: என் மகனுக்குத் திடீரென பின் தலையில் முடிகள் குறைந்து, 'வழுக்கை' போல் தெரிய ஆரம்பித்துள்ளது. அவன் மிகவும் கவலைப்படுகிறான். ஒரு ஐடியா ப்ளீஸ்?***
***ரேவதி வைத்யா,*** ***சீர்காழி.***

*தங்கள் மகனின் வயதை நீங்கள் குறிப்பிடவில்லை. திடீரென்று பின் தலையில் முடிகள் குறைந்தால், நீங்கள் கண்டிப்பாக தோல்நோய் நிபுணரிடம் செல்ல வேண்டும். பிறகு பசும்பாலில் அதிமதுரத்தைக் கலந்து அரைத்து அந்தச் சொட்டையான இடத்தில் பூசிவிட்டு ஒரு மணி நேரம் கழித்து சுத்தம் பண்ண வேண்டும். இப்படியாகக் குறைந்தபட்சம் ஆறுமாத மாவது சிகிச்சை செய்ய வேண்டும்.*

***கேள்வி: எனது கண்கள் கீழ்ப்பகுதியில் அதாவது Below eyes மிகவும் கருப்பாக உள்ளது. இதை போக்க வழி சொல்லுங்கள். நான் டாக்டரிடம் காட்டியபிறகு சி வைட்டமின் மாத்திரையும் சாப்பிடுகிறேன். இன்னும் அதே நிறத்தில் உள்ளது. ஏதாவது ஆலோசனைகள் சொல்லுங்கள்.***
***எஸ். கமலா முரளிதரன்,*** ***சென்னை-95***

*கண்களில் உள்ள கருப்பு வளையம் நீங்க, வைட்டமின் கேப்ஸ்யூலுடன் சிறிதளவு கேஸ்டர் ஆயிலும் கலந்து சிறிதளவு மசாஜ் செய்து விடவும். பிறகு சுடு நீரில் துணியை நனைத்து கண்களின் மேல் தினமும் ஒத்தி எடுக்க வேண்டும். இப்படியாக ஒரு மாதம் செய்தால், கண்களைச் சுற்றி உள்ள கருவளையம் நீங்கும்.*

***கேள்வி: நான் மாநிறத்துக்கும், சற்று குறைந்த நிறம். ஆனால் என்னுடைய உதடுகள் மட்டும், மகவும் கருப்பாக உள்ளது. நான் கல்லூரி மாணவி, என் தோழிகள் அனைவரும், உதடுகள் இப்படி கறுப்பாக இருக்கே என்கிறார்கள். நீங்கள் ஒரு நல்ல வழியை எனக்குக் கூறவும். அல்லது இதற்கு ஆக்ஸயுபிட் நயுககிக்கட் செய்து கொள்ள வேண்டுமா?***
***ஜெ.விஜயலட்சுமி,*** ***சென்னை-41***

| பரிசு பெற்ற கட்டுரைக்கு மீரா அளிக்கும் பரிசு ரூ.1000 மதிப்புள்ள குக்கர் | அடுத்த இதழுக்கான போட்டித் தலைப்பு- நான் அனுபவத்தில் கண்ட அழகுக் குறிப்பு- கடைசி தேதி : 15.3.95 |
|---|---|

உதடுகள் கறுப்பாக இருக்கக் காரணம், நம் உடலில் ஏதாவது சக்தி குறைவாக இருந்தாலும் இருக்கலாம். ஆயினும், இதற்கு இயற்கை மருந்து தடவினால் மிக நல்லது. தினந்தோறும், எலுமிச்சைச் சாற்றை உதட்டில் தடவி பின்பு பசு நெய்யை உதட்டின் மேல் இரவு படுக்கும் போது தடவினால், நாளடைவில் நிறம் மாறும்.

**கேள்வி: புருவத்தை அழகு படுத்துவது நல்லது தானா? தொடர்ந்து அப்படி செய்துகிட்டே இருக்கணும், இல்லாட்டி அது 'ராட்சஸி' புருவம் போல் தடித்துப் போய் கோரமாகக் காட்டும் என்று பயப் படுத்துகிறார்கள். (வேறு யார் நண்பர்கள் தான்) இந்த நிலையில் குழம்பியிருக்கும் என்னைத் தெளிவு படுத்துங்களேன்...!**

**ராஸ்வர்ணா, சென்னை.**

புருவத்தை அழகுபடுத்துவது தவறு அல்ல. ஆனால் புருவத்திலுள்ள முடி எந்தப் பக்கம் வளர்ந்து உள்ளதோ அதே பக்கமாகத்தான் நூலை வைத்து த்ரெட்டிங் செய்ய வேண்டும். கை தேர்ந்த அழகுக்கலை நிபுணர்கள் மிகச் சரியாக இதைச் செய்வார்கள். அப்படியின்றி, புருவத்தை த்ரெட்டிங் செய்யாமல் விட்டாலும் கவலை இல்லை. ராட்சஸி போல் கோரமாக வளராது. மனக்கவலையை விடுங்கள்!

**கேள்வி: எனக்கு 25 வயது ஆகின்றது. கடந்த ஒரு மாதகாலமாக முகத்தில் சிறு சிறு பருக்கள் தோன்றி அது காய்ந்தவுடன் கருப்புப் புள்ளிகளாக மாறுகின்றது. தினமும் இரவில் மஞ்சளும் பாலாடையும் கலந்து பூசி வருகின்றேன். அப்பொழுதும் பருக்கள் குறையவில்லை. இதனால் என் முகம் முழுவதும் பார்ப்பதற்கு நன்றாக இல்லை. என்ன செய்வதென்றே தெரியவில்லை.**

**பாரதி, சேலம்**

முகப்பரு மறையும்போது கரும்புள்ளிகள் கண்டிப்பாகத் தோன்றும். அதனால் நீங்கள் தண்ணீரை நன்கு கொதிக்க வைத்து, முகத்தில் சிறிதளவு வேப்பிலை, கஸ்தூரி மஞ்சள் அரைத்த கலவையைத் தேய்த்துப் பின் 15 நிமிடங்கள் கழித்த பின் கொதிக்கும் நீரில் முகத்தைக் காட்டி ஆவி பிடித்தால் நாளடைவில் கரும்புள்ளிகள் மறையும். பரு உள்ளவர்கள் பால் ஏடு உபயோகிக்கக் கூடாது. (அல்லது) மிகவும் அதிகமாக கரும்புள்ளிகள், பரு உள்ளவர்கள் அழகு நிலையங்களை அணுகி High Frequency Machine மூலமாக சிகிச்சை பெறலாம்.

**கேள்வி: நான் முகத்திற்கு தினமும் மஞ்சள் போடுவேன். மஞ்சள் போடுவதால் தோலில் சுருக்கம் விழும் என்று கூறுகிறார்களே. இது உண்மையா?**

**எம்.சீதா, நாமக்கல்.**

முகத்திற்கு வெறும் மஞ்சளை மட்டும் தேய்த்துக் குளிப்பதால் தற்போது உள்ள சீதோஷ்ண நிலையில் முகத்தில் நிறைய சுருக்கங்கள் விழும். அதனால் மஞ்சளை கடலை மாவுடன் கலந்தோ (அ) பால் ஏடுடன் சேர்த்தோ எழுமிச்சம்பழ சாறுடன் சேர்த்தோ தேய்த்துக் குளிக்கலாம்.

## "கூந்தல் பற்றிய நகைச் சுவைச் சம்பவம்!"

### பரிசு பெற்ற கட்டுரை

என் கணவர் ஒரு மத்திய அரசு அலுவலகத்தில் பணி புரிந்து கொண்டிருந்தார். அவர்களின் அலுவலக மனமகிழ் மன்றத்தின் ஆண்டு விழா நடைபெற்றது. அப்போது, முழுவதும் ஆண்களே நடிக்கும் 'பிரிவுகள்' என்ற நாடகத்தை நடத்தினார்கள். அதில் ஒரு காட்சி:

# எத்தனையோ நிதிநிறுவனங்கள் இருக்க, மக்கள் BCL-ல் முதலீடு செய்வது ஏன்....




## 3 ஆண்டுகளில் 16 மடங்கு லாப அதிகரிப்பு

ஃபிக்சட் டெபாசிட்டுகளைத் திரட்டுவது ஒன்றும் அவ்வளவு கடினம் அல்ல. ஆனால், கணிசமான லாபம் பெறும்வகையில் அந்தத் தொகையை முதலீடுகளில் ஈடுபடுத்துவது... அந்த வகையில் BCL-ன் திறனே அலாதி. ரியல் எஸ்டேட், தொழில்துறை நில அகழ்வு, லாரிகள், வாகனங்கள் ஆகியவற்றுக்கு நிதியுதவி அளிப்பதன் மூலம் BCL லாபம் பெறுவதை உறுதி செய்கிறது.

BCL-ல் முதலீடு செய்யும்போது உங்கள் பணம் பத்திரமாக இருக்கிறது. பாதுகாப்புக்கு கிரிஸில் மதிப்பீட்டை பெற்றிருக்கிறது. நீங்கள் தேர்ந்தெடுக்க வசதியாக:

1. கலப டெபாசிட் திட்டம்.
2. குமுலேடிவ் டெபாசிட் திட்டம்
3. ரொக்க சர்ட்டிபிகேட் திட்டம்

**உதாரணமாக அதன் சமீபத்திய வெளியீட்டில் 31.184 மடங்கு அதிகமாக முதலீடு செய்திருக்கிறார்கள்**




- பின்தேதியிட்ட வட்டி வாரன்ட்டுகளை தேனா வங்கியின் எல்லா கிளைகளிலும் சம தொகையில் ரொக்கமாக மாற்றலாம்.
- ஒவ்வொரு நிதியாண்டுக்கும் பின் தேதியிட்ட வட்டி வாரன்டடுகள் முன்னதாகவே அனுப்பப்படுகின்றன.
- வாரிசுதாரர் நியமன வசதி.
- திறன் மிகுந்த நேரடி சேவை.
- தனிநபர் விபத்து இன்ஷுரன்ஸ்
- RBI கட்டளைகளுக்கிணங்க முதிர்வுக்கு முன்னதாகவே திரும்பப்பெறும் வசதி.
- RBI கட்டளைகளுக்கிணங்க டெபாசிட்டின் 75% தொகை வரை கடனாகப் பெறும் வசதி



**பிசிஎல் ஃபைனான்சியல் சர்வீஸஸ் லிமிடெட்**

**பிராந்திய அலுவலகம்:**
"அலி டவர்ஸ்", 22, கிரீம்ஸ் ரோடு, சென்னை-600 006.
போன்: 8252719, 8276725, 8253922.
(பதிவு அலுவலகம்: 1/1, கேமக் தெரு, கல்கத்தா-700 016. போன்: 29-9359, 29-1476, 29-4675)
கிளைகள்: பம்பாய். ● கொச்சி - போன்: 334130 ● ஜாம்ஷெட்பூர்.

ADWAVE/BCL4918 TAM A

புதிதாக மணமான தன் மனைவியை விட்டு விட்டு அயல் நாடு செல்கிறான் கணவன். மனைவியாகப் பெண்வேடம் பூண்டு நடித்தவர், கணவனின் காலில் விழுந்து வணங்கி அழுது கொண்டே விடை கொடுக்கிறாள்!

''உங்கள் பிரிவை நான் எப்படித் தாங்குவேன்....! என்ன செய்வேன்!'' என்று புலம்பிக் கொண்டே காலில் விழுந்து வணங்கி விட்டு எழுந்த போது... நீண்ட சடை உடைய 'டோப்பா'- கணவனாக நடித்தவரின் காலில் சிக்கி கீழேயே கிடந்தது! பெண்வேடமிட்டவர் கிராப்புத் தலையுடன் மேடையில் நிற்பதைக் கண்டதும்... பார்வையாளர் பகுதியில் இருந்து ஒரே சப்தமும், சிரிப்புமாக மாறி விட்டது!

உடனே, பேசியே சமாளித்தார் கணவன் வேடம் போட்டிருந்தவர்! அவர் சொன்னார்,''அந்தக் காலத்தில் கணவனைப் பிரிந்த பெண்கள் உடல் மெலிந்து, அவர்கள் அணிந்திருந்த வளையல்கள், தானே கழன்று விழுமாம்!... ஆனால், நான் பிரிந்து போகிறேன் என்று கேட்டவுடனேயே உன்னுடைய கூந்தலே கழன்று விழுகிறதே!.. உனக்குத்தான் என்மீது என்ன அன்பு! என்ன அன்பு!'' சபையோர்கள் கரகோஷத்துடன் கை தட்டி ஆரவாரம் செய்தனர்!...

அந்த நாடகத்தில் கூந்தல் கழன்று விழும் மனைவியாக நடித்தவர்... என் கணவர்தான்!!!

-பி.கசீலா, உடுமலை



## பிரசுரத்திற்குச் சில கட்டுரைகள்...

## குண்டல கேசி

**எ**ன் பள்ளிக் கூட நாட்களில் என் 'கூந்தல் வளர்ப்புத் திட்டம்' தோழியரிடையே ரொம்பவும் பிரபலம். என்ன செய்தும் என் கூந்தல் அளவு கழுத்தளவோடு நின்றது. இரட்டைப் பின்னல் போட்டால் காது குண்டலங்கள் உயரம் வரைதான் என் பின்னல் வரும். அதனால் 'குண்டலகேசி' எனும் சிறப்புப் பெயர் கூட (உபயம் என் அண்ணா) உண்டு எனக்கு. பள்ளி, கல்லூரி நாட்களில் எல்லா நாடகங்களிலும் சவுரி பின்னலுடன் நான் ஆஜர். என் கூந்தல் ஆசைக்காகவே பல சமயம் புது பாத்திரங்கள் நாடகத்தில் இடம் பெறும். ராணியோ, சேடிப் பெண்ணோ சவுரிக் கூந்தலுடன்(ஒசிச் சவுரி) நான் நிச்சயம். அப்பேற்பட்ட எனக்கு கல்யாணமும் வந்து சேர்ந்தது.

கல்யாணத்திற்கான சில புடவை, புது சவுரி2, (ஒரளவிற்காவது நீளம் வரும்) பித்தளை நகைகள் சில மெட்ராஸில் வாங்கினோம் (நான் மதுரைக்காரி). சாமான்கள் நிறைய இருந்ததால் மெட்ராஸ் சித்தியிடம் சவுரி மற்றும் சிலவற்றைக் கொடுத்து என் கல்யாணத்திற்கு வரும்போது கொண்டுவரச் சொல்லிவிட்டு மதுரை வந்து சேர்ந்தோம்.

கல்யாணம் 23, மே 91 அன்று. அதற்கு 2 நாள் முன் ராஜீவ் கொலை காரணமாக, போக்குவரத்து சரியில்லாததால் தூரத்திலுள்ள உறவினர் யாரும் கல்யாணத்திற்கு வர முடியவில்லை. மெட்ராஸ் சித்தி உட்பட. எனவே கல்யாணத்தின் போது வேறு சவுரியும் இல்லை. வந்திருந்த சில உறவினரிடமும் சவுரி இல்லை. வாத்தியாரோ மணமேடைக்கு வரச் சொல்லிவிட்டார். அம்மா, அப்பாவிடம், ரொம்ப வருத்தமாக சவுரிராஜன் (என் வீட்டில் சவுரியின் செல்லப் பெயர்) இல்லாமல் பொண்ணுக்கு எப்படி அலங்காரம் செய்வது என்றதைக் கேட்ட எங்கள் தோழி பீவியக்கா என்பவர் முகம் தெரியாத சவுரிராஜனை தேடிப் போக பின் அவருக்கு சவுரிராஜனைப் பற்றி விளக்கி விட்டு என் வீட்டு வாண்டுகளிடம் யாராவது சவுரி வைத்திருக்கிறார்களா என்று பார்க்கச் சொன்னோம். அவைகளும் வந்திருக்கும் பெண்களுடன் ஆசையாக சஷ்டிபடி. அவர்கள் கூந்தல் நிஜமா, சவுரியா என் ஆராய ஆரம்பித்தன. போதாக் குறைக்கு ஒரு வாண்டு ஒரு பெண்ணிடம் போய் இது நிஜக் கூந்தலா, சவுரியா எனக் கேட்க அவர் சண்டைக்கே வந்து விட்டார். மொத்தத்தில் வாண்டுக் கூட்டம், வாழைத் தோட்டத்தில் விட்ட குரங்குக் கூட்டம் போல் இருந்தது.

கடைசியில் யாரோ ஒரு பெண்ணிடம், (வயது45 இருக்கும்) சவுரி இருப்பதாகக் கேள்விப்பட்டு வாங்கிப் பார்க்க அதுவோ, பாதி நரை, பாதி கருப்பு நிறம் இருக்கும். வயதானவர் உபயோகிக்கும் சவுரி. என் பாட்டியும் அதையே வாங்கி வைத்துப் பின்னி, மேலே பூசுற்றிவிடலாம் என்று சொல்ல அதையே வைத்துப் பின்னியாகி விட்டது.

அப்பொழுது போக்கு வரத்து சரியில்லாத காரணத்தினால் பூவும் வரவில்லை.



ஒரே சோகத்துடன் மறுபடி பின்னலைப் பிரித்து அதன்மேல் கருப்பு ரிப்பன் வைத்து மறுபடி பின்னி அதன் மேல் பாசி மணிகளைப் பதித்து ஒரு வழியாக மேக்கப் முடிந்ததும், சவுரிராஜன் சகிதம் மெட்ராஸ் சித்தி வந்திறங்கினார்.

இன்றும், கூந்தல் பற்றிய கட்டுரை ஏதாவது படிக்கும் போதெல்லாம், என் கல்யாணத்தின் போது, என் அருமை 'குண்டலகேச'த்துடன் பட்ட பாடு நினைவிற்கு வந்து சிரிப்பை வரவழைக்கும்.

(பி.கு. இப்பொழுது என் கூந்தல் தோள் வரை வளர்ந்து விட்டதாக்கும்)

எஸ்.ஹன்ஸா காஷ்யப், பாளையங்கோட்டை

## "முருகா, முடியே வளரக் கூடாது!"

என் சகோதரிக்கு அப்போது வயது 9. என் சகோதரனுக்கு 8 வயது. இருவரும் ஒருநாள் சண்டையிட்டுக் கொண்டார்கள். வீட்டில் நாங்கள் பல குழந்தைகள் இருப்பதால்- எப்போதும் ஏதாவது இரு குழந்தைகளுக்கிடையே சண்டை வந்து கொண்டே இருக்கும்.

நாள்முழுவதும் வேலை செய்து, செய்து அலுத்துக் கொண்டிருக்கும் என் அம்மாவிற்கு- சண்டை என்றால் அலர்ஜி. இருவரும் சண்டை போட்டதும், ஓடிவந்தாள் அடிக்க- இருவரும் ஓடத் தொடங்கினாலும்- என் சகோதரியின் முடி என் அம்மாகையில் சிக்கியதால்- அவள் அம்மா கையில் சிக்கினாள். இருவருக்கும் கிடைக்க வேண்டிய உதை அவள் ஒருவளுக்கே கிடைத்தது. தம்பி ஓடி தப்பித்து விட்டான். தன்னால் தப்ப முடியவில்லையே- இத்தனை அடியும் வாங்கி விட்டோமே என்ற ஆதங்கமும்- ஆத்திரமும் என் தங்கைக்கு வந்தது. "முருகா"- என அவள் கத்தத் தொடங்கியதும், நாங்கள் அவள் என்ன செய்யப் போகிறாளோ என பயந்தபடி ஓடினோம். "முருகா இந்த முடி இருந்ததால் தானே என்னை என் அம்மா புடிக்க முடிஞ்சது எனக்கு முடியே வளரக் கூடாது முருகா" என்று கத்தினாள் நாங்கள் எல்லோரும்- அவளின் சிறு குழந்தைத் தனமான வேண்டுதலை ரசித்து ரசித்து சிரித்தோம். பலமுறை கேலியும் செய்தோம். என்ன காரணமோ அவளுக்கு முடி சரியாக வளரவே இல்லை. இது நடந்து 25 வருடங்கள் ஓடிவிட்டது. அவளுக்கு அரை அடி கூட முடி இல்லை. ஸ்டைலாக முடியைச் செய்து கொண்டிருந்தாலும் முடிவளராதது வளராததுதான். இப்போதும் எங்கள் குடும்ப விசேஷங்களில் ஒன்றாய்ச் சேரும் போது அவள் முருகனிடம் வேண்டியதைச் சொல்லி- "அதனால்தான் உனக்கு முடி வளரவே இல்லை" என்று சொல்லிச் சொல்லி சிரிப்போம்.

-மாலா, சென்னை.

## "பாம்பு...! பாம்பு...!"

என் பெரியப்பா பெண் சரயூவுக்கு நீண்டமுடி. அடர்த்தியாக முழங்காலுக்குக் கீழ் தொங்கும். நுனிவரை பின்னி ரிப்பன் வைத்துக் கட்டியிருப்பாள். அவள் கிராமத்திற்கு நாங்களனைவரும் சென்றிருந்த சமயம் ஒருநாள் இரவு நாங்கள் பரமபதம் (பாம்பு, ஏணி) விளையாடிவிட்டு, படுத்துத் தூங்கி விட்டோம். நள்ளிரவுக்குப் பின் 'பாம்பு, பாம்பு' என்று சரயூ கூச்சலிட்டாள். அனைவரும் அலறியடித்துக் கொண்டு எழுந்தோம். எங்கு தேடியும் பாம்பு அகப்படவில்லை. வேறு வழிகளோ இல்லை. சரயூ வேறு 'இவ்வளவு நீண்ட பாம்பு' எனக் கையை நீட்டி நீட்டிக் காட்டுகிறாள். எங்களுக்கெல்லாம் ஒரே கிலி.

என் பெரியப்பா நிதானமாக 'எங்கு பார்த்தாய்' எனக் கேட்டார். அவள் படுத்திருந்த தலையணைக்குப் பின்னால் நீளமாகக் காண்பித்தாள். பெரியப்பா அவள் நீண்ட பின்னலைக் காட்டி "இப்படியேதான் படுத்துத் தூங்கினாயா?" எனக் கேட்டார். "ஆமாம்" என்றாள். சிரித்துக் கொண்டே "அது பாம்பு இல்லை உன் பின்னல்" என்றார்.

இரவில் பின்னலைப் பாதிவரை மடித்துக் கட்டிக் கொண்டுதான் தூங்குவாளாம் அன்று விளையாட்டு மும்முரத்தில் பின்னலைத் தூக்கி தலையணைக்குப் பின்னால் போட்டுக் கொண்டு அப்படியே தூங்கி விட்டாள். தூக்கக் கலக்கத்தில் பின்னல் பாம்பு போல் தெரிந்திருக்கிறது. பரமபதம் விளையாடி விட்டுத் தூங்கியதால் வந்த வினை! பெரியப்பா இதை விவரித்ததும் அனைவருக்கும் ஒரே சிரிப்பு. இப்பொழுதும் அவளைப் பார்த்தால் பின்னலைப் பிடித்து, இழுத்து, ஆட்டி, 'பாம்பு! பாம்பு!' எனக் கேலி செய்வோம்.

-இன்பவல்லி, கிருஷ்ணகிரி.

**நோய் நீக்கும் 100 மூலிகைகள்**

அதிமதுரம், கற்றாழை, புளிச்சக்கீரை போன்ற மூலிகைகளின் பயன்கள்.

விலை ரூ. 17.00

**முருகன் திருத்தலங்களும் திருப்புகழும்**

திருப்புகழ் பாடப் பெற்ற வயலூர், குன்றக்குடி போன்ற திருத்தலங்களின் மகிமை.

விலை ரூ. 14.00

(இரண்டும் - அருண் நிலையம், 17, அம்மையப்பன் சந்து, இராயப்பேட்டை, சென்னை - 14)

**கரிகாலன் கனவு**

சோழன் கரிகாலன் மாபெரும் வீரன் மட்டுமல்ல, மக்கள் நலம் காக்கும் மன்னனாகவும் விளங்கினான் எனக் கூறும் அருமையான சரித்திர நாவல். ஆசிரியர் அய்க்கண்.

விலை ரூ. 57.00

**ஒரு கல் வைரமாகிறது**

சிறுவர்களுக்கான கதை. ஆசிரியர் டி. ஜானகி.

விலை ரூ. 18.00

(இரண்டும் - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர்., சென்னை - 17)

**அருகம்புல், எலுமிச்சை இயற்கை வைத்தியம்**

அஜீரணம், வயிற்றுவலி இவற்றிற்கு இயற்கை மருந்துகளைக் கொண்டு குணப்படுத்தும் விதம். ஆசிரியர் - மூலிகை வைத்தியர் இராமதாஸர்.

விலை ரூ. 12.00

**திருமணத் தடை நீக்கும் திருக்கோவில்கள்**

பரிகாரம், ஸ்தோத்திரம், ஸ்தல மகிமை என பலதும் சொல்கிறார் ஆசிரியர் எஸ். பி. சுப்ரமணியன்.

விலை ரூ. 14.00

(இரண்டும் - நர்மதா பதிப்பகம், 16/7 ராஜாபாதர் தெரு, பாண்டிபஜார், தி.நகர்., சென்னை - 600 017)

**இவர்தான், கொஞ்சம் கவனி...**




அனுராதாரமணனின் நாவல். அவருக்கே உரிய நெகிழ வைக்கும் சம்பவங்கள், உரையாடல்கள்.

விலை ரூ. 21.00

**Soup Salad Sauce & Snacks**

ஆசிரியர் கலக்ஷ்ணா ராஜகோபால்.

விலை ரூ. 20.00

**அமைதி தரும் தியானம்**

தியானத்தின் சிறப்புக்களை விளக்குபவர் எஸ். இரகுநாதன்.

விலை ரூ. 25.00

**விடுகதைகள் 1000**

தொகுப்பு - பிரேமா ரகுநாதன்.

*தொப்பையனுக்கு ஒரு வாசல்*
*தோழனுக்கு இரண்டு வாசல்*
*அது என்ன? (சட்டை)*

விலை ரூ. 25.00

## உணவும் உடல்நலமும்

உணவால் ஆரோக்கியமும் வரும், கொலஸ்ட்ராலால் இருதய நோயும் வரும் என விளக்குகிறார் பி. சி. கணேசன்.

விலை ரூ. 15.00

(கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர்., சென்னை - 600 017.)

## போதைப் பழக்கத்திலிருந்து விடுபட நடைமுறை யோசனைகள்

ஆசிரியர் - கே. எஸ். சுப்ரமணி

விலை ரூ. 14.50

(மணிமேகலை பிரசுரம், த.பெ. எண். 1447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர்., சென்னை - 600 017)

## தழும்பு

மேலாண்மை பொன்னுசாமியின் சிறுகதைத் தொகுப்பு. அனைத்தும் இன்றைய சமூக அவலங்களை, பாமர மனிதர்களின் கனவுகளை தோலுரித்துக் காட்டுகிறது.

விலை ரூ. 24.00

## வண்ணத்துப்பூச்சி வேட்டை

பணவெறி பிடித்து ஓடும் இளைஞர்களின் பிரதிநிதியாகக் கதாநாயகன். ஆசிரியர் - சுஜாதா.

விலை ரூ. 38.00

(இரண்டும் - குமரிப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 611 001)

## உங்களுடைய இறப்பும் பின் பிறப்பும்

மரணத்திற்குப் பின் என்ன என ஆர்வமுள்ளோர்களுக்கானது. ஆசிரியர் - (தமிழ் உரை) கடலங்குடி நடேச சாஸ்திரிகள். தொகுப்பு - கே. என். சரஸ்வதி.

விலை ரூ. 10.00

(கடலங்குடி பப்ளிகேஷன்ஸ், 38, நடேச அய்யர் தெரு, தி. நகர், சென்னை - 600 017)

## உள்ளக் கடலின் உணர்வலைகள்

கவிதைத் தொகுப்பு. ஆசிரியர் பூவை அமுதன்.

*"அடங்கியே கிடக்க நாம் ஆமையா? - யாரோ*
*அதட்டவே அடங்க நாம் ஊமையா?"*

(கவிதா பப்ளிகேஷன், த. பெ. எண் 6123, 8, முத்துகிருஷ்ணன் தெரு, பாண்டிபஜார், சென்னை - 600 017)

## சொந்த பிரச்னைகளுக்கு தீர்வு காண்பது எப்படி?

எனச் சொல்பவர் வாசன்.

விலை ரூ. 12.00

## குறள் காட்டும் உலகு

திருக்குறள் பொருள் பற்றி 24 அறிஞர்களின் கட்டுரைத் தொகுப்பு. தொகுப்பு - ப. முருகன்.

விலை ரூ. 18.00

(இரண்டும் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், 41 பி - சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098)

## அழகே உன்னை ஆராதிக்கிறேன்

அரு. நாகப்பனின் கவிதைத் தொகுப்பு.
விலை ரூ. 15.00

## காந்தியச் சுடர்

நாமக்கல் கவிஞர், கம்பன் அடிப்பொடி ஆகியோரின் கருத்துக்களோடு அரு. நாகப்பன் தரும் கட்டுரை, கவிதைத் தொகுப்பு.

விலை ரூ. 15.00

(இரண்டும் - கண்ணதாசன் புத்தக ஆலயம், 109, செக்காலை ரோடு, காரைக்குடி - 623 001)

## இன்றிரவு?

ஆசிரியர் எஸ்.ஏ.பி.யின் உற்சாகமான எழுத்து நடையில் குடும்ப நாவல்.

விலை ரூ. 22.00

## பள்ளிப் பிள்ளைகளின் கல்வி வளர்ச்சியும் பெற்றோர் பங்கும்

ஆக்கியோர் - மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு.

விலை ரூ. 15.00

(இரண்டும் - மணிமேகலை பிரகரம்.)

WE WELCOME YOU TO THE WORLD OF







CHURIDARS READY MADE BLOUSES AND COTTON SAREES.

# AALURI SAREES

*The Shop Exclusively for* **Karishma** *Churidars & Sarees*





**Introductory Offer with this Cutting 10 %**

**AALURI SAREES**

(DEALER OF KARISHMA CHURIDARS & SAREES)

WHOLESALE & RETAIL

4/24, R.K. MUTT ROAD, LUZ BAZAAR,
MYLAPORE, MADRAS - 600 004.
NEXT TO SRINIVAS SILK
PHONE : 4935791

Our Products.

1) Karishma Churidars
2) Karishma Sarees
3) Andhra Pochham Palli Cotton Sarees
4) Belgaum Polyster (Saradha) Sarees.
5) Seiko Sarees
6) Banaras cotton sarees.

**WE WELCOME CITIBANK CARDS.**

இந்த விளம்பரத்தை கொண்டு
வருபவர்களுக்கு
10 %

Komala Ads

சேமிப்புக்குச் சிறந்த வழி —

## 1. ரியல் எஸ்டேட்

“தனி வீடு வாங்குவது என்ற நிலை மாறி, அடுக்கு மாடிக் கட்டிடங்களை ஏற்றுக் கொள்ள வேண்டிய சூழ்நிலை உருவாகியுள்ளது. பரப்பளவில் சிறிய ஜப்பானில் எங்கும் ஃப்ளாட் மயம். மனையின் விலை இனி குறைய வாய்ப்பே இல்லை. ரிங்ரோடுகள், மேம்பாலங்கள் பெரிய சாலைகள் என்று நகரம் அபிவிருத்தி அடைந்து வருவ தால் விலை ஏறுவது இயற்கைதானே! வங்கியில் பத்து, பதினைந்து வருடங்களுக்கு முன் ஜாபர்கான்பேட்டையில் நாங்கள் ஒரு கிரவுண்ட் ஆயிரம் ரூபாய் மதிப்புக்கு வாங்கியது இன்று லட்சங்களில் விற்கின்றது. வாடகை வருடா வருடம் அதிகரித்து வசதி களும் குறைவாக இருப்பதால் ஒவ்வொரு வரும் வீடு வாங்க நினைக்கின்றனர். ஆயிரம் ரூபாய் வாடகையுடன் மேலும் சிறிது தொகையைச் சேர்த்து கடன் அடைத்து ஃப்ளாட் வாங்குவதை மக்கள் ஆதரிக்கின்றனர்.

தங்கம் வாங்கினால் கணிசமாக விலை அதிகமானாலும் அதிலிருந்து வருமானம் கிடைக்காது. வீட்டில் வாடகையும் வரும். நிலத்தின் மதிப்பும் கூடும். எங்களிடம் முதலில் ஐம்பதாயிரம் செலுத்தினால் மீதி பணத்தை எல்.ஐ.சி., வங்கிகள் அல்லது

# “நிலம் என் வாழ்க்கையை உயர்த்தியது”

கட்டிடக் கடனுதவி செய்யும் நிறுவனங்கள் மூலம் நாங்களே கடனுதவிக்கு ஏற்பாடு செய்து தருகிறோம். லோனை அடைக்கும் தகுதிக்குத் தகுந்தபடி மதிப்புள்ள ஃப்ளாட்டுகளை நீங்கள் வாங்கிக் கொள்ளலாம். இது நடுத்தர மக்களுக்கு மிகவும் வசதியான திட்டம்.

ஃப்ளாட் மதிப்பு எல்லா இடத்திலும் ஏறுவதில்லையே! என்று கேட்டதற்கு, “அது தேர்ந்தெடுக்கும் மக்கள் கையில்தான் உள்ளது. அனுபவமுள்ள நிறுவனங்களைத் தேர்ந்தெடுத்து, தரமான கட்டிடம், வசதிகள், நல்ல டிசைன் நல்ல பகுதியில் தேர்ந்தெடுப்பதில்தான் உங்கள் சாமர்த்தியம் உள்ளது. அங்கீகரிக்கப்பட்ட நிலம்தானா என்பது மிக முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது” என்றார் “சதர்ன் ஷெல்டர்” அடுக்குமாடிக் கட்டிட நிறுவனத்தின் டைரக்டர் திரு எஸ்.ஏ. கிருஷ்ணன்.

அனுபவ் குரூப் ஆஃப் கம்பெனிகளின் நிர்வாக இயக்குனர் திரு சி. நடேசன் அவர்கள் ஃப்ளாட்டுகள் தவிர வேறு எந்த விதத்தில் முதலீடு செய்தால் லாபகரமாக இருக்கும் என்று விவரிக்கிறார் —

“ரியல் எஸ்டேட்டில் முதலீடு செய்வது மிகவும் சிறந்தது.

வங்கிகளில் ஐந்து வருடங்களில் பணம் இரட்டிப்பாகிறது என்றால் இதில் ஐந்தாறு மடங்கு அதைவிட அதிக மாகும். உதாரண மாக, கடம்பத்தூர் ஸ்டேஷன் அருகே ஐந்து வருடங்கள் முன் ரூ. 5000/- க்கு விற்ற நிலம் இன்று ரூ. 30,000/- விற்கின்றது.

ஃப்ளாட், வீடுகள் தவிர தேக்குப் பண்ணை, விவசாய நிலங்கள், பண்ணை வீடுகள் இவற்றில் முதலீடு செய்வதும் லாப கரமானது. நம் நாடு மரங்களுக்கான வளம் நிறைந்த நாடு. ஆயிரம் ரூபாய் முதலீடு செய்யும் தேக்கு மரத் திட்டத்தில் இருபது வருடங்களில் ஒரு லட்சமாகப் பெருகு கின்றது. சிறு முதலீட்டில் பெரும் லாபம். உங்கள் முதலீட்டை இன்ஷ்யூர் செய்து காப்பாற்றுகிறோம்.

அடுத்து விவசாய நிலங்களில் முதலீடு செய்யலாம். நாங்களே பழம், காய்கறிகள், பயிரிட்டு, செலவு போக விற்ற வரு மானத் தைத் தருகிறோம். ஒரு ஏக்கர் விலை ஒரு லட்சம் ரூபாய், இதை மூன்று, நான்கு பேர் சேர்ந்தும் வாங்கலாம். கால், அரை ஏக்கரும் வாங்கலாம். மூன்று வருடங்கள் கழித்து இரு பது சதவிகிதமும், பன்னிரண்டு வருடத்தில் அறுபத்தி ஐந்து சதவிகித அளவு வருமான மும் பெற்றுத் தரக் கூடியது.

பண்ணை வீடுகளில் முதலீடு என்பதும் நம் குடும்பத்தினர் அனைவரும் வரவேற்கக் கூடிய திட்டம். ஒருமுறை நான் லண்டன் சென்ற போது வெள்ளிக்கிழமை மாலை கார்கள் வரிசையாக அணிவகுத்துச் சென் றன. காரணம் கேட்ட போது பக்கத்து ஊர் களில் அமைந்திருந்த அவர்களது பண்ணை வீடுகளுக்கு வார இறுதியில் தங்கச் செல்வ தாக அறிந்தேன். அது போல இங்கும் அமைக்க எண்ணினேன்.

சென்னைக்கு அருகே 600 ஏக்கரில் தோட்டப் பண்ணை அமைக்கிறோம்" என் கிறார்.

நாற்பத்தி ஐந்து வருடங்களுக்கு முன் மேற்கு மாம்பலம் மூர்த்தி தெருவில் ஒரு க்ரௌண்டு 7.50 ரூபாய் வீதம் இரண்டு க்ரௌண்டு வாங்கிப் பயனடைந்ததை விளக்குகிறார் திரு ராமமூர்த்தி சாஸ்திரிகள். இவர் பெயரால் அந்தத் தெரு அமைந்துள்ள பெருமை பெற்றவர். "நிலத்தில் முதலீடு செய்து பயனை நிறைய அனுபவித்தவன் நான். இந்தத் தெருவில் முதலில் நிலம் வாங்கி குடிசை போட்டுக் கொண்டு வந்த வருடம் 50." பிறகு சிறு மங்களூர் ஓட்டு வீடு கட்டி னேன். அருகே அயோத்தியா மண்டபம் பிறகுதான் வந்தது. ரோடு, பஸ்ரூட் அமைந் தது. 73 ம் வருடம் கிரவுண்டு விலை ஆறா யிரம். 80 ல் ஐம்ப தாயிரம், 85 ல் ஒரு லட்சம் என்று ஏறியது. இன்று பன்னிரண்டு லட்ச ரூபாய் விலை.

சேமிப்பு என்று இந்த நிலத்தை நான் சொல்லக் காரணம் உண்டு. எனக்கு மூன்று பிள்ளைகளும், இரண்டு பெண்களும். அனைவரும் பட்டதாரிகள். படிப்பு, திரு மணம், வீடுகட்ட என்று இதுவரை எட்டு முறை இந்த நிலத்தை அடமானம் வைத்துத் தான் நடத்தியுள்ளேன். ஆர்யகௌடா ரோடு மிகவும் பரபரப்பான வியாபாரஸ்தல மாகி விட்டதால் வாடகைக்கு வீட்டை அல்லது ஃப்ளாட்டை கட்டுவதை விட கடைகள் கட்டுவதுதான் லாபமானது என்று கடைகள் கட்டிக் கொண்டிருக்கிறோம். ஒரு குடும்பம் நல்ல முறையில் வாழ்க்கையில் முன்னேற உதவியது இந்த நிலம்தான். இன்று ஒவ் வொருவரும் பல லட்சங்களுக்கு சொந்தக் காரராகியுள்ளதும் இந்த நிலத்தால் தான். அதனால் நிலத்தில் பணத்தை முதலீடு செய் வது மிகச் சிறந்த வழி, பாதுகாப்பு, சேமிப்பு என்பது அனுபவபூர்வமான உண்மை" என்று அடித்துச் சொல்கிறார்.

வெளிநாடுகளில் உள்ளது போல பண்ணை வீடுகள் மட்டுமல்ல கெஸ்ட் ஹவுஸ்களும் தோன்ற ஆரம்பித்துவிட்டன. "Live with an English Family" என்ற விளம் பரங்கள் அங்கு சர்வசாதாரணம். ஹோட் டல்களில் தங்காமல் ஊருக்கு வெளியே அமைந்துள்ள ஃப்ளாட்டுகளில் டூரிஸ்ட்டு கள் தங்கி வருகின்றனர். வீட்டுக்குச் சொந் தக்காரர் கீழ் போர்ஷனில் இருப்பார். மாடி அறைகளில் படுக்கை வசதிகளுடன் கூடிய அறைகள் வாடகைக்குக் கிடைக்கும். இது போன்று இங்கு கெஸ்ட் ஹவுஸ் அமைத் துள்ள தொழிலதிபர் வித்யா சங்கர் கூறு கிறார்.

சேமிக்க நினைத்ததுமே நான் ரியல் எஸ் டேட்டைத்தான் தேர்ந்தெடுத்தேன். தங்கத் தில் பணத்தை ஓரளவுதான் முடக்க முடியும். ஏனென்றால் அதைப் பாதுகாப்பது கடினம்.

---

**எலுமிச்சம்பழம் சாதம் செய்யும் போது, கடலைப் பருப்பு தாளிப்ப தற்குப் பதிலாக, பொட்டுக்கடலை தாளிக்கலாம். சாப்பிடும்போது மிருதுவாக இருக்கும்.**

**— லக்ஷ்மி திவாகராஜன்**



அதிலிருந்து வருமானம் வராது. மேலும் நாம் விற்கச் சென்றால் சேதாரம், கூலி என்று மதிப்பைக் குறைத்து பத்து பவுன் நகைக்கு எட்டு பவுன்தான் பெற முடியும் என்ற நிலை. தவிர நாம் வாங்கி வைக்கும் டிசைன் அடுத்த தலைமுறை யினருக்குப் பிடிக்குமா? என்பது கேள்வி. இதையெல்லாம் மனதில் கொண்டு நகரின் பிரதான சாலை ஒன்றில் அமைந்திருந்த ஒரு தனி வீட்டை (முக்கால் கிரவுண்டில்) வாங்கினேன்.

வியாபார விஷயமாக வரும் 'நபர்களை ஹோட்டலில் தங்க வைப்பது எங்கள் வழக்கம். ஹோட்டல்களில் கட்டணம் அதிகம். அறைகளும் கிடைப்பதில்லை. ஏன்? பார்க் ஷெரட்டன் போன்று ரூ. 2000/- ஒரு நாளைக்கு சார்ஜ் செய்யும் ஹோட்டல் களில் கூட கிடைப்பதில்லை. அதனால் என் தனி வீட்டை கெஸ்ட் ஹவுஸாக மாற்றி னோம். கீழ் போர்ஷனில் வரவேற்பறையும், சமையலறையும். கேபின் டி.வி. கனெக் ஷனுடன் கூடிய டி.வி., குளிர்சாதன வசதி யுள்ள மாடியில் மூன்று அறைகளில் படுக்கை வசதி, தொலைபேசி என்று ஹோட்டல் போல வசதியாக்கினேன். ஒரு மானேஜர். அவர் காலை உணவு தயாரித்து அளிப்பார். சில்லரை வேலைகளுக்கு ஒரு சிறுவன். வீட்டைப் பராமரித்து சுத்தப் படுத்த ஒரு பெண். மூன்று பேருக்கு வேலை கொடுத்த திருப்தியும் உள்ளது. ஹோட்ட லுக்கு அருகாமையில் இருந்தால் நல்லது. நம் நாட்டுக்கு வந்து போகும் நபர்கள் அதிக மாகிவிட்டனர். வாடகைக்கு விட்டால் கிடைக்கும் வருமானத்தை விட மூன்று, நான்கு மடங்கு வருமானம் கிடைக்கும். அதில் பத்தில் ஒரு பாகம் செலவாகும்.

சிறந்த நான்கைந்து நிறுவனங்களுடன் ரிஜிஸ்டர் செய்து வைத்துக் கொண்டால் பரஸ்பரம் நம்பிக்கையுடன், ஸ்திரமான, பாதுகாப்பான வருமானம் கிடைக்கும். ஃப்ளாட் வாங்கியும் நடத்தலாம். நான்கு பெண்கள் சேர்ந்து முதலீடு செய்தால் போதும். படிப்பு தேவையில்லை. பெண் களுக்கு இயற்கையாகவே வீட்டைப் பரா மரிக்கத் தெரியும். வாரம் ஒருவர் வந்து கண் காணித்துச் செல்லலாம். மிகப் பயனுள்ள திட்டமிது. இனிமேலும் சேமிக்க நினைத் தாலும் இது போன்று கெஸ்ட் ஹவுஸ் நடத் தவே விரும்புகிறேன்" என்கிறார்.

"இரண்டு வருடங்களுக்கு முன் கையில் பணம் கிடைத்த போது அதை என் பேத்திக் குத் தர நினைத்தேன். என் மருமகள் தங்க நகை வாங்கி வைக்கலாம் என்றாள். நிலத் தில் முதலீடு செய்தால் மதிப்பு அதிக மாகும் என்று எண்ணி வண்டலூர் அருகே

# தெர்மாகோல் பூக்கூடை

**தேவையானவை :** தடிமனுள்ள தட்டையான தெர்மாகோல் ஷீட் (30 செ.மீ. நீளம், 20 செ.மீ. அகலம் போதுமானது), குண்டூசிகள், ப்ளாஸ்டிக் பட்டை பின்னல் வயர், ப்ளாஸ்டிக் பூக்கள், இலைகள்.

**செய்முறை :** படம் 1ல் காட்டியுள்ளபடி தெ.ஷீட்டில் வரைந்து, ஓரங்களில் பிசிறில்லாமல் பிளேடால் வெட்டி எடுக்கவும். (கைப்பிடி முடியும் இடம் அகலமாக இருந்தால்தான் எளிதில் உடையாது). பின் படம் 2ல் உள்ளபடி, பட்டை வயரை (ப்ரவுன் கலராக இருந்தால் எடுப்பாக இருக்கும்) கூடையின் ஓரங்களிலும், கீழ்ப்பகுதியிலும், சரியான அளவில் வெட்டி குண்டூசி கொண்டு நன்றாகப் பதியுமாறு குத்திவிடவும். (வயர் கலர் உள்ள நூல் கொண்டு தைத்தும் விடலாம்). பின் நடுபாகத்தில் குறுக்கும் நெடுக்கும், வயரை வெட்டி குண்டூசியால் குத்திவிடவும். கைப்பிடியிலும் வயரை சாய்வாக சுற்றிக் கொண்டே வந்து அங்கங்கே பின் குத்தவும். கூடையின் (⌒) வளைவான மேல் பாகத்தில் ப்ளாஸ்டிக் பூக்களையும் இலைகளையும் மாறி மாறி பின் கொண்டு அழுந்த குத்திவிடுங்கள். கைப்பிடியின் நடு பாகத்தில் மஞ்சள் ரிப்பனால்

படம் - 1



படம் - 2



ஒரு (Bow) செய்து பின் குத்தி, ஒரு சிறிய மணியைத் தொங்கவிட்டால் அழகான ஒரு பூக்கூடை தயார் உங்கள் கைவண்ணத்தில்.

பாக்கிங் செய்துவரும் தெர்மாகோல் ஷீட்டை வீணாக்காமல் இத்தகைய பூக்கூடைகள் செய்து நம்வீட்டு வரவேற்பறையை அலங்கரிக்கலாம் அல்லது பாலித்தின் கவர் செய்து தோழியர்க்கு பிறந்தநாள் பொக்கேயாகவும் பரிசளிக்கலாம்.

இப்பூக்கூடை போல் 5, 6 செய்து, தோட்டத்தில் பூக்கும் பலவித நிற மலர்களையும், இலைகளையும் இதில் அழகாக குத்தி, விசேஷ தினங்களில் ஹாலின் இருபுறமும் மாட்டி, ஒரு மலர்கள் அணிவகுப்பே நடத்தி எல்லோருடைய பாராட்டையும் பெறலாமே.

— மாலா ராமபத்திரன்

---

ரூ. 15,000/- க்கு ஒரு கிரவுண்டு வாங்கி அவள் பெயருக்கு வைத்தேன். இன்று அதன் விலை 40 ஆயிரம். +2 படிக்கும் என் பேத்தி பிரியா பட்டப்படிப்பு முடித்ததும் திருமணம் செய்யும் சமயம் அந்த நிலத்தை விற்றால் திருமணச் செலவுக்கு நல்லதொரு தொகை கிடைக்கும். அங்கீகாரம் பெற்ற நிலத்தை வாங்கியிருப்பதால் சுலபமாக விற்றுவிடலாம். இதை கவனித்து வாங்கினால் ரிஸ்க் இல்லை. என் மகன் கூட சிறிது பணம் சேர்த்தபோது என் எட்டு வயது பேரன் பெயரில் ஒரு கிரவுண்டு நிலம் வாங்கச் சொன்னேன். அவன் படிப்புச் செலவுக்கு உதவுமே!" என்கிறார் இரயில்வே தொழிலாளர் நல வக்கில் திரு. வெங்கட்ராமய்யர்.

வி.ஆர்.பி. கன்ஸ்ட்ரக்ஷன் நிறுவனத்தின் இன்ஜினியர் திரு ஏ. இராமச்சந்திரன் சொல்கிறார். "சேமிப்பதில் இரண்டு விஷயம் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டும். ஒன்று அதன் மூலம் வருமானம். இரண்டாவது முதலுக்கே மோசம் வரக் கூடாது. அப்படிப் பார்த்தால், மேற் சொன்ன ரியல் எஸ்டேட் முறையில் மனை, வீடு, ஃபிளாட், பண்ணை, தேக்கு, விவசாய நிலங்கள் இப்படி எதில் முதலீடு செய்தாலும் முதலுக்குப் பாதிப்பு ஏற்படாது என்பது தெளிவாகிறது.

ஃபிளாட்டில் பூமியும் நிலமும் சொந்தமில்லை என்ற கருத்து தவறு. காலி மனையை மட்டும் சொந்தம் என்பதால் வீட்டுக்குள்ளா வைத்துக் கொள்கிறோம். மனையோ, ஃபிளாட்டோ அசையா சொத்து என்பதே நிஜம். வித்தியாசம் கிடையாது. மேலும் பிளாட் வாங்கும்போது பிரிக்க முடியாத பாகத்தில் சம பங்கு (un-divided share) நம் பெயரில் ரிஜிஸ்டர் ஆகிவிடுகிறதே!

'80 ஆம் வருடத்துக்குப் பிறகு திடீர் விலை ஏற்றம் ரியல் எஸ்டேட்டில் எப்படி வந்தது? முக்கியமான காரணம் ஒரு பெரிய சக்தி வாய்ந்த (பணத்தில்) நடுத்தர வர்க்கம் (Strong, huge, middle class) நம் நாட்டில் உருவாகிக் கொண்டிருக்கிறது. இருபது வருடங்களுக்கு முன் ஒருவர் வீடு வாங்கினால் அவர் பணக்காரர். இன்று பலவித கடனுதவிகளை உபயோகித்து ஒவ்வொருவரும் வீடு, ஃபிளாட் வாங்குகிறார்கள். நடுத்தர மக்களின் நிலை உயர, உயர, விலை ஏற்றமும் தீவிரமடையும். இது நாட்டின் பொருளாதாரம் முன்னேறுகிறது என்பதற்கு அறிகுறி என்று நாம் மகிழலாம்" என்கிறார் இவர்.

பேட்டி : **பானுமதி**



## மேஷ ராசி :

அசுவினி, பரணி, கார்த்திகை 1 ஆம் பாதம்.

சுக்கிரன் கூடக் குடும்பத்தில் குழப்பம் ஏற்படுத்தினாலும், அவற்றை முறியடிக்கும் ஆற்றலைச் சூரியன் முற்பகுதியிலும், மாதத்தின் பிற்பகுதியில் அதே சுக்கிரனும் உங்களுக்குத் தந்து, உங்களது செல்வத்தையும், செல்வாக்கையும் வளர்க்க இருக்கும்போது எதற்கும் கவலைப்படத் தேவையில்லை. எனினும் கேதுவால் சில தடங்கல்கள் ஏற்படலாம். இராகுவும் கூட கணவன் மனைவியிடையே சிறு சலசலப்பை உண்டாக்கலாம். தாயாரின் உடல்நிலை பாதிக்கப்படலாம். எனவே, இராசி நாதனாகிய செவ்வாய் கிரகத்திற்கு அர்ச்சனை செய்யுங்கள். பாம்பனடிகளாரின் ஸ்ரீ ஷண்முகக் கவசத்தினையும் படிக்கலாம். அரசுத் துறையில் பணிபுரிவோர், மற்றும் மாணவர்கள் கடினமாக உழைக்க வேண்டியிருக்கும். வங்கித் துறையில் உள்ளவர்கள், சுங்க இலாகாவினர், காவல் துறையினர் கவனமுடன் பணியாற்ற வேண்டியது அவசியம்.



## ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 ஆம் பாதங்கள்.

ஆட்சி, உச்சம் பெற்ற கிரகங்களின் தசாபுக்தி நடப்பவர்களுக்கு நல்லதொரு காலகட்டம். உங்கள் அபிலாஷைகள், எண்ணங்கள் ஆகியவை கைகூடி வரக்கூடிய மாதம். எதிர்பார்த்தபடி சுபநிகழ்ச்சிகள் நடக்கும். அதுமட்டுமல்ல, இதுவரை முயன்றும் பலனளிக்காத விஷயங்களில் கூட, எதிர்பாராமலேயே காரியம் கைகூடிவரும். அது திருமண விஷயமானால் கொட்டுமேளத்துடன் தடங்கலின்றி நடந்தேறும். விரக்தி அடைந்து, வாழ்வை வெறுத்தவர்களின் வாழ்க்கையில் தென்றல் வீசுகின்ற நிலை உருவாகும். மாதத்தின் ஆரம்பத்தில் சுக்கிரனது சஞ்சாரம், குடும்பத்தில் ஒரு பெண்ணின் மூலம் தலைகுனிவை ஏற்படுத்தினாலும், அதே சுக்கிரனால் மாதத்தின் பிற்பகுதியில் அதே விஷயத்தில் தலைநிமிர்ந்து நடக்கும் நிலையும் உருவாகும். எதிர்பாராத தனலாபம் வரும். எல்லா கிரகங்களும் கொடுக்கும் நிலையில் இருந்தாலும் கேது மட்டும் கெடுக்கும் நிலையில் இருக்



# இந்த மாதம் எப்படி? மார்ச் 95

கிறார். ஆயினும் ஆனைமுகத்தோனை ஆராதித்தால் எல்லாம் நல்லபடியே நடக்கும்.

## மிதுன ராசி :



மிருகசீரிஷம் 3, 4 ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 ஆம் பாதங்கள்.

கேதுவும், சுக்கிரனும் சுகத்திற்கும் அதற்கு அடிப்படையான தன லாபத்திற்கும் உதவுகிறார்கள். சனி தசை நடப்பவர்களுக்கு நல்லதொரு நிலை. மற்றபடி சிறந்ததொரு மாதமாகக் கூற முடியாது கோட்சாரம்தான். தசாபுக்தி, குறிப்பாக புதன் ஆட்சியிலிருந்து தசை நடப்பவர்களுக்கு நன்மை கூடுதலாக நடக்கும். அவ்வாறின்றி தசாபுக்தியும் கூட சரியில்லாதவர்கள் மனத்தைத் தளரவிட வேண்டாம். கேதுவும் புதனும் ஆதரவான நிலையிலேயே இருக்கிறார்கள். கணநாயகனும் திருமாலும் உங்களுக்கு உதவும்படி பிரார்த்தனை செய்யுங்கள். அர்ச்சனையும் செய்யுங்களேன். நவக்கிரக சன்னிதானத்திற்குச் சென்று, அந்தந்த கிரகங்களுக்குரிய தூபங்களான சந்தனத்தூள், செம்மரத்தூள், வெண்கடுகு இவை கலந்த கலவைத் தூளைப் போட்டு தூபங்காட்டுங்கள். அதன்பின் கற்பூர நீராஞ்சனம் தனியாகக் காட்டி வேண்டிக் கொள்ளுங்கள். பிறகு நவநாயகர்களின் பொறுப்பு - நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்.

## கடக ராசி :



புனர்பூசம் 4 ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

சுபகாரியம் ஒன்றுக்குத் தேவையான உதவிகள் கிடைத்தே தீரும். செவ்வாய் சனியைப் பார்த்தாலும் இராசி நாதனுக்குக் குரு பார்வை இருப்பதால் அஷ்டமத்துச் சனி கஷ்டத்தைத் தந்தாலும் பாதிப்பு இராது. ஏற்கெனவே கூறியுள்ளது போல் அலைச்சல் அதிகமாகும். மாணவ மாணவிகள் கவனக் குறைவுடன் இருந்துவிடாதீர்கள். கஷ்டப்பட்டுக் கல்வியில் திறமையைக் காட்ட முயலுங்கள். இன்றைய கஷ்டம் நாளைய சுகத்திற்கு அடிப்படை. உழைப்பவருக்கே நவநாயகர்களும் உதவுவார்கள். எதிர்ப்பில் உலாவும் கிரகங்கள் உங்களது முயற்சியின்மையைப் பயன்படுத்தி நீங்கள் தோல்வியைத் தழுவும்படி செய்துவிடும். திட்டமிட்டுப் பணியாற்றினால் எட்ட முடியாத அளவுக்கு உயரலாம். இது எத்துறையினர்க்கும் பொருந்தும். ஏனெனில் குருவின் அருட்பார்வை அப்படி அமைந்துள்ளது. எனவே, இந்த மாதத்தில் வரும் செவ்வாய்க் கிழமைகளில் ஸ்ரீ சுப்ரமணியனையும் வியாழக் கிழமைகளில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியையும் வணங்குவது நல்லது.

## சிம்ம ராசி :



மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம்.

சுக்கிரன் மாதத்தின் முற்பகுதியிலும், ராகு மாதம் பூராவும் உங்களுக்கு அனுகூலமாக இருக்கிறார்கள். மற்றபடி எந்தக் கிரகமும் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்கவில்லை. எனவே, சற்றுக் கவனமுடன் பணியாற்ற வேண்டிய மாதம். அரசுத் துறையிலும், அரசியலிலும் பெரும் பங்கு வகிப்பவர்களுக்குச் சோதனை மிக்க மாதமே. ஆயினும் இராகுவின் அருளால் அனைத்துச் சோதனையிலும் வெற்றி காண முடியும். கேது கெடுப்பதைத் தடுத்துவிடலாம். அதற்குத்தான் ஆற்றங்கரை அண்ணல் இருக்கிறாரே! ஆனால் இராகு கொடுக்க ஆரம்பித்தால் அதைத் தடுக்க முடியாது. ஏனெனில் அதன் அதிதேவதை துர்க்கையல்லவா? ஆகவே, இந்த மாதத்தில் விநாயகர் படம் ஒன்றையும், துர்க்கையின் படம் ஒன்றையும் கையிலோ, பையிலோ வைத்திருங்களேன். அத்துடன் இலட்சுமி ஸ்தோத்திரம் படியுங்கள். மிதுன ராசியில் எழுதியுள்ளபடி நவக்கிரகங்கள் அனைத்திற்கும் கலவைத்தூள் கொண்டு தூபம் காட்டி வழிபடுங்கள். இப்பொருட்களை நாட்டு மருந்து விற்பவர்களிடம் வாங்கலாம். மற்றபடி மாதத்தின் பிற்பகுதியில் ஒரு பெண் மூலம் சில பிரச்னைகள் வரலாம். அது குடும்பத்தில் மட்டுமல்ல, அலுவலகங்களில் பணிபுரிபவர்களுக்கும் பொருந்தும். இந்த நிலையில் ராகுவின் அருளால் வாகன யோகமும், மாதத்தின் முற்பகுதியில் சந்திரனால் ஆகாய யாத்திரையும் ஏற்படலாம். கோளறு பதிகத்தைப் பொருளுணர்ந்து படித்தால் உங்கள் மனத்தில் புகுந்துள்ள இறைவனின் அருளை உணர்ந்து - எந்தச் சிரமங்களையும் சமாளிக்கவும் முடியும்.

## கன்னி ராசி :



உத்திரம் 2, 3, 4 ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 ஆம் பாதங்கள்.

மாதத்தின் முற்பகுதியில் கேது, ராகு தவிர மற்ற கிரகங்கள் அனைத்தும் உதவும் நிலை. நன்கு பயன்படுத்திக் கொள்ளலாம். வேலைக்காக எதிர்பார்த்திருப்பவர்களுக்கு வேலை கிடைக்கும். உரிய முறையில் வரவேண்டிய பதவி உயர்வு கட்டாயம் கிடைக்கும். புதன் 6 ஆம் இடத்திலிருந்து அத்தகைய நல்ல நிலையை உருவாக்குவார். குரு பாக்கியஸ்தானத்தைப் பார்ப்பதால் பொருளாதார நிலை சீராக இருக்கும். ஆனால் உடல்நிலையைப் பொறுத்துச் சற்றுக் கவனம் தேவை. அத்துடன் வீட்டையும், உடைமைகளையும் கூடச் சற்று பாதுகாப்புடன் பார்த்துக் கொள்ள வேண்டிய அவசியம். ராகுவும் கேதுவும் அத்தகைய நிலையை உருவாக்குவார்கள். சூரியன் சுக்கிரன் ஆகிய இருவரும் உங்களது வெற்றிக்கு அடி கோலுவார்கள். அத்துடன் உடல் நிலையில் கோளாறு ஏற்பட்டாலும் சூரியனது அருள் அதைச் சரிசெய்துவிடும். ஒரு விவகாரத்தில் எதிர்பாராத வெற்றி உங்களுக்குக் கிடைக்கும். போட்டியும் பொறாமையும் உங்களை அசைத்துப் பார்க்க முடியாத அளவிற்குக் கிரக பலம் கூடியுள்ளது. உங்கள் தாய் மாமன் வகையினரால் திடீர் திருமணம் ஒன்று உங்கள் வீட்டில் ஏற்பாடாகும்.

## துலா ராசி :



சித்திரை 3, 4 ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3, ஆம் பாதங்கள்.

குடும்பத்தில் சகஜ நிலை இருக்க சுக்கிரன் உதவுவார். குரு தொழிலில் சிக்கல் ஏற்படாமல் நன்கு நடக்க அருள் புரிவார். சுபநிகழ்ச்சிக்கும் தடை ஏற்படாமல் தடுப்பார். மாதத்தின் பிற்பகுதியில் சூரியனால் கோர்ட் விவகாரத்தில் வெற்றி ஏற்படும். எனினும் புதன் மாதம் பூராவும் ஏதோ ஒருவிதத்தில் மனத்தில் குழப்பத்தை ஏற்படுத்துவார். உடல் நிலை எக்ஸிமா, பங்கஸ் போன்ற அரிப்பு நோய்களால் பாதிக்கப்படலாம். முயற்சிக்கும் தொழில்களில் தடங்கல் வர செவ்வாய் ஒரு காரணமாக இருப்பார். மொத்தத்தில் சற்று சிரமமான வாரம்தான். என்றாலும் இரண்டாம் இடத்தில் உள்ள குரு எவ்வளவு சிரமங்கள் வந்தாலும் தாங்கிக் கொள்ளவும், அவற்றினின்று விடுபடவும் ஆவன செய்வார். எழுத்தாளர்களும், மற்றும் சுயசரிதை எழுதும் பிரமுகர்களும், இலக்கிய வாதிகளும் சற்று கவனமுடன் எழுத வேண்டும். இல்லையெனில் சொற்குற்றம், பொருட் குற்றம் என்பவைகளுக்கு ஆளாகும் வண்ணம் புதனது சஞ்சாரம் அமைந்துள்ளது. பெண்களைப் பொறுத்தமட்டில் தாங்கள் பணிபுரியும் இடத்திலும் சேர்ந்து வாழும் குடும்பத்தில் மற்றவர்களிடம் பேசும் பொழுதும் கவனமுடன் பேசுவது நல்லது.

## விருச்சிக ராசி :



விசாகம் 4 ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

நண்பர்களின் ஆதரவு, சரீர ஆரோக்கியம், செல்வாக்கு, புதிய பதவி, சுப நிகழ்ச்சிகளில் பங்கேற்பது எனப் பலவிதங்களில் சுக்கிரன் நன்மை தர இருக்கிறார். அதேசமயம் ஆறாமிடத்துக் கேதுவும் கோர்ட்டு விவகாரங்கள், விளையாட்டு, போட்டி, பந்தயங்களில் வெற்றியைத் தேடித் தருவார். பெண்கள் நகை வாங்கவும், குறைந்த பட்சம் வீட்டில் உள்ள பழைய பொருட்களைப் போட்டுவிட்டுப் புதிதாகப் பாத்திர பண்டங்கள் வாங்கவும் ஏற்றதொரு மாதம். மற்ற கிரகங்களில் புதன் குடும்ப சுகத்திற்கும், தொழிலிலும் உத்தியோகத்திலும் முன்னேற்ற மடையவும் உதவுவார். பணியில் உள்ளவர்கள் பதவி உயர்வு கேட்டு விண்ணப்பிக்கத் தக்கதொரு தருணம் வந்துள்ளது. நிதி நிறுவனத்தார் தங்கள் திட்டங்களை விரிவுபடுத்தலாம். வழக்கறிஞர்கள், ஜோதிடர்கள், மருத்துவர்கள் ஆகியோர் தங்கள் தொழிலில் கீர்த்தியும், பாராட்டும் பெறுவார்கள். ஆயினும் ராகுவால் தாயாதி வர்க்கத்தாரிடமிருந்து வியாஜ்ஜியங்கள் ஏற்படுத்தும் நிலை உண்டாகும். அவர்களது உடல்நிலை கூட பாதிக்கப்படலாம். செவ்வாயும், சூரியனும் கூட நீங்கள் செய்யும் செயல்களில் தடைகளை ஏற்படுத்துவார்கள். ஆகவே, குறிப்பாகப் பெண்கள் வாங்கும் பொன் நகைகளுடன், பொறுமை எனும் நகையையும் அணிந்து புன்னகையுடன் செயல்களைச் செய்தால் எந்தப் பிரச்னைக்கும் இடம் இருக்காது.

## தனுசு ராசி :



மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம்.

விரயஸ்தானத்தில் இராசி நாதன். இலாபஸ்தானத்தில் ராகு. அதுவும் சுக்கிரன் வீட்டில். அதே சுக்கிரன் மாதம் பூராவும் பல கோணங்களில் உதவும் நிலை. சனி 3 இல் ஆட்சி. சுபநிகழ்ச்சி, தொழில் முன்னேற்றம், செல்வாக்கு, ஆரோக்கியம் எனப் பல விதத்திலும், எத்துறையினர்க்கும் ஏற்றம் தரும் மாதமே. குறிப்பாக மாதத்தின் முற்பகுதியில் சூரியன் கீர்த்திக்கும் புகழுக்கும் காரணமாகிறார். கலைஞர்கள், திரைப்படத் துறையினர் அனைவரும் பாராட்டுக்களைப் பெறுவார்கள். ஆயினும் புதன் சஞ்சாரம் சரியாக இல்லை. அதனால் அரசுப் பணியாளர்களும், நிதி நிறுவனங்களில் பணிபுரிவோரும் சற்றுக் கவனமுடன் பணியாற்ற வேண்டியது அவசியம். 5 இல் உள்ள கேது புத்திரர்கள் விஷயத்தில் குறிப்பாக அவர்களது முன்னேற்றத்தில் கவலை கொள்ளும்படி செய்யலாம். எனவே, விநாயகருக்கும் கேதுவுக்கும் அர்ச்சனை செய்வது நல்லது. உங்களுக்கும் குழந்தைகள் பெயர் நட்சத்திரங்களுக்கும் செய்யவும். அஷ்டமத்து அங்காரகன் குருவின் பார்வை பெறுவதால், கவலைப் படத் தேவையில்லை. செவ்வாய் தோஷம் உள்ள ஜாதகர்கள் பழநி சென்று வரலாம்.

## மகர ராசி :



உத்திராடம் 2, 3, 4 ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 ஆம் பாதங்கள்.

சுக்கிரனால் மாதம் பூராவும் சுகமுண்டு. சுப நிகழ்ச்சிகளும் தங்கு தடையின்றி நிறைவேறும். 4 இல் உள்ள கேதுவும், 10 இல் உள்ள ராகுவும் பல விதங்களில் தடையை உண்டாக்குவார்கள். புதனும் அதே நிலையில்தான் இருக்கிறார். மாதத்தின் பிற்பகுதியில் சூரியன் நன்கு உதவுகிறார். இதர கிரகங்களில் செவ்வாய் 7 இல் நீச்சம் பெற்று குருவின் பார்வை பெறுவதால் பாதிப்புக்கு இடமில்லை. இலாப நிலையில் உலாவும் குரு மேற்கண்ட தடைகளைத் தகர்த்து இலாபத்தைத் தருவார் என்றாலும் சுயமுயற்சியும், சலியா உழைப்பும் மிகமிக அவசியம். உழைப்பினால் விதியையே மாற்றலாம். மாறாத பக்தியும், அயராத உழைப்பும் இருந்தால் நாளென் செய்யும்; கோளென் செய்யும்? சனீஸ்வரப் ப்ரீதியாக சனிக்கிழமைதோறும் இரும்பு அகல் விளக்கேற்றுங்கள். இந்த ராசியில் பிறந்து திருமணத்திற்காகக் காத்து நிற்கும் பெண்களுக்குக் குருவின் அருளும், சுக்கிரனது ஆசியும் ஒன்றாகக் கிடைக்கும்.

## கும்ப ராசி :



அவிட்டம் 3, 4 ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 ஆம் பாதங்கள்.

சுக்கிரன் தாம்பத்திய உறவில் சிக்கல் ஏதும் ஏற்படாமல் சுமுகமானதொரு சூழ்நிலையைக் குடும்பத்தில் உருவாக்குவார். இந்த இராசியில் பிறந்த குழந்தைகளுக்கு இசைப் பயிற்சியினை ஆரம்பிக்கத் தக்கதொரு நிலை காணப்படுகிறது. இராசிநாதன் ஆட்சியில் இருப்பதால் ஏற்படும் ஏழரைச் சனியின் தோஷம் உங்களை அவ்வளவாகப் பாதிக்காது. எனினும் பெரியதொரு திட்டமிடும் செயல்களைச் செய்யாமல் இருப்பது நல்லது. 6 இல் உள்ள செவ்வாய் நகை வாங்கவும், அடகு வைத்த நகைகளை மீட்கவும் உரிய நிதி நிலையைச் சீர்ப்படுத்துவார். 2 இல் உள்ள கேது அன்றாடப் பணிகளில் ஏற்படும் சிறு சிறு சிக்கல்களையும் தடங்கல்களையும் நீக்க உதவுவார். ஞானகாரகனாகிய கேதுவின் அதிதேவதையான விநாயகரின் அருளும், இராசிநாதனின் ஆட்சி காரணமாக அவரது அருளும் பரிபூரணமாக உள்ளது. எனவே கவலையை விடுங்கள்.

## மீன ராசி :



பூரட்டாதி 4 ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

இராசிநாதனின் பார்வையும், சுக்கிரனது அருளும்தான் உங்களுக்குப் பக்கபலமாக இருக்கும். சுக்கிரன் குடும்பத்தின் சுகத்திற்கு உத்தரவாதம் அளிக்கிறார். குருவின் பார்வையால் கோட்சாரத்தில் உள்ள மற்ற கிரகங்களினால் இந்த இராசிக்கு ஏற்படும் தோஷங்களைப்

போக்க முடியும். எனினும் பிரயாணம், சாப்பிடும் ஆகாரம் இவைகளைப் பொறுத்து சற்று முன் எச்சரிக்கையுடன் இருந்தால் போதும். அலுவலகத்தில் பணிபுரிபவர்கள், மற்றும் வேறு எந்தத் துறையிலும் ஈடுபட்டிருப்பவர்கள் தங்களது வாக்கால், செய்கையால் மற்றவர்கள் குறை காணாதவாறு நடந்து கொள்வது நல்லது. எதிர்பாராத தனலாபம் ஒன்று உண்டாகலாம். அதே சமயம் செலவினங்களும் கட்டுக்கடங்காமல் ஏற்படலாம். அன்றாடப் பணிகளைத் திட்டமிட்டுச் செய்பவர்களுக்கு எந்தத் தொல்லையும் ஏற்படாது. உடல் நிலையில் கோளாறு ஏற்பட்டாலும் அது தாற்காலிகமாகவே இருக்கும். கோளறு பதிகத்தையோ, சிவமானச பூஜா ஸ்தோத்திரத்தையோ படிப்பவர்களுக்குக் கவலையே தேவையில்லை.



# செவ்வாயின் நாட்டில் தோஷமா?

'**சீ**ருலவும் கிருஷ்ணை முதலிலங்கை வரை யந்தச் செவ்வாயின் தேசமென்றே செப்புவர் நல்லோரே!' - என கிருஷ்ணா நதி முதல் இலங்கை வரை உள்ள நிலப்பரப்பைச் செவ்வாயின் தேசமென எல்லை யிட்டுக் காட்டுகிறது ஜாதக அலங்காரம். எனவே, தமிழ்நாடு முழுவதும் அங்காரகன், குஜன், மங்களன் என அழைக்கப்படும் செவ்வாய் கிரகத்திற்குரிய நாடு' எனலாம். அதே சமயம் தமிழ்நாட்டில் கணபதிக்கு அடுத்து, ஸ்ரீ சுப்ரமணியனுக்குத்தான் அதிக அளவில் ஆலயங்கள் உள்ளன. செவ்வாயின் அதிதேவதையே முருகன்தானே? ஆனால், இப்படிப்பட்ட தமிழ்நாட்டில்தான் பெரும்பாலான ஜாதகங்கள் செவ்வாய் தோஷமுள்ள ஜாதகங்கள் என ஒதுக்கப்படுவதையும் பார்க்கிறோம். இதனால் கைகூடி வரும் நேரத்தில் தடைபடும் திருமணங்கள் ஏராளம். செவ்வாய் கிரகத்திற்கு ஜாதகத்தில் இத்தகைய முக்கியத்துவங்களைக் கொடுப்பதேன்? இதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. செவ்வாய் இரத்தத்திற்குரிய கிரகம். அதனால் தான் சகோதரர்களுக்குக் காரகனாகக் குஜன் எனப்படும் செவ்வாய் குறிப்பிடப்படுகிறது. சக+உதிரம் என்பதே சகோதரம் என ஆயிற்று. அதாவது ஒரே இரத்தத்தின் சேர்க்கைதான் சகோதரர்களுக்குள் ஓடுகிறது. அதனால் பந்த பாசம் நீடிக்கிறது. தான் ஆடா விட்டாலும் தன் சதை ஆடும் என ஏன் கூறுகிறார்கள்?

இன்றைய மருத்துவ ஆராய்ச்சியின் பயனாகக் கண்டறியப்பட்ட இரத்தத்தின் வகைகள் நன்கு வரையறுக்கப்பட்டுள்ளன. ஒரே இனத்தைச் சேர்ந்த இரத்தம் அறுவை சிகிச்சை, மற்றும் எந்தக் காரணத்தாலோ இரத்தம் குறைந்துள்ளவர்களுக்குப் புதிய இரத்தம் செலுத்துதல் போன்ற சமயங்களில் உபயோகப்படுத்தப்பட்டுப் பயனும் அடைவதைப் பார்க்கிறோம். ஜாதகங்களிலும், கை ரேகைக் கலையிலும் செவ்வாயின் தன்மையை அக்கிரகம் அமைந்துள்ள தன்மையைக் கொண்டே பலத்தை, அல்லது பலவீனத்தை அறிகிறோம். அதனால்தான் பலவீனமான நிலையில் செவ்வாய் அமைந்துள்ள ஜாதகத்தை, பலம் வாய்ந்த ஜாதகத்துடன் சேர்ப்பது கூடாது எனக் கூறுகிறார்கள். அவ்வாறு பலவீனமான நிலையில் அமைந்துள்ள ஜாதகத்தையே செவ்வாய் தோஷ ஜாதகம் என்கிறார்கள். பலவீனமான நிலையில் செவ்வாய் இருந்தால் அதனுடன் சேர்க்கும் ஜாதகமும் பலவீனமான நிலையில் செவ்வாய் அமைந்திருப்பதாக இருக்க வேண்டும். இது போலவே பலம் வாய்ந்த செவ்வாய் ஜாதகங்களை இணைக்க வேண்டும். இது பொதுவான விதி.

செவ்வாய் தோஷத்தை எப்படிக் கண்டறிவது? லக்கினம், சுக்கிரன், சந்திரன் ஆகிய மூன்றில் ஏதேனும் ஒன்றுக்கு செவ்வாய் 2, 4, 7, 8, 12 ஆம் இடத்தில் இருக்கிறதா எனக் கண்டறிய வேண்டும். உதாரணத்திற்காக ஓர் உதாரண ஜாதகத்தையும், நல்லதொரு மண வாழ்க்கை அமையத் தக்கதொரு உள்ளங்கையையும் படம் வரைந்து காட்டப்பட்டுள்ளது. இந்த ஜாதகத்தில் செவ்வாய் தோஷமே சிறிதளவும் இல்லாத நிலை. கையிலும் (a-b)



பணத்தின் அருமை தெரிந்தவர்கள் நாங்கள்.

அப்பழுக்கற்ற வளைந்ததொரு செவ்வாய் ரேகை. அத்துடன் செவ்வாய்ச் சமவெளி சுத்த மாக இருப்பதையும் ABCD காணலாம். அத்துடன் ஜாதகத்தில் சனி உச்சமாகவும், அவரை குரு பார்ப்பதையும், அதேசமயம் சுக்கிரன் தன் சொந்த வீட்டிலும், புதன் உச்ச மாகச் சூரியனுடன் இணைந்தும் இருப்பதை யும் காணலாம். கையில் உள்ள ரேகைகளில் செவ்வாய் ரேகை நன்கு வளைந்து ஆயுள் ரேகைக்கு இணையாகச் செல்வதும், செவ் வாய் மேடு உப்பலாக இருப்பதும் (m) இந்தக் கையில் பலம் வாய்ந்த செவ்வாய் இருப் பதைக் காட்டுகிறது. இதே ஜாதகத்தில் செவ் வாய் சந்திரனுக்கோ, லக்கினத்திற்கோ, சுக்கிர னுக்கோ 2, 4, 7, 8, 12 இல் இருந்தால் தோஷ ஜாதகமே ஆகும். மேற்படி சந்திரன், லக்கி னம், சுக்கிரன் என்பவைகளில் ஏதேனும் ஒன் றுக்கு மேற்குறித்த 2, 4, 7, 8, 12 இல் செவ்வாய் இருந்தாலே தோஷம் எனப்படும்.

2, 4, 7, 8, 12 எனும் எண் முறையை லக்கினத்தை ஒன்று எனக் கணக்கிட்டு செவ்வாய் இருக்கும் வீட்டையும் சேர்த்து எண்ணிக் கணக்கிட வேண்டும். இது போலவே சுக்கிரனை ஆரம்பமாகக் கொண் டும், சந்திரனை ஆரம்பமாகக் கொண்டும் எண்ணிக் கணக்கிட வேண்டும். தோஷ ஜாத கம், பரிகாரம் அல்லது நிவர்த்தி ஜாதகம் எவை என்பதை வரும் கட்டுரைகளில் காண லாம். ஏற்கெனவே ஒரு முறை இதைப் பற்றி எழுதியிருப்பினும், மீண்டும் பல அன்பர்கள் செவ்வாய் தோஷம் என்பதைப் பற்றிய விளக்கத்தைத் தரும்படி கேட்டுள்ளதால் இவ்விளக்கங்கள் தரப்படுகின்றன.

**— ஜெயலட்சுமி கிருஷ்ணன்**

## மங்கையர் மலர் & ஃபிலிப்ஸ் நிறுவனம்

**இணைந்து நடத்தும் இம்மாத இல்லத்தரசி சிறப்புச் சமையல் போட்டி**

### சமையல் கூப்பன்

**பொருள் : மிக்ஸர் கிரைண்டர் உபயோகப்படுத்திச் செய்யும் உணவு**

**கடைசி தேதி : 15.03.'95**

.................................................. என்ற தலைப்பில் இத்துடன் சமையல் குறிப்பை அனுப்பியுள்ளேன். இதுவரை இந்தச் சமையல் குறிப்பு எந்தப் பத்திரிகையிலும் வெளியானதில்லை என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

(வழக்கமாக மங்கையர் மலர் தரும் பரிசுகள் தவிர) ஃபிலிப்ஸ் அளிக்கும் பரிசுகள் :
முதல் பரிசு - **மிக்ஸர் கிரைண்டர்** (ரூ. 2175/- பெறுமானமுள்ளது)
இரண்டாம் பரிசு - **ஹேண்ட் மிக்ஸர்** (ரூ. 1700/- பெறுமானமுள்ளது)
மூன்றாம் பரிசு - **பழம் பிழியும் கருவி (1 லிட்)** (ரூ. 800/- பெறுமானமுள்ளது)
ஆறுதல் பரிசுகள் (3) - **பழம் பிழியும் கருவி (½ லிட்)** (ரூ. 650/- பெறுமானமுள்ளது)



## இது சரியா? - வாசகிகளின் கேள்விகள்



என்னிடம் நான்-ஸ்டிக் (non-stick) தோசைக்கல் உள்ளது. வாங்கி நான்கு வருடங்கள் இருக்கும். தற்போது அதன் மேல் கோட்டிங் எல்லாம் போய் விட்டது. அதற்குக் கோட்டிங் கொடுக்க வேண்டுமானால் பம்பாய்க்குதான் அனுப்ப வேண்டும் என்று கடைக்காரர் சொல்கிறார். சென்னையில் கோட்டிங் கொடுக்க வசதி இருக்கிறதா? அதற்கு எவ்வளவு செலவாகும்?

நிர்மலா ரமணி, திருநெல்வேலி.

''அதற்குக் கோட்டிங் கொடுக்கும் செலவு ஏறக்குறைய புதிய நான்-ஸ்டிக் விலையைத் தொட்டுவிடும்'' என்று அதிர்ச்சியடையவைக்கிறார் கோடம்பாக்கம் மேம்பாலம் அருகிலுள்ள சேகர் ஸ்டோர்ஸ் பாத்திரக்கடை உரிமையாளர் ந.ய.த. பாண்டியன்.

''பழையன கழிதலும், புதியன புகுதலும்'' இந்தக் காலத்துக்கு சாலப் பொருந்தும். அந்தக் கடைக்காரர் பம்பாய் அனுப்பித்தான் சரிபார்க்க முடியும் என்கிறார். நாம் அதை பம்பாய்க்கு அனுப்பிவிட்டு அதற்குப் போக்குவரத்து, தபால் செலவுகளை ஏற்று, சர்வீஸ் செலவுகளை ஏற்பது என்பது பணத்தையும் விரயமாக்கும் நேரத்தையும் விரயமாக்கும். இதற்கு மறு கோட்டிங் முறையை யாருமே இதுவரை செய்ததே இல்லை.''

# கீரைப் பொடியால் சத்து கிடைக்குமோ?

• சுகந்தி - ஸ்ரீதர்



**சென்னையில் நாளுக்கு நாள் நகைக் கடைகள் பெருகி வருகின்றன. ஒரு நகைக் கடைக்குள் நுழைந்தால் 10 முதல் 15 பேர் உட்கார்ந்து வியாபாரம் செய்கிறார்கள். இவர்கள் தகுதி, என்ன? படிப்பு என்ன? எப்படி வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்படு கிறார்கள். ஏன் இந்தப்பணிக்கு பெண்கள் தேர்ந்தெடுக்கப்படுவதில்லை?**

**அனுராதா, சென்னை - 84.**

"நல்ல அனுபவம் பெற்றவர்களையே விற்பனையாளராக நியமிக்கிறோம். புதியவர் களை அவர்களுக்கு அஸிஸ்டென்டாக எடுத்துக் கொள்கிறோம். விற்பனையாளராக படிப்பு அதிகம் தேவை என்பதில்லை. சுமார் படிப்பு போதும். ஆனால் திறமையாக பேசு பவராகவும், கணக்குப் போடுவதில் தேர்ந் தவராகவும் இருக்க வேண்டும். மேலும் இந்த வேலைக்கு அமர்த்தப்படுபவர்கள் நம்பிக்கைக்குரியவர்களாக இருக்க வேண் டும். பெண்களை வேலைக்கு எடுக்கக் கூடாது என்பதில்லை. நேரம் ஒத்து வராது என்ப தால்தான். காலை 9 மணிக்கு திறக் கும் கடை இரவு 9 மணிக்குத்தான் முடி யும். அதற்குப் பிறகு தக்கப் பாதுகாப்போடு அனுப்பி வைப்பது இயலாத காரியம்" என்று சொல்பவர் தி.நகர் உஸ்மான் சாலை யில் உள்ள 'அம்பிகா ஜுவல்லர்ஸ்'



*இரவில் ஆட்டோவுக்காகக் காத்து நிற்கும் பரி தாபத்துக்குரியவர்கள் வசதிக்காக : தொலைதூரத்தில் வரும் ஆட்டோவில் பயணிகள் இருப்பது தெரியாமல் கைநீட்டிக் காத்திருந்து ஏமாறாமல் இருக்க, ஆட்டோவின்மேல் "ENGAGED" ("சவாரியில்") என்ற வாசகத்துடன் பளிச் சென்று விளக்கு பொருத்தினால் ஆட்டோ டிரைவர்களின் மனிதநேயம் வெளிப்படாதோ?*

- திருமதி ஜி. ராஜ்



மானேஜிங் பார்ட்னர் எஸ். திருச்செல்வம்.

**கீரை என்ன கிடைக்காத பொருளா? அன்றாடம் ஒவ்வொரு விதமான கீரையை ஃப்ரெஷ்ஷாக சாப்பிடுவது நல்லதா யிற்றே? பின் எதற்கு சில கடைகளில் கீரைப் பொடி வகைகளாக விற்கிறார்கள்? இந்தப் பொடியை வாங்கி உண்பதால் உடலுக்கு நன்மை உண்டா?**

**கௌரி, விருகம்பாக்கம்.**

"நலம் வேண்டும் நோயாளிகள் டாக் டரைப் பார்க்கத் தவறினாலும் எங்களைப் பார்க்கத் தவறுவதேயில்லை" என்கிறார் கள் தி. நகர் 73, ரங்கநாதன் தெருவில் பல சித்த மருத்துவர்களின் ஒட்டுமொத்த பாராட்டைப் பெற்ற தம்பதியர் ஸ்ரீதரும் சுகந்தியும்.

"ஒவ்வொரு நாளும் ஒரே விதமான கீரை கிடைக்குமா என்பது சந்தேகம். கிடைத்தாலும் அதை ஆய்ந்து வேக வைத்து கடைந்து அதனால் ஆகும் நேர மும் அதிகம். உதாரணமாக வல்லாரைக் கீரை, சிறுகுறிஞ்சான், பிரண்டை, கரிச லாங்கண்ணி போன்றவை. வல்லாரைக் கீரை ஞாபக சக்தி நரம்பு தளர்ச்சி, மூளை வளர்ச்சி இவைகளுக்கு மிக நல்லது. கீரை வகைகளில் வல்லாரை மட்டும், இங்கி லீஷ் மருத்துவத்தில் மாத்திரையாக கிடைக் கிறது. வேறு எந்தக் கீரையும் மாத்திரை வடிவில் கிடைக்கவில்லை. ஆனால் இங்கே எல்லா வகைக் கீரைகளும் பொடி வடிவில் கிடைக்கின்றன. இதை மருந்து போல இல்லாமல் நெய் அல்லது எண் ணெய் கலந்து ஒரு ஸ்பூன் அளவு பொடியை சாதத்தில் சேர்த்து உமிழ்நீர் கலக்க சாப்பிடுவதால் அதிகச் சத்து உண்டாகும்.

கீரைப் பொடி வகையில் 80 சதவீதம் கீரையும் 20 சதவீதம் பருப்பு, இந்துப்பு, மிளகு காரம் சேர்க்கப்படுகிறது. இந்தப்



காஸ் ஸ்டவ்வின் ரப்பர் இணைப்புப் பகுதி பின்புறம், நடுவிலிருந்து வரும்படி அமைத்தால் - அடுப்படி மேடையில் ரப்பர் குழாயின் இடையூறைத் தவிர்க்கலாம். மேடையின் அமைப்பைப் பொறுத்து குழாயை இணைக்க வேண்டிய சிரமமும் குறையும்.

- ஜி. ராஜு

பொடிகளில் எந்த கெமிக்கலும் சேர்க்கப் படுவதில்லை. அதனால் பக்க விளைவுகள் உண்டாகாது. எந்த வயதினரும் சாப்பிட லாம். பெரும்பான்மையான மக்கள் சிறுகுறிஞ் சான் பொடிகளை கேட்டுத்தான் வருகிறார் கள். எட்டு வருடமாக நீரிழிவு நோயால் பாதிக்கப்பட்டவர் இந்த சிறிகுறிஞ்சான் பொடியைத் தொடர்ந்து சாப்பிட்டு அதிகப் பலனை பெற்றிருக்கிறார்கள். நீரிழிவு நோய் வருவதற்கு முன்னதாக உணவில் சேர்த்துக் கொண்டால் இந்த நோயே வராது.

தூதுவளை சளி, இருமல் போக்கும். கரிசலாங்கன்னி பொடி காமாலை, ஈரல், கல்லீரல் நோய்களுக்கு நல்லது. ஆடு தொடா பொடி ஆஸ்துமாவையும், வாத நாராயணப்பொடி கை, கால் வலியையும், முடக்கத்தான் பொடி மூட்டுப் பிடிப்பை யும் நீக்கும். மணத்தக்காளிப் பொடி - அல்சர் வயிற்று வலிக்கு ஏற்றது. பிரண்டை, ஜீரணம் தரும். நெல்லிக்காய் பொடியில் வைட்டமின் சி உள்ளது. நடக்க முடியாதவர்களுக்கு வாத நாராயணப் பொடி முடக்கத்தான் பொடி, இரண்டை யும் கலந்து கொடுத்து வந்தால் பலன் பெறலாம். நோயாளிகள் தேவைக்குரிய பொடிகளை 48 நாட்கள் (ஒரு மண்டலம்) சாப்பிட்டு வந்தால் நல்ல பலன் கிடைக் கும்.''

**எங்கள் வீட்டில் உள்ள ஃப்ரிஜ்ஜில் மஞ்சள் கறை படிகிறது. இது பற்றி பலரிடம் கேட்டும், பயனில்லை. ஆகவே, இந்தக் கறை நீக்கும் வழி, ஃப்ரிஜ் பராமரிப்பு பற்றியும் உங்கள் பத்திரிகை யில் வெளியிட்டால், மிகுந்த பயனுண்டா கும்.**

**ஜெ. பண்டரிநாதன், கும்பகோணம்.**

''முதலில் நாம் ஃப்ரிட்ஜை ஏற்றத் தாழ் வற்ற சமமான தரையில் வைக்க வேண் டும். அதற்கென்று உள்ள அடிப்பீடத்தின் மேல் வைப்பது மிக நல்லது. சுவரின் ஓரத்திலோ, அல்லது இரண்டு சுவர்கள் சந்திக்கும் மூலையிலே ஒட்டினார் போலவோ வைக்கக்கூடாது. பின்புறத்தைச் சுற்றி காற்று நன்றாக வரும்படி குறைந்தது ஒரு அடி இடைவெளி விட்டு வைப்பது நல்லது.

ஃப்ரிட்ஜை உறையால் மூடுவதோ அதன்மேல் பளுவான பொருட்களை வைப்பதோ கூடாது. மழைச் சாரல் படும்படி யான இடத்திலும் குளிர் அல்லது வெப்பக் காற்று வீசும் இடத்திலும் வைத்தால் அது தட்பவெட்ப மாற்றங்களுக்கு உட்பட்டு விரைவில் பழுதடையும். குளிர்சாதனப் பெட்டியுள் அவசியமானதை மட்டும் வைக்க வேண்டும். ஐஸ்கிரீம் போன்றவற் றைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. அவைகளுக்கு எப்போதும் முதலிடம் உண்டு. காய்கறிகள், கீரை வகைகள், இறைச்சி, மீன், பால், முட்டை, சில வகைப் பழங்கள் (வாழைப்பழம் உள்ளே வைத்தால் கறுத்துவிடும்) வைக்கலாம்.

ஃப்ரிட்ஜில் எல்லாப் பகுதிகளிலும் குளிர்ச்சி ஒரே அளவாக இருப்பதில்லை. ஃப்ரீசரில் குளிர்ச்சி உறை நிலையில் இருக்கும். நீண்டகாலம் கெடாமல் பாது

காக்கப்பட வேண்டிய விலையுயர்ந்த எளிதில் கிடைக்காத மருந்துகளை வைக்கலாம். மற்ற இடங்களில் பொருட்களின் உயரம் பருமன் பொறுத்து வசதியாக அடுக்கி வைக்கலாம்.

சமைத்த உணவுப் பண்டங்களை வைப்பதில் ஒரு முக்கியமான விஷயத்தை மனதில் கொள்ள வேண்டும். உணவுப் பண்டம் சூடாக இருக்கும் போது அப்படியே குளிர்பதனப் பெட்டிக்குள் வைக்கக் கூடாது. ஆறிய பின்னரே உள்ளே வைக்க வேண்டும். காய்கறி கீரை முட்டை பழங்கள் எல்லாவற்றையும் கழுவிய பின் வைக்க வேண்டும். இல்லாவிட்டால் அவற்றில் உள்ள தூசுதும்புகள், மண்ணோடு வைத்தால் பெட்டியின் உட்புறம் சீக்கிரத்தில் மாசுபடியும். காய்கறி பழங்களை பாலிதீன் உறையில் போட்டு வைக்க வேண்டும். உள்ளே வைக்கும் உணவுப் பொருட்களை மூடி வைக்க வேண்டும். திறந்து வைத்தால் சுவை குன்றிப் போகும்.

ஃப்ரிட்ஜை மென்மையாகக் கையாள வேண்டும். அடிக்கடி திறந்து மூடுதல் கூடாது. வேகமாக திறப்பதும் சடாரென மூடுவதும் அறவே கூடாது. ஃப்ரிட்ஜின் கதவு எடை அதிகம் உள்ளதாக இருப்பதால் அதில் தொய்வு ஏற்படும். பிறகு சரியாக மூட வராது.

15 அல்லது ஒரு மாதத்திற்கு ஒரு முறை ஃப்ரிட்ஜின் எல்லா பகுதிகளையும் சுத்தமாகத் துடைத்து, தூய்மை செய்தல் வேண்டும். உள்ளே உள்ள பொருட்கள் எல்லாவற்றையும் எடுத்து வெளியே வைத்து விட்டு ஈரத்துணியால் துடைக்க வேண்டும். பின் மெல்லிய சுத்தமான பனியன் துணியில் துடைப்பது நல்லது. தேவைப்பட்டால் சோப்பும் சிறிதளவு எண்ணெயும் கலந்த கலவையை முதலில் துடைப்பதற்கு பயன்படுத்தலாம். இப்படி ஒழுங்காகவும், செப்பமாகவும் குறிப்பிட்ட காலத்தில் தூய்மை செய்யும் பெட்டிகளில் பெரும்பாலும் அடிப்பகுதியில் மஞ்சள் கறை படியும். அதை அகற்றுவதற்கு மேற்கூறிய முறையில் எண்ணெய் சோப்புக் கரைசலைக் கொண்டு கழுவியும் மெல்லிய சுரசுரப்புத் தாளைக் கொண்டு பக்குவமாக தேய்த்தும் போக்க வேண்டும். இப்படி ஏற்படும் கறை பெட்டிக்கு மேற்புறத்தில் ஒரே சீராகவும் அதன் உட்புறத்தில் பெட்டியின் அடிப்பகுதியில் மட்டும் படிவதை நாம் கண்டிருக்கலாம்.

இப்படி ஏற்படும் கறைக்குக் காரணம் காற்றில் கலந்திருக்கும் சில பொருட்கள் குளிர்ச்சி அடையும் போது ஏற்படும் வேதியல் மாற்றத்தின் விளைவாக இருக்கக் கூடும். ஃப்ரிட்ஜின் உட்புறத்தில் மேல் பகுதியை விட அடிப்பகுதியில் அதிகக் கறைபடியும்'' என்று மேற்கு அண்ணா நகர் ப்ரீஸ் கண்ட்ரோல் நிறுவன உரிமையாளர் நம்பி கூறுகிறார்.

தொகுப்பு : **மலர்விழி**

உருளைக்கிழங்கை நன்கு
அலம்பி, எண்ணெய் காய்ந்த
வுடன் உடனுக்குடன் ஒவ்வொரு கிழங்காக,
நேரிடையாகவே எண்ணெயில் பொரித்தால், (ஜாக்கிரதையாய்ப்
பொரிக்க வேண்டும்) பொன்னிறமாகவும், அதேசமயத்தில்
மொறுமொறுவென்றிருக்கும். பிறகு தேவையான அளவு காரம், உப்பு,
பெருங்காயம் சேர்த்துச் சாப்பிடலாம்.
- லக்ஷ்மி தியாகராஜன்

**க**ர்நாடகத்தில் மேற்குத் தொடர்ச்சி மலையில் உள்ள குடகுநாடு அழகு கொஞ்சும் மலைப்பிரதேசம். இந்த மலைக்கும் உயர்தர காஃபிப்பயிருக்கும் உள்ள தொடர்பு தொன்மையானது, வளமையானது, என்றும் பசுமையானது.

குடகு தரும் 100% கலப்படமற்ற ஃபில்டர் காஃபியை ஒரு முறை பருகியவர்கள் வேறு எதையும் அருந்த மாட்டார்கள். கூர்க் காஃபியில் அடங்கியுள்ளவையே இதன் தனித்தன்மைக்குக் காரணம். தூய மலைக்காற்றும், கறுத்த நிறமுள்ள செழிப்பான மண்ணும், பொழியும் மழையும், சூரிய கிரணங்களை இதமாகப் பாய்ச்சும் மரங்களடர்ந்த மலைப்பிரதேசமும் சேர்ந்து, காஃபிக் கொட்டைகளை மெல்ல, பதமாக முற்ற வைக்கின்றன.

குடகில் காஃபி வளர்ப்பது ஒரு கலை. குடகு நாட்டவர் பரம்பரை பரம்பரையாகப் படித்து கை தேர்ந்துள்ள அருமையான கலை. இந்த கலையில் விளைவது நறுமணமும் நற்சுவையும் நிறைந்த ஓர் அற்புத காஃபி : சிக்கரி சேர்க்கத் தேவையில்லாத காஃபி. இந்த ஃபில்டர் காஃபியை உங்களுக்கு கன்ஸாலிடேட்டட் காஃபி நிறுவனத்துடன் சேர்ந்து தருவது டாடா நிறுவனம். குடகின் மரபைப் பின்பற்றித் தயாரிக்கப்படும் " கூர்க் " இந்தியாவின் மிகத் தூய்மையான, கலப்படமற்ற ஃபில்டர் காஃபி. துளியும் சிக்கரி சேர்க்காத 100% காஃபி.

டாடா நிறுவனமும் கன்ஸாலிடேட்டட் காஃபி லிமிடெட்-டும் குடகின் மிகப்பெரிய காஃபித் தோட்டங்களின் உடைமையாளர்களாக இருப்பதால் " கூர்க் " ஃபில்டர் காஃபி 100% சிக்கரி இல்லாமல் வருவது மட்டுமல்ல, மற்ற எந்த காஃபியையும் விட இன்னும் பசுமை மாறாது உங்களுக்கு டாடாவின் தோட்டங்களிலிருந்து வருகிறது.

அடங்கியுள்ளவை :

மலைக்காற்று,

செழுமையான

நிலம்,

மழை,

கூர்க்

இவற்றுடன்

டாடா நிறுவனம்.




100% கலப்படமற்ற " கூர்க் " ஃபில்டர் காஃபியை ருசித்துப் பருகுங்கள் : ஆனந்தத்துடன் அனுபவியுங்கள். இதில் அடங்கியுள்ளவை இப்போது உங்களுக்குத் தெரியுமே. எனவே இனி உங்களுக்குப் புரியும் : எதனால் இது இத்தனை அருமையாக இருக்கிறது, எதனால் இதன் மணமும் சுவையும் இத்தனை சிறப்பாக இருக்கிறது, எதனால் இது ஆத்ம திருப்தியை அளிக்கிறது என்பது.







பெருமிதத்துடன்
வளர்த்த காஃபி.



## குடும்பக் கடன் பெருக பெண்கள் காரணமா?

**- இந்தக் கேள்வியை ஆறு பெண்களிடம் கேட்டோம். அலசி ஆராய்ந்து இப்படி பதில் சொன்னார்கள்...**



• ருக்மணி விஸ்வநாதன்

### திருமதி ருக்மணி விஸ்வநாதன் :

"எனக்குத் தெரிந்த ஒரு பெண்மணி கணவனின் வருமானத்தை நினைவில் கொள்ளாமல் ஆசைகள் வளர்த்து நிறைய செலவு செய்து ஆடம்பரப் பொருட்களை வாங்கி வீட்டில் குவித்து கணவனை கடனில் மூழ்க வைத்தார். கடனை கொடுக்க வாங்கிய பொருட்களை விற்க வேண்டியிருந்தது. வேறு ஒரு பெண்மணி, கணவன் நிறைய சம்பாதித்து மனைவி கையில் கேட்டபோதெல்லாம் கொடுக்க, அவள் அக்கம் பக்கத்தில் உள்ள பலருக்குக் கடனாகக் கொடுத்து திரும்ப வாங்க முடியாமல் தவித்து நாளடைவில அவள் கணவனையே அவளுக்காகக் கடன் வாங்க வைத்து விட்டாள். துபாய் சென்று சம்பாதித்த ஒருவர் எல்லா பணத்தையும் இந்தியாவில் இருக்கும் தனது குடும்பத்திற்கு அனுப்பினார். அவர் அங்கு எதுவும் சேமிக்கவில்லை. இந்தியாவில் அவர் மனைவியும், தாயாரும் அவர் அனுப்பிய பணத்தைச் சேர்த்து வைக்காமல் இஷ்டப்படி செலவழித்து பணம் இல்லாமல் கடன் வாங்கி விட்டார்கள். துபாயில் இருந்து வேலை முடிந்து வந்தவர் நிலைமை அறிந்து அதிர்ச்சி அடைந்தார். வீட்டை விற்று மனைவி, தாயார் வாங்கிய கடன்களை அடைக்க வேண்டி வந்தது. வீடு கட்டும் ஆசையை கணவனுக்குத் தூண்டி விட்டு, கடனில் வீட்டை கட்டி, கடனை திருப்பித் தர முடியாமல் கணவனை தத்தளிக்க வைத்து கட்டிய வீட்டை விற்க வைத்த மனைவியும் உண்டு. எனவே பல குடும்பங்களில் குடும்பக் கடன் பெருக பெண்கள்தான் முழு காரணமாய் திகழ்கிறார்கள்."

### திருமதி சுசீலா கிருஷ்ணமூர்த்தி :

"பட்ஜெட் போட்டு செலவு செய்யும் சிக்கன சின்னமாக விளங்கும் பெண்களால குடும்பக் கடன் எப்படி பெருகும்? இப்போதெல்லாம் தாங்கள் வரவு செலவு செய்தால் செலவு அதிகமாகி கடன் வாங்க வேண்டி இருக்கும் என்று பயந்து கணவன்மார்கள் தங்கள் சம்பளத்தை மனைவிமார்களிடம் தந்து வருகிறார்கள். பெண்களுக்குப் போட்டி மனப்பான்மை அதிகம். மற்றவர்களைப் பார்த்து தாமும் உயரவே நினைப்பார்கள். கடன் வாங்கி அழிய நினைக்க மாட்டார்கள். பெண்ணிடம் பணமிருந்தால் பெருகும். ஆணிடம் இருந்தால் அழியும். இது நாட்டின் அன்றும், இன்றும், என்றும்



• சுசீலா கிருஷ்ணமூர்த்தி

இருக்கப் போகும் நிலை. பெண்கள் இயல்பாக தெய்வபக்தி மிக்கவர்கள். எனவே கடன் வாங்கினால் வீட்டிற்கு 'லட்சுமி' வந்து தங்க மாட்டாள் என்று பயந்து கடனைத் தவிர்த்து விடுவர். ஆண்கள் கடன் வாங்கிக் குடித்து சீட்டாடுவது போல பெண்கள் செய்வ தில்லை. பல குடும்பங்களில் கணவனின் கடன் தீர தன் தாலியைக் கூட கழற்றிக் கொடுத்துப் பெண் காப்பாற்றி இருக்கிறாள். எனவே பெண்களால் குடும்ப கௌரவம், புகழ்தான் கூடுகிறது."

## திருமதி கல்யாணி நடராஜன் :

"குடும்பக் கடன் பெருக பெண்கள் நிச்சயம் காரணம் இல்லை. என் உறவினர் ஒருவர். நிரந்தர வேலை கூட இல்லை.



• கல்யாணி நடராஜன்

ஆனால் அவர் அவ்வப்போது சம்பாதித்துத் தரும் பணத்தை சாமர்த்தியமாக சேர்த்து, யாரிடமும் கடன் ஏதும் வாங்காமல் சமாளித்து இன்று ஒரு லட்சம் வரை பேங்கில் வைத்து இருக்கிறார். என் தோழியின் கணவர் சீட்டாட்ட வெறியர். நல்ல வேலையில் இருந்து நிறைய சம்பாதித்தாலும் சீட்டாட்டத்தில் தோற்று பணத்தை இழந்து மிகக் குறைவான பணத்தையே மனைவியிடம் தரு வார். என் தோழியோ கெட்டிக்காரத்தனமாக அந்தப் பணத்தை வைத்தே வீட்டுச் செலவுகள், குழந்தைகள் செலவுகளை சரிசெய்து வரு வாள். அனாவசிய செலவு எதுவும் செய்ய மாட்டாள். யாரிடமும் கடன் கேட்டதும் கிடையாது. சீட்டு விளையாட கணவர் வாங் கிய கடனைக் கூட அவள் அடைத்து விட்டாள். தன் மனைவியின் பொறுப்புணர்ச் சியைப் பார்த்து மனம் நெகிழ்ந்து அந்த சீட்டாட்டப் பிரியர் இன்று திருந்தி ஒழுங்காக சம்பளம் முழுவதையும் மனைவியிடம் தரு கிறார். முன்பை விட அதிக பணம் கிடைப் பதால் என் தோழி அதிகமாக செலவு செய்வதில்லை. வழக்கம் போல் சிக்கனமா கவே இருக்கிறாள்."இப்படித்தான் பெண்கள் இருக்கிறார்கள்."

## திருமதி தமயந்தி கிருஷ்ணன் :

"என் அனுபவத்தில் காப்பிப் பொடி, சீனி, சர்க்கரை, பருப்பு இவைகளை அடுத்த வீட்டுப் பெண்களிடம் கடனாக வாங்கி விட்டுத் திரும்பத் தந்து விடும் பெண்களைத் தான் அதிகமாக பார்த்திருக் கிறேன்.



• தமயந்தி கிருஷ்ணன்

திடீர் மருத்துவச் செலவு வரும் போது கணவர் வெளியூர் சென்றி ருந்தால் 'அவர் வந்ததும் வாங்கித் தந்து விடு கிறேன்' என்று கூறிப் பணம் கைமாத்து வாங் கும் பெண்கள் சிலரே. குடும்பச் செலவு களையும் செய்து கொண்டு, ஏழை எளியோ ருக்கு முடிந்த அளவு உதவியும் செய்து கொண்டு கடன் வாங்காமல் கண்ணியமாய் வாழும் பெண்கள் பலரை பார்த்திருக்கிறேன். வயது ஆக ஆக பெண்களுக்குப் பொறுப்பு ணர்ச்சி வந்து விடுகிறது. ஆடம்பரமாக வாழும் ஆசையும் போய் விடுகிறது. கல்யாண மான புதிதில் தானும் செலவழித்து, கணவ னையும் செலவழிக்க வைத்து குடும்பக் கட னைக் கூட வைக்கும் பெண்கள் வாழ்வில் அடிபட்டுத் தானாகவே திருந்தி விடுகிறார்கள்."

• அலமேலு சர்மா



## திருமதி அலமேலு சர்மா :

“குடும்பக் கடன் பெருக ஆண்களும், பெண்களும் சரிசமமான நிலையில் காரணங்களாக இருக்கிறார்கள். மதுரையில் எனக்குத் தெரிந்த குடும்பத்தில் கடன் சுமை தாங்காமல் கணவன் தன் மனைவி, மூன்று பெண்களை அதோகதியாக விட்டு விட்டு ஓடி விட்டார். மனைவி தன் வீட்டின் ஒரு பகுதியை வாடகைக்கு விட்டு அதன் வருமானத்தையும், தையல் வேலையில் வரும் வருமானத்தையும் வைத்து குடும்பக் கடனை அடைத்து, குழந்தைகளைப் படிக்க வைத்து ஆளாக்கி நல்ல முறையில் மூன்று பெண்களுக்கும் திருமணமும் செய்து வைத்து விட்டார். இப்படி கடன் வாங்கி குடும்பத்தைத் தவிக்க விட்ட ஆண்கள் இருப்பது போல், வேலைக்குப் போன என் தோழி குழந்தைகள் மேல் உள்ள பாசத்தால் அவர்கள் கேட்ட விலை உயர்ந்த பொருட்களையெல்லாம் ஆபீஸ் மானேஜரிடம் கணவருக்குத் தெரியாமல் கடன் வாங்கி, வாங்கிக் கொடுத்து திரும்பக் கடனை தர முடியாமல், வேலையை ராஜினாமா செய்து கிடைத்த பிராவிடண்ட் பண்டு தொகையைக் கொடுத்து கடனை தீர்க்க வேண்டி வந்தது. இப்படி ஆண், பெண் இருவருமே ஏதாவது ஒரு காரணம் காட்டி கடன் வாங்கி விடுகிறார்கள். சாதாரணமாக பெண்களை விட ஆண்களே அதிகமாக வெளியில் கடன் வாங்குவது போல் தோன்றினாலும் அதன் அடிப்படை காரணமாக பெண்களே இருக்கிறார்கள்.”



• ராதா சௌந்தர்

## திருமதி ராதா சௌந்தர் :

“பெண் என்பவள் கிரஹலட்சுமி. ஒரு வீட்டின் தெய்வமாக பெண்ணை மதிக்கிறோம். பெண்ணை வீட்டிற்கு ‘விளக்கேற்ற வந்தவள்’ என்கிறோம். அதாவது வீட்டின சகல இருட்டையும் போக்க வருபவள் பெண். ஆக பெண்ணால் செல்வம்தான் விருத்தியாகும். கடன் இல்லை. நான் செட்டிநாடு பக்கம் பிறந்தவள். எங்கள் ஊரில் ஒருவர் தொழில் ஆரம்பித்து அவர் மனைவியையும் தொழிலில் சேரச் சொன்னார். அவளோ மறுத்து விட்டாள். அந்தக் கணவருக்கு வருத்தம்தான். தன் பணத்தை மட்டும் மூலதனமாக போட்டு தொழில் துவங்கினார். நஷ்டம் ஏற்பட்டு சொத்துக்களை விற்று கடன் கொடுக்க முடியாமல் மஞ்சள் பேப்பர் கொடுத்து அவமானம் அடைந்து விட்டார். ஆனால் மனைவியின் சொத்துக்களும், நகையும், பணமும் அவரைக் காப்பாற்றி கஷ்டப்பட்டு நல்ல நிலைக்கு வரவழைத்து கடனையும் தீர்த்து விட்டது. இப்படி ஆண்கள் கடன் சுமையைப் பெண்கள்தான் ஏற்றுச் சரிசெய்கிறார்கள். மீறிப் போனால் மளிகைக் கடை, மருந்துக் கடையில் ‘மாத கணக்கு’ எனும் கடன் மட்டுமே பெண் வாங்குகிறாள். அதையும் முதல் தேதி தந்து விடுகிறாள். நடுத்தர குடும்பங்கள் மட்டுமே கடனில் தத்தளிக்கிறது. எதிலும் அகலக் கால் வைக்காது, ‘போதும்’ என்ற மனதோடு வாழ்ந்தால் கடன் எப்படிப் பெருகும்?”

பேட்டி, படம் : **விஜயா கண்ணன்**

# வாழ்க்கை ஆரம்பமாகிறது 58ல்



## ... நீங்கள் இப்போது அதற்கு திட்டமிட்டால்!

அறிமுகப்படுத்துகிறோம் யூடிஐ-ன் ரிடையர்மென்ட் பெனிஃபிட் பிளான். உங்கள் பணி ஒய்வை எதிர்நோக்க மற்றும் அதன் பல்வேறு மகிழ்ச்சியைப் பெற உதவும் முதலீடு அடிப்படையிலான முதல் பணி ஒய்வுத் திட்டம். நீங்கள் செலுத்தும் தொகை பிரிவு 88-ன் கீழ் வரிச்சலுகையைப் பெறும்.

யூடிஐ-ன் ரிடையர்மென்ட் பெனிஃபிட் பிளானில் முதலீடு செய்யுங்கள். வேறெந்த முதலீடும் இதைவிடச் சிறந்தது அல்ல.

### சிறப்பம்சங்கள்

- 18-52 வயது வரை உள்ள தனிநபர்கள் இதில் சேரலாம்.
- மொத்த குறைந்தபட்ச தொகையான ரூ. 10,000த்தை குறைந்தபட்ச தவணையான ரூ.500 (மற்றும் அதன் மடங்குகளில்) என்றவாறு 20 வருடாந்தர தவணைகளுக்கு மேற்படாமல் 52 வயது வரை செலுத்த வேண்டும். மொத்த தொகைக்கு உச்சவரம்பு கிடையாது. 52 வயது வரையிலும் ரூ. 10,000 பணம் செலுத்தத் தவறினால் 15% தள்ளுபடியில் மறு கொள்முதல் செய்ய வேண்டும்.
- முகப்பு மதிப்பு ரூ. 10 முதல் மாதத்தில் விற்பனை சம விலையில் மற்றும் அதற்குப்பின் என்ஏவி அடிப்படையிலான விற்பனை விலையில் (மூன்று தசம பாயிண்டுகள் வரையிலான யூனிட்களின் அலாட்மெண்ட்.)
- வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு 88-ன் கீழ் செலுத்தப்படும் மொத்தத் தொகையான ரூ.60,000 த்திற்கு உட்பட்ட தொகைக்கு வரிச்சலுகை உண்டு.
- 58 வயதிலிருந்து மாதாந்தர வருவாய்.
- 70 வயதிற்குப் பிறகு என்ஏவி அடிப்படையிலான மறு கொள்முதல் விலையில் பணம் திரும்பப் பெறும் வசதி. முதிவுறும் காலத்திற்கு முன்பே பணம் திரும்பப் பெறவேண்டுமானால், மறு கொள்முதல் தொகையில் 10% தள்ளுபடி.

முதல் முதலீடு
அடிப்படையிலான
பணி ஓய்வுத் திட்டம்



யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா
உங்களுடைய நேசமான சகிர்காலத்திற்கு

**RETIREMENT BENEFIT PLAN**
பணி ஓய்வில் மகிழ்ச்சியை மனநிறைவுடன்

[illegible]

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.
கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 214973 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38185 • திருச்சி. போன்: 27060.

UTI 159/94 C

'உங்க பொண்ணுக்குக் கல்யாணம் வச்சீங்களே... மொய் கலெக்ஷன் எவ்வளவுங்க ஆச்சு?'

'அது இருக்கும் சார், கிட்டத்தட்ட பத்தாயிரத்துக்கும் மேலேயே! நல்லதாப் போச்சுன்னு அந்தப் பணத்திலேயே பொண்ணுக்கு ஸ்டீல் கட்டில்... பீரோ... மெத்தை எல்லாமும் வாங்கிப் போட்டு அனுப்பிச்சுட்டேன்'

'ஏன் மாமி! ஓங்க பேரனோட காதுகுத்து விசேஷத்துக்கு எக்கச்சக்கமா மொய் வந்திருக்குமே.... அத வச்சு என்ன வாங்கப் போறேள்?'

'ம்க்கும். விசேஷத்துக்குன்னு எம்பையன் ஆயிரக் கணக்குல செலவு பண்ணுனதேன் மிச்சம். வந்திருந்த உறவு ஜனம் அத்திம்பேரும், பேருக்கு பத்தும்... இருவதுமா குடுத்து கடனைக் கழிச்சுட்டுப் போயாச்சு. இதுல என்னத்த பெரிசா வாங்கறது?'-



திருமணமாகட்டும்... புதுமனை புகு விழாவாகட்டும்... மற்றும் இதுபோல் கயிறு கட்டல்... காது குத்தல் போன்ற விசேஷமாகட்டும். 'மொய்' என்று செல்லமாய் அழைக்கப்படும் இந்த அன்பளிப்பு ஒவ்வொரு குடும்பத்திலும் வெகு முக்கியமான பங்கு வகித்து வருவதை எவரும் மறுக்க இயலாது.

என்னதான் வசதி படைத்தவராயிருக்கட்டும்! எத்தனை காசு பணம் இருக்கட்டும்! சுப காரியங்கள் என்று வரும்போது, அதிகச் செலவினங்களால் சற்று திணறித்தான் போவார்கள். அது சமயத்தில் ஒரு பக்கபலமாயிருக்கட்டுமே என்ற முன்னெச்சரிக்கையுடன் ஆங்காங்கே சிறு சேமிப்பு போல் செலுத்தி வைத்து... தக்க சந்தர்ப்பத்தில் திரும்பவும் பெற்றுக் கொள்வதுதான் இந்த 'மொய்' எனப்படும் 'அன்பளிப்பு' விவகாரம். (இந்தந்த நபர் இந்தந்த அளவு தொகைக்கு கியாரண்டியானவர் என்ற நம்பிக்கையின் அளவுக்கேற்ப பத்துரூபாய் முதல் பத்தாயிரம் ரூபாய் வரைக்கும் இந்த சேமிப்பின் விகிதாச்சாரமும் மாறுபடும்.)

# 'மொய்' எனப்படுவது

தவிர, சென்டிமெண்டலான அன்புக்கும் இந்த அன்பளிப்புக்கும் ஏதும் சம்பந்தம் இருப்பதாய் நம்புவீர்களானால் ஏமாந்து போவீர்கள். இரண்டிற்கும் யாதொரு ஸ்நானப் பிராப்தியும் சத்தியமாய் கிடையாது.

'அவர் மீதுள்ள அன்பினால்தான் பரிசளித்தேன்...' 'அவரது நட்பிற்காக...பிரியத்தில் செய்கிறேன்' என்றெல்லாம் நம்மவர்கள் என்னதான் வாய் [illegible] போட்டாலும் எவருமே பிரதிபலன் எதிர்பாராமல் இருப்பதில்லை.

-நாம் கொடுக்கும் பத்து ரூபாய் நம் வீட்டு விசேஷத்தின்போது பதினைந்து ரூபாயாக

-குறைந்த பட்சம் அதே பத்து ரூபாயாகவாவது- திரும்பிவிடும் என்ற நம்பிக்கைதான் இந்த அன்பளிப்புக்கு அச்சாணி! இதைத்தான் அன்றைய பெரியவர்கள் 'வட்டி யில்லாக் கடன்' என்று அருமையாகச் சொல்லி வைத்திருக்கிறார்கள்.

-இல்லாது போனால் மொய் கொடுப்பவர்கள், வலது கை கொடுப்பது இடது கைக்குத் தெரியாத அளவில்... எந்த வகையிலும் விளம்பரப் படுத்தாமல்... கமுக்க மாய் கொடுத்துவிட்டுப் போய் விடலாமே! அப்படியா கொடுக்கிறார்கள்! கவராகக் கொடுத்தால் அதன் மீது கொட்டை எழுத்துக்களில் சுய விலாசமிருக்கும். பண்ட பாத்திரமாயிருந்தால் இனிஷியல் சுத்தமாய் பெயர் வெட்டப் பட்டிருக்கும். பணமாகக் கையிலேயே தருவதாயிருந்தால், கொடுக்கும் விதத்திலேயே கொடுக்கும் தொகை இவ்வளவு என்பதை வாங்குபவர்க்குத் தெளிவு படுத்தி விடும் நிதானம்




இருக்கும். ஹூம்! இதுதானா பலன் எதிர் பாராமல் செய்பவர் களின் அழகு?

சரி...இவற்றைக் கூட விட்டு விடுவோம். உறவினர் ஒருவரின் திருமணத் தில் இவர்கள் ஐந்நூறு ரூபாய்க்கு அன் பளிப்பு செய்து... பதிலுக்கு இவர் வீட்டு விசேஷத்திற்கு அந்த உறவினர் ஏதும் செய் யாமல் வெறும் கையை வீசிக் கொண்டு வந் தாரென்றால், பேசாமல் இருந்து விடுவார் களா? பாய்ந்து விட மாட்டார்கள்?

அட... வெறும் கையை வீசி வராமல் இருநூறு அல்லது முந்நூறு ரூபாய்க்கே கூட செய்யட்டும். கண்டிப்பாய் அதற்கும் அதி ருப்தி படத்தான் செய்வார்கள்.

-'ம்ஹூம்... நான் செய்ததில் எனக்கு இவன் பாதிகூடச் செய்ய வில்லையே! இனி இவனுக்கு என்றைக்காவது செய்வேனா பார்...' என்று ஆத்திரப் படுவார்கள். தம் கோபத்தை அவர் மீது மறைமுகமாய்க் காட் டவும் தயங்குவதில்லை.

இவ்வாறு இடத்திற்குத் தக்கபடி... சூழ் நிலைக்குத் தக்கபடி... இதே பிரச்னை வெவ்வேறு ரூபத்தில் உருவெடுக்கின்றது.

-'இவனுடைய மூன்று பிள்ளைகளின்



கல்யாணத்திற்கும் ஐம்பது ஐம்பது வீதம் மொய் எழுதினேன். இவன் என்னடாவென்றால் என்னுடைய ஒரே பிள்ளை கல்யாணத்திற்கு அதே ஐம்பது ரூபாயை மொய் எழுதி விட்டுப் போயிருக்கிறான்! நான் கொடுத்தது அத்தனையையும் என் ஒரே பிள்ளைக்கு இவன் சேர்த்து வைத்து செய்திருக்க வேண்டாமா?"– இந்தத் தினுசில் ஒப்பிட்டுப் பார்த்து, தான் அநியாயத்திற்கு ஏமாளியாகிப் போனதாய் அடித்துக் கொள்வார்கள் சிலர்.



–'அந்தக் காலம் இவளுடைய புது வீட்டு கிரகப் பிரவேசத்திற்கு பெரிய சில்வர் குடம் எடுத்து வைத்தேன். இன்றைக்கிவள் வெறும் சில்வர் வாளியோடு ஒப்பேற்றி விட்டுப் போய் விட்டாளே கடன்காரி!' என்று புலம்புபவர்கள் மற்றொரு ரகம்.

ஐயையோ! பக்கத்து வீட்டுக் காரம்மா இப்படி திடுதிப்புனு ஊரை விட்டே போயிடுவான்னு நினைக்காம போயிட்டேனே! அம்பதும் நூறுமா அவ பிள்ளைங்க கல்யாணத்துல எவ்ளோவ் செய்தேன்… என் வீட்டுல ஒரு நல்ல காரியம்னு வச்சு திருப்பி வாங்க முடியாமப் போச்சே!' நம்பிக்கையுடன் பணம் கட்டி வந்த சீட்டுக் கம்பெனிக் காரன் திருட்டுத் தனமாய் ஓடிப்போன தினுசில் வருத்தப்பட்டுப் போவார்கள் சிலர்.

இதுதான் உலக இயல்பு!

ஏனெனில் மொய் என்பது வெறுமனே வாங்கிக் கொண்டிருக்கும் ஒரு வழிப் பாதையல்ல. பிறர் தரும் அன்பளிப்பை கை நீட்டிப் பெற்றுக் கொள்ளும் பொழுதிலேயே அதை நாணயமாக திருப்பிச் செய்ய வேண்டிய பொறுப்பும் நம்மை தானாகவே சேர்ந்து விடுகிறது. எத்தனை காலமானாலும் வாங்கிய கடனை திருப்பிக் கொடுக்க எந்த அளவிற்கு கடமைப் பட்டிருக்கிறோமோ அத்தனை கடமையுணர்ச்சி இந்த அன்பளிப்பு விஷயத்திலும் நமக்கு இருக்க வேண்டியது அவசியமாகிப் போகிறது.

இன்றைய நிலையில், தாய் தந்தையர் அளிக்கும் சீதனம் மட்டுமே பிரதிபலன் எதையும் எதிர்பாராத ஒரே அன்பளிப்பு! அது தவிர்த்து இந்த உலகத்தில் 'ஓசி' என்று கிடைக்கக் கூடிய பொருள் எதுவுமே யில்லை இந்த அன்பளிப்பு சமாச்சாரங்கள் உட்பட.




எனவே 'வட்டியில்லாத இந்தக் கடன் வகையறாக்'களை வீண் மனக் கசப்புக்கு இடமளிக்காத வகையில் திரும்பக் கொடுத்து விடுவதே நமக்குக் கௌரவம்! அது தான் பல விதங்களிலும் நியாயமும் கூட!

–சூரியா சிதானந்த்

இயற்கையாக வந்த பருக்கள் இயற்கையாகவே போகட்டுமே

ஈவா
ஹெர்பல்
ஸ்கின்
க்ரீம்

இயற்கையின் அன்பளிப்பு

மிருதுவான சருமம் இயற்கையின் அன்பளிப்பு. எனவே அதை முகப்பருவும் மாசுமருவும் பாதிக்கும்போது, முழுப்பொலிவையும் மீட்டுத்தர இயற்கையால் மட்டுமே முடியும். புதிய ஈவா ஹெர்பல் ஸ்கின் க்ரீம். அதன் விசேஷத்திறன் கொண்ட ஆழ்ந்து ஊடுருவும் ஃபார்முலா அதிமென்மையாக, அதிவிரைவாக செயல்படுகிறது. உங்கள் மேனி எழிலை பளிச்சிட வைக்கிறது.




ஈவா டாமரிக் க்ரீம் –
பளிங்கு போன்ற மேனிக்கு

**ஈவா ஹெர்பல்ஸ் லிமிடெட், பம்பாய்.**

தமிழ்நாடு ஸ்டாக்கிஸ்ட்: CL அசோசியேட்ஸ், 11, ஃப்ளவர்ஸ் ரோடு, சென்னை 600 084, போன்: 6426413/6412203

உலகப் புகழ் பெற்ற

# அபிராமி ஒரிஜினல் சிதம்பரம் கவரிங் நகைகள்

## 1 வருடம் முதல் 5 வருடம் உத்தரவாதத்துடன் கிடைக்கும்

**அபிராமி "சீல்" உத்தரவாதமுள்ளது.**

## அபிராமி ஒரிஜினல் சிதம்பரம் கவரிங் நகைகள்

No. 158. ½ G. Rs. 280

No. 130. ½ G. Rs. 280 -

No. 136. ½ G. Rs. 280 -

No. 122. ½ G. Rs. 260 -

No. 121. ½ G. Rs. 260/-

No. 99. ½ G. Rs. 560/-

No. 108. ½ G. Rs. 280/-

No. 143, Rs. 75 -

No. 138. Rs. 180 -

No. 154. Rs. 75 -

Rs. 100/- No. 169

Rs. 100/- No. 168

No. 153. Rs. 75/-

½ கிராம், 1 கிராம், 2 கிராம் செயின், வளையல், நெக்லஸ் ரகங்கள் உபயோகித்த பின்பும், "திரும்ப பணம் பெறும்" நிபந்தனையுடன், கீழ்க்கண்ட எங்கள் இரண்டே ஷோரூம்களில் மட்டுமே கிடைக்கும்.
* இலவச கேட்லாக்கிற்கு விண்ணப்பிக்கவும் * நகையை V.P.P.ல் பெறலாம்.

**அபிராமி**

8 & 34, ரெங்கநாதன் தெரு
தி.நகர், போன் : 4347806
மாம்பலம் ரயில்நிலையம் அருகில்

* "அபிராமி சிதம்பரம் நகை கடைதானா" என்பதை கவனித்து வாங்குங்கள்! * கிளைகள் கிடையாது!

குறிப்பு: அபிராமி சிதம்பரம் கவரிங் நகைகள் என்பதாக வீடுகளிலோ, மற்ற இடங்களிலோ விற்பனை செய்யும் பொருட்களை வாங்கி ஏமாற்றம் அடைய வேண்டாம். அதற்கு நாங்கள் பொறுப்பல்ல. மாம்பலம் ரயில் நிலையம் அருகில் ரங்கநாதன் தெருவில் மட்டும் 'அபிராமி' ஷோரூம் 2 கடையையும் உன்னிப்பாக கவனித்து வாங்குங்கள். கிளைகள் வேறு எங்கும் இல்லை. ஏஜெண்டுகளோ, விற்பனையாளர்களோ எங்களுக்கு கிடையாது. பெரும் மதிப்புள்ள தங்க நகைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்கும், கல்யாணம் மற்றும் விசேஷங்களில் பொலிவுடன் பிரகாசிக்கவும் இன்றே விஜயம் செய்யுங்கள். சினிமா, டிராமா, பரத நாட்டிய செட்டுகளும் கிடைக்கும்.




✉ சென்ற இதழ் அட்டைப் படத்தில் நங்கையை அழகாக வெளியிட்டு விட்டு யார், எவர் என்ற விவரமே போடவில்லையே! மங்கையர் மலர் பூரா தேடிக் களைத்து விட் டேன்.
எல். சின்னராணி, கல்பாக்கம்.
(லலிதா ஜுவல்லர்ஸ், அவர்களின் நகைகளை அணிவித்து பிரத்யேகமாக நமக்காக எடுத்துக் கொடுத்த புகைப்படம் அது! - ஆர்.)

✉ இம்மாத ஆன்மீக பக்கத்தில் சூரியனார் கோவில் பற்றி அருமையான படங்களுடனும் செய்திகளுடனும் நீங்கள் நேரில் போய், போகாத வாசகியர்களுக்காக அத்தனை அம்சங்களையும் தெளிவாக விளக்கி விட்டீர்கள். நேரில் செல்ப வர்கள் இதனை கையில் எடுத்துச் சென்றாலே போதும். 'கைடு' தேவையில்லை. நடு பக்கத்தில் வெளியிட்டிருந்தால் தனியாக பத்திரப்படுத்த லாம்.
த. சாந்தி, திருவாரூர்.

✉ பூண்டு விலை கிலோ ரூ 100; விற்கும் போது பூண்டின் மகிமை பற்றி சட்டென வெளியிட்டு கிறீர்களே! பூண்டை அருங்காட்சியகத்தில்தான் பார்க்க முடியும் போல் இருக்கிறது.
கிருஷ்ணகிரி, இன்பாராம்.

✉ தெய்விக நாயகனான சூரியனுக்கு கும்ப கோணத்திற்கு அருகில்தான் ஒரு கோயில் உள் ளது என்பதையும் அது ஒரு பரிகார சேக்ஷத்ரமாக திகழ்கிறது என்பதையும் முதன் முதலில் மங்கை யர் மலர் மூலமாகத்தான் தெரிந்து கொண்டேன். அதோடு சூரிய காயத்ரி மந்திரத்தையும் கற்றுத் தினமும் சொல்ல தீர்மானித்துள்ளேன்.
முசிரி, எஸ். விமலா.

✉ கூந்தல் பராமரிப்புப் பக்கங்களைப் படிக்கப் படிக்க, ஒரே வியப்பாக உள்ளது. ஒவ்வொரு மாதமும் வெளியாகும் கூந்தல் பராமரிப்புப் பக் கங்களை வைத்து 'கூந்தல் புராணம்' எனும் புத் தகமே உருவாக்கிடலாமே!
ஒட்டன்சத்திரம், நாகமணி அண்ணாமலை.

## சொல்ல விரும்புகிறோம்!

✉ ஓய்வு சிறுகதை படித்தேன். வேலைக்குப் போகிற சமயத்துலதான் ஒரு உதவியும் பண் ணலை. ஆனால் இப்பொழுது மனைவிக்கு உதவி செய்வதைப் பெருமையாகக் கூறும் சீதாராமனின் மனப்பான்மை எல்லா ஓய்வு பெற்றவர்களுக்கும் வர வேண்டும்.
கோயமுத்தூர், கோ. கல்யாண சுந்தரம்.

✉ சகோதரி சாந்தி சுப்பையா அவர்களின் 10 கட்டளைகள் பார்த்தேன். ஆறாவது கட்டளை யைப் படித்த போது கடந்து போனவற்றை நினைத்து நினைத்து எப்போதும் கவலைப்பட்டு உடம்பைக் கெடுத்துக் கொண்டிருக்கிறேன் என் பது அதைப் படித்த பிறகுதான் தெரிகிறது. இனி அதை விட்டு விட முயற்சிப்பேன்.
சென்னை - 40, ராதா வள்ளிநாயகம்.

✉ "நம் கஷ்டம் - ஒரு கஷ்டமா?" என்ற தலைப்பில் திருமதி. கல்யாணி அவர்களுக்கு நேர்ந்திட்ட அனுபவங்களையும், அந்த அனுப வங்களை எதிர்கொண்டு அவர் மேற்கொண் டுள்ள தன்னலமற்ற, தூய வாழ்க்கை முறையினை யும் படித்திட்ட போது கண்கள் பனித்தன; நெஞ் சம் நெகிழ்ந்து போயிற்று!
தூத்துக்குடி - 3, போடி. எஸ். சையது முகமது.

✉ நீங்கள் முதல் பக்கத்தில் வெளியிடும் கட்டு ரைகளின் ஒவ்வொரு வரியும் போற்றிப் பாது காக்க வேண்டியவை. இந்த மாத ஆண்டு மலரில் கூறியிருக்கும் அத்தனை வார்த்தையும் சத்தியமான உண்மை. உங் களின் இம் முயற்சி மிகவும் போற் றுதற்குரியது.
திண்டுக்கல், முருகேஸ்வரி ராஜகோபால்.

✉ பெண்கள் நோஞ்சான் மனமுடையவர் களாக இருப்பதற்குக் காரணமே அவர்கள் பெற்றோர் கள்தான். சிறு வயதிலிருந்தே, பெண்கள் என் றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று குறுகிய கண்ணோட்டத்துடன் வளர்க்கப்படு கிறார்கள். அதனால், பெண்களிடம் ஒரு தாழ்வு மனப்பான்மை சிறு வயதிலேயே வேர் விட்டு வளர ஆரம்பித்து விடுகிறது. இந்தத் தாழ்வு மனப் பான்மையை மாற்ற வேண்டும்.

அப்போதுதான் பெண்களும் சமுதாயத்தில் நல்லதொரு நிலையை அடைய முடியும்.
ஒட்டமேடு, கவின் இளவரசி.

# தாழ்வு மனப்பான்மையை மாற்ற வேண்டும்!

# திருமண மலர்

## மணமகள் தேவை

* Wanted employed Girls below 28 years, 165 cms, fair for middle class Brahmin, Bharadwaja Vadamal fatherless Boy employed in WIPRO, Delhi from 26-12-1962, Star Kettai, Rahu and Khuja in 8th house, early marriage. Correspond to Box No. 11566

* Alliance invited for Iyer Divorcee 45, Rs. 10,000 from educated women committed to traditional Indian values of selfless love, honesty, fidelity, sincerity and sacrifice in martial life from large affectionate joint families. Poverty or status no consideration. No form of dowry expected. Box No. 11578

* கௌசிக கோத்திரம், தென்கலை ஐயங்கார், பூசம், 36, ரூ. 2500/- வருமானம் உள்ள வரனுக்கு வேலைக்குச் செல்லும் பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 11611

* Sozhia Vellalar well-to-do, beautiful, fair, slim, charming, Graduate, Post Graduate Girl (India/Abroad) for 28, 182 cms, Kettai, M.Sc., (India), M.S. (Computer Science) U.S.A., Associate Consultant/Software Engineer (U.S.A.) Reply horoscope. Box No. 11617

* Computer Tutor, 30, 165 cms, 70 kg, Rs. 2000/- Private, kind, honest, gone ups-and-downs, hard worker, determined individual, self-educate, responsible, fronthead bald, spectacle 2.5, medium complexion, medically test-fit, Tamil, Hindu, Chettiar, Middle class. Require affectionate, educated, enthusiastic, intuitive, reliable, mature, humorous, good-natured woman. Medicals/paramedicals or homely preferable. Widow or divorcee, encumbrances no bar if legally, emotionally stable & self-disciplined. Religion no bar. Marriage around June, 1995. Kindly, reply clearly in Tamil or English about your attitudes, desires, habits, abilities and personal, family & social life. Box No. 11618

* சௌராஷ்டிரா, வௌத்கல்ய கோத்திரம், 5'.7", நல்ல நிறம், 37, சொந்த டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட் நடத்தும், தரமான குடும்பத்தைச் சேர்ந்த பட்டதாரி மணமகனுக்கு, அதே குலம், 30 வயது, அழகான நல்ல தோற்றமுடைய பட்டதாரி மணமகள் தேவை. ஜாதகம், விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11620

* Vadakalai, Vadhoola propertied widower with partial vision and no encumbrance. Avittam, 42, Rs. 6000/- seeks alliances. Kalai no bar. Box No. 11621

* Sourashtra, good looking Boy, Doctor, M.B.B.S., D.A., and doing M.D. Anasthesia, 27, 170 cms, Rs. 6500/- well educated family seeks alliance from M.B.B.S., professional degree, employed, fair Bride. Reply with horoscope. Box No. 11622

* Proposals for Madhwa Desistha Graduate Groom, 38 years, Srivatsa, Chithirai, Angaraga Dosham, 8th House, Private employed, decent salary from Employed Graduate Girls of same community. Subsects no bar. Computerised horoscope essential. Box No. 11623

* Alliance invited from good looking, domestically trained, Hindi knowing Girl for north based Koundinya Gothram good looking with good health employed Boy of 34 years earning Rs. 3,000/- per month. Horoscope optional. Simple marriage. Box No. 11624

* இந்து வள்ளுவர் இனம், வயது 39, தகுதி பி.காம். படித்த ஏற்கெனவே திருமணமாகி ஏழு ஆண்டுகளாகப் பிரிந்து வாழும் மணமகனுக்கு, குடும்பப்பாங்கான படித்த மணமகள் தேவை. இந்து எந்த இனமும் சம்மதம். சொந்த வீடு, சொந்த விவசாயம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11625

* Vadama, Vadhoolam, Utthiram, height 6 feet, 30 years, Graduate, Steno Quasi-Govt. at Anand Gujarat Rs. 4000/- fair complexion, well settled seeks accomodative Graduate Girl. Reply with horoscope and family details. Box No. 11626

* Vadama Parasara Sathayam, Professionally qualified P.G. Sugar Tech. fair, well employed Officer reputed group 29, 175 cms, Rs. 5,000/- seeks alliance from good looking, fair, slim Girl, M.Sc. (Maths) B.Ed., employed, unemployed. Reply with horoscope and family details to Box No. 11627

* சைவ வேளாளர், இந்து, 31, 3500/- பி.எஸ்ஸி., பிஜிடிபிஏ, சிஸ்டம்ஸ் அனலிஸ்ட், தனியார் நிறுவனம், கோவையில் பணி புரியும் மணமகனுக்கு பட்டதாரி, வேலையில் உள்ள இல்லாத இதே இன மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ள வும். பெட்டி எண் : 11628

* சேனைத் தலைவர் வயது 29, மிருகசீரிஷம் நட்சத்திரம், M.E. (Electrical & Electronics) படித்து தனியார் பொறியியல் கல்லூரியில் Lecturer ஆக வேலை பார்க்கும் மணமகனுக்கு அழகும் குணமும் உள்ள குடும்பப்பாங்கான டாக்டர், இன்ஜினி யர் பட்டதாரி மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள் ளவும். பெட்டி எண் : 11630

* Vadamal, Koundinya, Thiruvadhirai Bank, Cashier, Rs. 6000/- 5'.6" 33, Boy. Requires Girls employed in Bank/ LIC/Central Govt. horoscope matching optional. Subsect acceptable. Employed in Trichy. Transferable to Trichy preferred. Box No. 11631

* 41 வயது, 162 செ.மீ., ரூ. 4500/- பேரி செட்டியார் மத்திய அரசு நிறுவனத்தில் எக்ஸிக்யூடிவ் என்ஜினியராகப் பணியாற்றும் வரனுக்கு இரண்டாம் தாரமாக விருப்பமுள்ள +2 வரை படித்த பண்புள்ள குடும்பப்பாங்கான மணமகள் தேவை. சாதி பேத மில்லை. விருப்பமுள்ளவர்கள் ஜாதகத்துடன் விண்ணப்பிக்க வும். பெட்டி எண் : 11632

* கௌண்டின்ய கோத்திரம், வடமாள், அசுவினி, வயது 40, சென்னையில் மாநில அரசில் பணிபுரியும் தட்டச்சர், வருவாய் ரூ. 2000/- சென்னையில் அரசு அல்லது கம்பெனியில் பணிபுரி யும் மணமகளுக்கு முன்னுரிமை அளிக்கப்படும். உட்பிரிவு சம்ம தம். பெட்டி எண் : 11633

* Tall handsome Iyer Tanjore Vathima, Bharadwaja, Utthirattadhi, 29, 188 cms, DME, Rs. 7500/- Junior Engineer, Karnataka Power Corporation. Studying MBA. Invites alliance from employed (career oriented) Girls in or transferable to Bangalore. Subsect no bar. Box No. 11636

* கன்னட மாத்வ காசியப கோத்திரம், அஸ்வினி, 32, 165 செ.மீ., ரூ. 2500/- எம்.காம். தனியார் கம்பெனியில் சேல்ஸ் எக்ஸிக்யூடி வாகப் பணிபுரியும் மணமகனுக்கு அரசு, தனியார் பணியிலுள்ள படித்த அழகான குடும்பப்பாங்கான 29 வயதுக்குட்பட்ட சென் னையிலுள்ள மணமகள் தேவை. ஜாதகம் விவரங்களுடன் விண் ணப்பிக்கவும். பெட்டி எண் : 11637

* வாத்திமாள், ஸ்வாதி, [illegible], 37, 5'.5" ரூ. 4000/- எஸ்.எஸ்.எல்.சி., தேர்ந்தவர். சென்னை துறைமுகத்தில் பணி புரியும் அசிஸ்டெண்ட் டெக்னீஷியன் மணமகனுக்கு +2 படித் துள்ள 30 வயதிற்குள் வடமாள், வாத்திமாள், வேலையிலுள்ள

வேலையில்லாத நல்ல குணமுள்ள பெண் தேவை. பெட்டி எண் : 11638

❋ சைவ வேளாளர், 29, 174 செ.மீ., விசாகம் 4 ஆம் பாதம், எம்.காம்., எம். ஃபில்., கல்லூரியில் விரிவுரையாளர் வேலை பார்க்கும் மணமகளுக்கு வேலையில் உள்ள மணமகன் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண் : 11639

❋ சௌராஷ்டிரா அகஸ்திய கோத்திரம், சித்திரை நட்சத்திரம், புண்ணிய ஜாதகம், உயரம் 5'.9'', சம்பளம் ரூ. 8,000/- வயது 32, கோவையில் தனியார் கம்பெனியில் வேலையிலுள்ள மதுரையைச் சேர்ந்த பி.காம் படித்த மணமகனுக்கு அதே இனத்தில் டிகிரி படித்த வேலையிலுள்ள, அல்லாத நல்ல உயரமுடைய, வயது 27க்குள் உள்ள மதுரையைச் சேர்ந்த அழகிய மணமகள் தேவை. ஜாதகத்துடனும் மற்ற விவரங்களுடனும் தொடர்பு கொள்ள பெட்டி எண் : 11640

❋ ஐயர், வடமாள், ஸ்ரீவத்ஸம், பூரம், 34, 5'.8'', நல்ல சிவப்பான பர்ஸனாலிடி உள்ள அண்டர் கிராஜுவேட், டிப்ளமா இன் ஹோட்டல் மேனேஜ்மெண்ட், மஸ்கட்டில் வேலையிலிருக்கும் மாதம் ரூ. 12,000/- சம்பாதிக்கும் பையனுக்கு தகுதியான பெண் தேவை. ஜாதகம், குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 11641

❋ நாட்டுக்கோட்டை செட்டியார் 38 வயது படிப்பு எம்.எஸ்ஸி., சொந்தத் தொழில் மூலம் மாத வருமானம் ரூ. 2000 உள்ள மாநிறமான மணமகனுக்கு மணமகள் தேவை. குழந்தைகள் இல்லாத இளம் விதவைகள் சரியான காரணங்களால் விவாகரத்தானோரும் விண்ணப்பிக்கலாம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ள வேண்டிய பெட்டி எண் : 11643

❋ Alliance invited with horoscope from parents of Graduate, good looking, muscially talented and domestically trained Girls for Ashtasahasram, Pooradam 26, 170 cms, Rs. 4500/- DECE (AMIETE) Multi-national company at Bangalore. Subsects acceptable. Box No. 11644

❋ Wanted suitable city employed or transferable preferably Government Service Sozhia Vellala Pillai Girl for a propertied Post-Graduate Boy 37, 170 cms, Rs. 2000/- working as Floor Supervisor in a city Export Garment House. Reply with horoscope and family details to Box No. 11645

❋ தெலுங்கு, வெல்நாடு, ஸ்ரீவத்ஸ, டெக்னாலஜிஸ்ட், 24, 169 செ.மீ., ரூ. 7000/- பெங்களூரில் பெரிய தனியார் கம்பெனியில் வேலையும் வெகுநல்ல குண பழக்கத்துடனும் தோற்றத்துடனும் சொந்தத்தில் வீடும், ஒரே பிள்ளையுமாகிய வரனுக்கு நல்ல குடும்பப்பாங்கான குணம், நிறம், படித்த மணமகள் தேவை. பெட்டி எண் : 11646

❋ Matching alliance for Vanniyakula Kshathriya, 29, 180 cms, MBBS, DMRD, Rs. 20,000/-. Star Moolam - no dosham. Good clean habits. MBBS alliance preferred. Similar castes acceptable. Full details at first instance. Box No. 11647

❋ ஐயர், திருவோணம் நட்சத்திரம், பிரஹசரணம், கௌதம கோத்திரம், படிப்பு எஸ்.எஸ்.எல்.சி., சுயதொழில் ரூ. 3,000/- (தாராளமுத்தவர்) உயரம் 5'.2'', வயது 35, படித்த மாநிறமுள்ள வரன் (பெண்) தேவை. இளம் விதவைகள் விவாகரத்து ஆனவர்கள் விண்ணப்பிக்கலாம். ஐயர், ஐயங்கார், சைவப் பிரிவினர் சம்மதம். உடன் திருமணம். பெட்டி எண் : 11648

❋ Fair Madhwa Desistha Boy, HSC, 29, 167 cms, Rs. 6000/-, Srivatsa Gothram Pooradam Star, Computer knowledge working in a Tamil Venture Company in Pune seeks suitable Bride. Apply with horoscope. Box No. 11649

❋ செட்டியார் எஸ்.எஸ்.எல்.சி., தொழில் தெரிந்த சொந்த நிறுவனத்தில் தயாரிக்கும் ரெடிமேட் உடைகள் விநியோகம் செய்து நல்ல வருமானத்தைச் சம்பாதிக்கும் வயது 30, உயரம் 5'.4'', சொந்த வீடு உள்ள எந்தக் கெட்ட பழக்கமும் இல்லாத அழகுள்ள வரனுக்கு நல்ல குடும்பத்தைச் சேர்ந்த 26 வயதுக்குள் அழகுள்ள மணமகள் தேவை. ஜாதி தடை இல்லை. முழு விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11650

❋ ஸ்மார்த்த ஐயர், ஹரித கோத்திரம், 38 வயது, 5'.5'' புனர்பூசம் 3 ஆம் பாதம், சேலத்தில் தனியார் துறையில் பணிபுரியும் பையனுக்கு வேலையில் உள்ள, இல்லாத குடும்பப்பாங்கான பெண் தேவை. பெட்டி எண் : 11651

❋ Visagam, bachelor, Computer Engineer (USA), 31, 168 cms seeks alliance from Doctor, Engineer, good looking, Girl, Staying Planning to go to U.S.A. Box No. 11652

❋ Alliance invited from religious, good natured and domestically trained Girls (employed or unemployed) for Bharadwaja Vadamal Iyer Boys, 47, Thiruvonam (teacher), 43, Anusham, (Jr. Asst. in a Ltd concern.) Send horoscope. Box No. 11653

❋ பிரஹசரணம், சக்ருதி கோத்திரம், அவிட்டம், செவ்வாய் தோஷம், நல்ல நிறம், கோவை தனியார் நிறுவனத்தில் ஆபீசர் 39, 163 செ.மீ., ரூ. 2500/- வரனுக்கு கோவை, சுற்றுப்புறத்தில் வேலைக்குப் போகும் படித்து வேலையற்ற பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11654

❋ Wanted very fair, good looking Graduate employed & unemployed Girl decent family, Thenkalai Athreya Magam, age 30 years, 176 cms, Rs. 15,000/- Sole Prop. in Leading Advertising Concern. Box No. 11655

❋ Graduate employed Girl below 27 years for Brahacharanam, Bharadwajam, Pooram, B.Sc., DPRI, 32, 170 cms, Rs. 4500/-. Public Sector undertaking (Madras). Reply with horoscope to Box No. 11656

❋ பிரஹசரணம், காசியப கோத்திரம், சித்திரை, 27 வயது, 5'.4'' எம். காம்., பெங்களூர் டி.வி.எஸ். கம்பெனியில் ஸ்டெனோ கிராபர், மாத வருமானம் ரூ. 3500/- வரனுக்கு பெங்களூருக்கு மாற்றல் ஆகக் கூடிய வேலை பார்க்கும் பட்டதாரிப் பெண் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண் : 11657

❋ ஐயர், பிரஹசரணம், கௌசிகம், கேட்டை, 27, 160 செ.மீ., ரூ. 3800/-, சொந்த பிளாட், பம்பாயில் சென்ட்ரல் எக்சைஸில் பணிபுரியும் வரனுக்கு எல்.ஐ.சி., யு.டி.ஐ., அரசாங்கம், ரயில்வே அல்லது நல்ல தனியார் துறையில் பணிபுரியும் பம்பாய் மணப்பெண் தேவை. ஜாதகம், குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11658

❋ Hyderabad based Vadakalai Iyengar Boy, 28, 5'.6'', Rs. 6,000/- M.Tech., Lecturer in Engineering College invites alliance from well educated employed Tamil Non-Kashyapa Iyengar Girls apply with horoscope Box No. 11659

❋ ஐயர், வடமாள், ஆத்ரேய, ஹஸ்தம், வயது 30, உயரம் 5'.5'' சம்பளம் ரூ. 3,250/-, பி. ஏ. படித்த MAC Group Ltd கம்பெனியில் நல்ல வேலையில் உள்ள அழகான பையனுக்கு, அழகான, படித்த நல்ல வேலையில் உள்ள மணமகள் தேவை. பெட்டி எண் : 11660

❋ Wanted unemployed fair, Vegetarian Bride for tall, handsome fair, 33, Rs. 6000/-, Branch Manager in Private Sector, Bangalore of Brahmin Mudaliar parentage teetotaler, religious vegetarian brought up in Brahmin customs divorcee with no encumbrances to Box No. 11661

❋ 30, 165 cms, Rs. 10,000/- M.C.A., Tamil Iyer, Srivatsa, Thiruvathirai, Vadamal Boy seeks alliance only from Computer professionals in Bombay. Apply to Box No. 11662

❋ Alliance invited from beautiful, Tamil, Non-Koundinya, Keralite Iyer Girls for Vadama, Aswathi, Railway Officer, SSLC, 33, 175 cms, salary Rs. 4,500/- p.m. Boy. Subsect no bar. Box No. 11663

❋ வன்னியர், 27, 165 செ.மீ., M.B.B.S.(DCH), Rs. 6000/- ரேஷினி, தனியார் மருத்துவமனை, தெய்வபக்தியுள்ள, நல்ல நிலையிலுள்ள அழகான மணமகனுக்கு இதே இன அல்லது கவுண்டர் இன BDS/MBBS/MD/MS மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். சுய விவரங்களுடன் ஜாதகம் அனுப்பவும். பெட்டி எண் : 11664

❋ AP Telugu Vishwabrahmin Boy Mech. Engineer REC Trichy, 27, 168 cms, Rs. 8000/- working in Reliance Surat, Company accomodation, seeks alliance from fair, homely

Telugu and English speaking Girls 21-23 years. Box No. 11665

❋ Brahacharanam, Brahmin Boy 28, 170 cms, DTT, DCP/ fair, Chitirai, Kasyapa running software consultancy seeks Bride preferred with knowledge in computer from decent family. Subsect no bar. Box No. 11666

❋ விரிவுரையாளர், ரூ. 5000/-, வயது 35, திருவோணம், வேளாளர், மனைவியைப் பிரிந்தவர். நல்ல குடும்பப்பாங்கான எந்த வகுப்பினரும் சம்மதம். அழகிய, குணம் வாய்ந்த படித்த பெண்கள் தொடர்பு கொள்ளவும். சேலம், பெரியார், கோவை மாவட்டத்தினருக்கு முன்னுரிமை வழங்கப்படும். பெட்டி எண் : 11667

❋ Vishwamithra Gothram, Thiruvathirai, Vadama, Tamil Iyer, 30, 180 cms, Rs. 5000-6000/-, Matriculate Diploma in Air-conditioning. In business having two shops in Bombay seeks broad-minded fair, tall Girls apply with horoscope to Box No. 11668

❋ Bombay based Tamil Iyer Vadama System Support Executive Saudi Arabia for eleven years 35, 185 cms, divorcee, previous marriage lasted fifteen days only Vishwamithra Gothram, Pooradam Matriculate Diploma in Computers seeks broad-minded fair, tall Girls apply with horoscope to Box 11669

❋ Alliance invited from non-Kousika Graduate Girls for Brahacharanam LIC D.O. Hastham, 32, 167 cms. Subsects no bar. Employed preferred but not essential. Reply with horoscope to Box No. 11670

❋ Alliance invited from fair, good looking Graduate Girl below 23 years for 24 manai Telugu Chettiar Boy Kulam. Makkadiar Doctor working in U.K. Reply with horoscope and biodata. Reply to Box No. 11671

❋ Palghat Iyer Vadamal Kausikam, Revathi, 1953, 170 cms, employed in T.N. Govt. Rs. 2800/- only son seeks alliance slim, fair, good looking, employed/unemployed Girl. Early marriage. Reply to Box No. 11672

❋ ஐயர், வடமாள், ஸ்ரீவத்ஸ கோத்திரம், மகம் நட்சத்திரம், 34 வயது, 170 செ.மீ., மாத சம்பளம் ரூ. 3500/- பிரபல தனியார் கம்பெனியில் வேலை பார்க்கும் வரனுக்கு படித்த, வேலையில் உள்ள (அ) வேலையில் இல்லாத நல்ல குடும்பப்பாங்கான பெண் தேவை. வரனுக்கு வலது கையில் போலியோவினால் சிறிது ஊனம். ஜாதகம், குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11673

❋ வடமாள், பாரத்வாஜம், மகம், சொந்தத் தொழில், ரூ. 1500/- மாத சம்பளம், சமூகநல ஆர்வம், மனைவியை இழந்தவர், 35 வயது, குழந்தைகளற்றவர், எஸ்.எஸ்.எல்.சி., 30 வயதுக்குட்பட்ட புத்திசாலித்தனமுள்ள ஏழைப்பெண் அல்லது விவாகரத்தான, விதவை (குழந்தைகளற்ற) பிராமணரில் எப்பிரிவினரும் சம்மதம். மிக எளிமையான திருமணம். பெட்டி எண் : 11674

❋ பிராமின், பாரத்வாஜ கோத்திரம், பூசம், மருத்துவ விற்பனைப் பிரதிநிதி ரூ. 3500/-, 29/82, பி.எஸ்ஸி., மத்திய மாநில அரசு, ஆசிரியை பணி மற்றும் சார்பு நிறுவனங்களில் உள்ள மணமகள் மதுரை அல்லது மதுரை மாவட்டத்தைச் சேர்ந்தவர் தேவை. பிராமின் கலப்புகளும் சம்மதம். ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண் : 11675

❋ வடமாள், நைத்ருப காசியப கோத்திரம், விசாக நட்சத்திரம், 5".5" உயரம், 28 வயது, பி.காம்., தனியார் பப்ளிக் லிமிடெட் கம்பெனி சென்னையில் ரூ. 3000/- சம்பாதிக்கும் வரனுக்கு 23-25 வயதில் பட்டப்படிப்பு படித்த பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண் : 11676

❋ Wanted alliance for Vadama Naithruba Kashyapa (Star Moolam), Boy 38, 160 cms, Rs. 1500/- employed Girls decent families. Apply to Box No. 11677

❋ ஐயர், அஷ்டசஹஸ்ரம், காசியப கோத்திரம், பூரம், வயது 30, உயரம் 160 செ.மீ., பி.ஏ., தனியார் நிறுவனம் கோவையில் பணியாற்றும் அழகான வசதியுடைய வரனுக்கு, அழகான

